# கொங்கு நாட்டுக் கோயில்கள்

சிவகலை பு. சுப்பையா



தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்
சென்னை-8.

# பதிப்புரை

தமிழ் எழுத்தாளர்களின் நன்மைக்காக எழுத்தாளர்களின் சொந்த முயற்சியால் எழுத்தாளர்களே நடத்திவருவது தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம். தமிழ்நாடு முழுதும் பரவி நிற்கும் தலைசிறந்த எழுத்தாளர் பலரைத் தனது உறுப்பினராகக் கொண்டுள்ள இச்சங்கம், இதுவரை முப்பத்தொன்பது நூல்களை வெளியிட்டுள்ளது. இது நாற்பதாவது நூல்.

தமிழ் உறவு என்ற அழகிய சுருக்கமான பெயரைப்பெற்ற இக்கூட்டுறவுச் சங்கத்தின் வெளியீடுகளைப் பல நிறுவனங்களும் தமிழ் மக்களும் ஆதரித்து நலம் செய்வதால் மேலும் மேலும் பல நூல்களை வெளியிடவேண்டும் என்ற ஊக்கம் எங்களுக்குப் பெருகியிருக்கிறது. நல்ல புத்தகம், பயனுள்ள நூல் என்று யாவரும் பாராட்டும் சிறப்பைத் தமிழ் உறவு நூல்கள் பெறவேண்டும் என்பது எங்கள் அவா.

இந்தச் சங்கம் பெரிய வெளியீட்டு நிலையங்களைப் போல விளம்பரம், பிரசாரம் முதலிய துறைகளில் பணம் செலவழித்து விற்பனையை மிகுதிப்படுத்திக் கொள்ளும் நிலையில் இல்லை. எழுத்தாளர்களிடையே கூட்டுறவு, அவர்களுடைய தன்னம்பிக்கை மிக்க முயற்சி, தரமான நூல்கள் ஆகிய மூன்றையே எங்கள் தகுதியாகக் கொண்டு தமிழ் உறவு நூல்களை வெளியிட்டு வருகிறோம். மக்களின் ஆதரவு பெருகப் பெருக அதன் முயற்சிகள் விரிந்து, பரந்து, யாவருக்கும் நலந்தரும் என்பதில் ஐயம் இல்லை.

புறப்பொருள் தேட்டத்தில் மக்கள் தீவிரமாகக் கவனம் செலுத்திவரும் காலம் இது. பணம் பண்ணத் தெரிந்தவர்களே வளத்தோடும் செல்வாக்கோடும் வாழக்கூடிய காலம். எண் என்ற ஒரு கண்ணால் மட்டும் நாட்டைப்பார்த்தால் போதாது. எழுத்து என்ற மற்றோர் கண்ணும் உண்டு. உடலுக்கு உள்ளேயும் ஒரு மனிதன் இருக்கின்றான். அவனு

டைய வளர்ச்சிக்காக அவனுக்கே தெரியாமல் உழைத்துவரும் மிகச் சிறு கூட்டம் எழுத்தாளர் கூட்டம். பிறருக்காகவே சிந்தித்து, இலக்கியத்தை வளர்த்து, வாழும் இந்தச் சொல்லேர் உழவர்களின் வாழ்க்கையை வளமாக்குவது தங்கள் கடமை என்பதை மக்கள் என்றும் நினைவிலிருத்திக் கொள்வது அவசியம்; அவசரமானதுங்கூட. எழுத்தாளர்களுடைய நூல்களை வாங்கிப் படிப்பதன் மூலம் இந்தக் கடமையை மக்கள் நிறைவேற்ற முடியும்.

இந்தக் கருத்தைச் செயலாக்கும் வகையில் பணியாற்றி வரும் இக்கூட்டுறவுச் சங்கம் வெளியிட்டுவரும் தமிழ் உறவு நூல்களின் ஆசிரியர்கள் தங்கள் நூல்களின் விற்பனை விலையில் 20 சதவிகிதத்துக்கு மேலாகத் தங்கள் இலாபங்களை அளித்து வருகிறார்கள். இதைக் குறைந்த பட்சம் 30 சதவிகிதமாகவாவது உயர்த்த வேண்டும் என்பது எங்கள் அவா. ஒவ்வோராண்டும் வெளிவரும் நூல்கள் ஆயிரக்கணக்கில் அந்தந்த ஆண்டிலேயே விற்றுவிட்டால் இது சாத்தியமாகும். இது நிறைவேற முடியாத பேராசையன்று. தமிழ் மக்களோடு கல்வி நிறுவனங்களும் நூல் நிலையங்களும் தமிழ் எழுத்தாளரின் இக்கூட்டுறவு முயற்சிக்குப் பேராதரவு தந்து தமிழ் உறவு நூல்களை வாங்கி ஆதரித்தால் இந்த அவா எளிதில் **நிறைவேறும்.**

எங்கள் முயற்சியை ஆதரிக்கும் யாவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னை-8.<br>11-12-1967

**தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தார்.**

# முன்னுரை

வாகீச கலாநிதி,
உயர்திரு கி. வா. ஜகந்நாதன் M. A.,
ஆசிரியர், கலைமகள். சென்னை-4.

"மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்று தாயுமானவர் பாடுகிருர். இறைவன் திருக்கோயில் கொண்ட தலங்களில் அடியார்கள் கூடுகிருர்கள். வெவ்வேறு இடங்களிலிருந்து வந்த அன்பர்களை ஒருசேரப் பார்க்க வேண்டுமாஞல் அதற்குரிய இடம் கோயில்தான். பழங்காலத்தில் இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு மனிதனும் தல யாத்திரையைத் தன்னுடைய கடமைகளில் சிறந்ததாகக் கொண்டிருந்தான். உடல் வலிமையும் பொருள் வசதியும் உள்ளவர்கள் காசி முதலிய இடங்களுக்குச் சென்று வந்தார்கள். மற்றவர்கள் தமிழ்நாட்டிலுள்ள தலங்களையாவது சென்று தரிசித்து இன்புற்ருர்கள். இதஞல் ஒவ்வொரு சிறந்த தலத்திலும் அயலூர்க்காரர்கள் எப்போதும் வந்துகொண்டே இருந்தார்கள். அப்படி வருகிறவர்களுக்கு வேண்டிய உணவை அளிக்கும் பொறுப்பைக் கோயிலில் கட்டளையாக அமைத்திருந்தார்கள். நல்லவர்களை நாடிச் சென்று அவர்களோடு நட்புச் செய்வதற்கு இந்தத் தல யாத்திரை மிகவும் பயனுடையதாக இருந்தது. தலங்களில் நல்ல அன்பர்களைக் கண்டவர்களுக்குத் தங்களுக்கேற்ற குருநாதனையும் தேர்ந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைக்கும். இதைத்தான் மேற்சொன்ன தாயுமானவர் பாடல் தொனிக்கிறது.

தல யாத்திரையிஞல் பக்தி வளர்வதோடு கூட மனமும் விரிவடைகிறது. அங்கங்கே உள்ள மக்களையும் பல்வகைக் காட்சிகளையும் கண்டு புதிய அறிவு பெறுவதற்கு அது துணை

செய்கிறது. பயணத்துக்குரிய வசதிகள் இல்லாத பழங்காலத்தில் தல யாத்திரை சிறப்பாக இருந்தது. இப்போதோ தல யாத்திரைக்கு வேண்டிய பல வசதிகள் உண்டாகியிருக்கின்றன. ஆகவே இப்போது தலயாத்திரை செய்வது மிக எளிதான காரியம்.

தமிழக அரசில் இந்து அறநிலையப் பாதுகாப்புத்துறை என்று ஒரு பகுதி இருக்கிறது. கோயில்களெல்லாம் திருத்தமாக நடைபெற வேண்டுமென்ற எண்ணத்தினால் அந்துறையினர் ஆவன செய்து வருகிறார்கள். பொது மக்களுக்கும் கோயில்களை நன்றாக வைத்திருக்க வேண்டும் என்ற உணர்ச்சி மிகுதியாகி வருகிறது.

ஒவ்வொரு தலத்துக்கும் தனி வரலாறு இருக்கிறது. தமிழ் இலக்கியத் தொகுதியில் தல புராணங்களும் தலங்களைப் பற்றிய பிரபந்தங்களும் திருமுறைப் பாடல்களும் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களும் பாதிக்கு மேற்பட்டனவாக அமைந்துள்ளன. நாயன்மார்களும் ஆழ்வார்களும் பல பல தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு அருட்பாடல்களைப் பாடினார்கள். அதனால் தலங்களின் பெருமை மிகுதியாயிற்று. அக்காலம் தொடங்கித் தலங்களைப் பற்றிய புராணங்களும் சிற்றிலக்கியங்களும் வளர்ந்து வந்தன. அந்தத் துறையில் நூற்றுக்கணக்கான நூல்கள் இப்போது இருக்கின்றன.

அன்பர் சிவகலை திரு. மு. சுப்பையா அவர்கள் தமிழ் நாட்டிலும் வடநாட்டிலும் உள்ள பல தலங்களுக்குச் சென்றவர். பாண்டி நாட்டில் பிறந்தவராகிய இவர் கொங்கு நாட்டிலுள்ள திருக்கோயில்களுக்குச் சென்று அங்குள்ள சிறப்புக்களையும் வரலாறுகளையும் ஆராய்ந்து அறிந்தவர். அந்த அந்தத் தலங்களின் சம்பந்தமான நூல்களையும் ஒருவாறு பார்த்தவர். இந்தத் தகுதியை அடிப்படையாகக் கொண்டு கொங்கு நாட்டுக் கோயில்கள் என்னும் இந்த நூலை எழுதியிருக்கிறார். கொங்குநாட்டில் ஏழு தலங்கள் தேவாரப் பாடல்

பெற்றவை. அவற்றையன்றி அருணகிரிநாதரால் பாடப் பெற்ற முருகன் சந்நிதிகளையுடைய தலங்களும் உண்டு. இவற்றையன்றி மக்கள் திரளாகக்கூடி வழிபடுகின்ற வேறு தலங்களும் இருக்கின்றன. இவற்றில் முக்கியமானவற்றைப் பற்றி ஆராய்ந்து இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார். அந்த அந்தத் தலத்தில் உள்ள மூர்த்தி விசேஷங்கள், தீர்த்தங்கள், தலவிருட்சம், அத்தலத்தைப்பற்றிய நூல்கள், சிறப்புச் சிறப்புக்கள், கர்ண பரம்பரையாக வழங்கும் செய்திகள் முதலியவற்றை எழுதியிருக்கிறார். முருகனுடைய தலங்கள், சிவபெருமான் தலங்கள், திருமால் எழுந்தருளியிருக்கும் தலங்கள் ஆகிய பலவகைத் தலங்களையும் பற்றி எழுதியிருப்பது பாராட்டத்தக்கது. இவ்வாறே எழுத்தாளர்கள் தம்தம் பகுதிகளில் உள்ள தலங்களைப் பற்றி ஆராய்ந்து எழுதும் முயற்சியை அங்கங்கேயுள்ள அன்பர்கள் எழுத்தாளர் மேற் கொண்டால் தமிழ்நாட்டுத் தலங்கள் எல்லாவற்றையும்பற்றிய விரிவான வரலாறுகள் நமக்குக் கிடைக்கும். அன்பர் சிவகளை மு. சுப்பையா அவர்கள் எழுதியிருக்கும் இந்த நூல் அப்படிச் செய்வதற்கு ஒரு தூண்டுகோலாக இருக்கும் என்று நம்புகிறேன்.

இந்த நூலில் அங்கங்கே படங்களையும் அமைத்திருக்கிறார் இதன் ஆசிரியர். பொதுவாகக் கொங்குநாட்டுத் தலங்களைத் தரிசிக்கும் ஆவலுள்ளவர்களுக்கு இந்தப் புத்தகம் நல்ல துணை நூலாக உதவும் என்று நம்புகிறேன். தமிழ் மக்கள் இந்த நூலை வாங்கிப் படித்து இந்நூலாசிரியருக்கு 'இதைப்போன்ற நூல்களை எழுத ஊக்கமூட்ட வேண்டுமென்று விரும்புகிறேன்.

**கி. வா. ஜகந்நாதன்**
தலைவர்.

தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்
சென்னை.

# காணிக்கை



**திரு. நா. முத்தையா பிள்ளை**
*(நூலாசிரியரின் தந்தையார்)*

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே; சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே." (புறம் 312) என்ற புலவர் பொன்முடியார் வாக்குப்படி, ஈன்று புறந்தந்து இறைவனடி சேர்ந்தாள் என் அம்மை. கடமை முடிந்த நான்காண்டில் கண் மூடிய அப்பெண் தெய்வத்தின் கனவை நனவாக்க எந்தையார் செய்த தியாகங்கள் எண்ணிலாதவை. நடமாடும் கோயிலான அவருக்கு நன்றியுடன் "கொங்கு நாட்டுக் கோயில்கள்" என்ற இப் புத்தகத்தைக் காணிக்கையாக்குவதைத் தவிர வேறென்ன கைம்மாறு செய்ய இயலும்?

அகிலன்

அகில இந்திய ரேடியோ
சென்னை-4

# சிறப்புரை

இறைவனிடம் பக்திகொண்ட நம் நாட்டு மக்கள் கோயில்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு வருவதை நெடுங்காலப் பழக்கமாகவே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பழக்கம் ஆயிரம் ஆண்டுகளுக்கும் முன்பிருந்தே கன்னியாகுமரி முதல் இமயம் வரையிலும் பரவி வந்திருக்கிறது. மேலும் இந்த நாட்டு மக்களிடையே அது ஓர் அடிப்படை ஒருமைப்பாட்டையும் வளர்ந்தோங்கச் செய்திருக்கிறது. இராமேசுவரத்திலிருந்தவர்கள் காசிக்கும் கைலாயத்துக்கும் சென்றிருக்கிறார்கள்; அவ்வாறே காசியிலிருந்தும் அதற்கு அப்பாலிருந்தும் தெற்கில் இராமேசுவரத்துக்கு வந்திருக்கிறார்கள். இன்று வரையிலும் அந்தப் பழக்கம் வளர்ந்து வருகிறதே தவிரக் குறையவில்லை.

இவ்வளவுக்கும் காரணமாகத் திருக்கோயில்களே விளங்கியிருக்கின்றன; விளங்கியும் வருகின்றன. 'இறைவன் ஒருவனே' என்ற நம்பிக்கை கொண்டவர்களுக்குக் கூட அவனைப் பல்வேறு பெயர்களில் உருவங்களில், திருத்தலங்களில் கண்டு பரவசமடைவதில் ஓர் ஆனந்தம். ஆகவேதான் 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற வாக்கை மெய்யாக்குவதேபோல் ஊர்கள்தோறும் நம் நாட்டில் கோயில்கள் இருக்கின்றன.

கோயில்கள் இறைவனின் திருத்தலங்களாக விளங்குவதோடு, சிற்பக்கூடங்களாகவும் சித்திரசாலைகளாகவும் ஆடல்—பாடல் அரங்குகளாகவும் திகழ்கின்றன. இந்த நாட்டு வரலாற்றுச் சான்றுகள் நமக்குப் பெரும்பாலும் கோயில் கல்வெட்டுகளே வழங்குகின்றன. சுருக்கமாகக் கூறினால் நமது பண்பாடு, கலை, நாகரிகம், வரலாறு இவற்றின் களஞ்சியங்களாகவே கோயில்கள் இலங்குகின்றன என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இந்த நூலில் கொங்குநாட்டுக் கோயில்களைப்பற்றிய பல தகவல்களை நமக்குச் சுவையோடு தொகுத்தளித்திருக்கிறார் இதன் ஆசிரியர் திரு. சிவகனை சுப்பையா. கோயில்களைப்பற்றிய புராணக் கதைகள், பக்தி இலக்கியங்கள், வரலாற்றுச் செய்திகள் முதலியவற்றையும் அங்கங்கே சொல்லிக்கொண்டு நம்மை அவரோடு தலங்களுக்குக் கூட்டிச் செல்கிறார்.

ஒவ்வொரு கோயிலுக்கும் ஆசிரியர் நம்மை நேரில் அழைத்துக்கொண்டுபோய்ச் சுற்றிக் காட்டினுல் எப்படி யிருக்குமோ அப்படி யிருக்கிறது இந்த நூலைப் படிக்கும் அனுபவம். கோவையை மையமாகக்கொண்டு அவரோடு நாம் நம்முடைய யாத்திரையைத் தொடங்குகிரும். செலவும் இல்லாமல் சிரமமும் இல்லாமல் அந்தந்த ஊர்களுக்குச்சென்று கோயில்களைக் கண்டு களித்து விடுகிரும். நேரில் சென்ருலும் நம்மில் பலர் தலபுராணங்களையோ வரலாற்றையோ சரியாக அறிய முடிவதில்லை. சிற்பங்கள் சிலைகளின் அழகைச் சுவைக்க நாம் சில சமயங்களில் மறந்து விடுகிரும். அந்தந்த கோயிலுக்குரிய தனிச் சிறப்புக்களைக் கேட்டறியவும் நமக்கு நேரமிருப்பதில்லை. இவையெல்லாவற்றையும் தவிர்க்க நமக்கு இது சிறந்த வழி காட்டியாகவும் இருக்கிறது.

ஆசிரியரோடு நாம் இந்த நூலுக்குள் யாத்திரையைத் தொடங்கிவிட்டால் நமக்குத் தேவையான விவரங்கள் பல எளிதாகத் தெரிந்து விடுகின்றன. நேரில் இந்த நூலில் உள்ள கோயில்களை முன்பே கண்டு வந்தவர்களுக்கும் இதைப் படிப்பதனுல் பயன் உண்டு; பார்க்காதவர்களையும் இது நேரில் சென்று பார்க்கும்படி தூண்டுகிறது.

கோயிலில் பெரிதென்ருே சிறிதென்ருே ஆசிரியர் பாகுபாடு செய்யவில்லை. தாம் நேரில் சென்று கண்டும் கேட்டும் உணர்ந்தும் அறிந்த விவரங்களை நமக்குப் பக்திச் சுவையோடு தருகிருர். தஞ்சை மாவட்டத்தைப்போல் கோயில்கள் நிறைந்த மாவட்டமன்று கோவை. என்ருலும் கொங்குநாட்டுக் கோயில்கள் அந்த மண்ணின் தனித்தன்மையைப் புலப்படுத்தக் கூடியவையாக இருக்கின்றன. சிற்பச் செல்வங்கள் நிறைந்த பேரூர்ப் பெருங்கோயில் முதல் சிற்றூர்களின் சிறுகோயில்கள் வரையிலும் நமக்கு இந்த நூலால் அறிமுகமாகின்றன.

ஆசிரியர் இளைஞர்; இந்தத் துறையில் இவருடைய ஆர்வம் நிறைந்திருப்பது வரவேற்கத் தக்கது. எளிமையோடும் இனிமையோடும் எழுதியிருக்கிருர். நூலில் அங்கங்கே படங்களும் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. படித்துப் பயன் பெறுவார்கள் என்று நம்புகிறேன். ஆசிரியரின் முயற்சி வெற்றி பெற்று அவருடைய ஆர்வமும் திறனும் மென்மேலும் வளர என் வாழ்த்துக்கள்.

21-12-67
சென்னை-14.

அகிலன்.
நெறியாளர், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், சென்னை.

தெய்வமே துணை

திரு. செ. முருகதாச ஐயா
கௌமார மடாலயம்
திருவாமாத்தூர்,
விழுப்புரம்.

தங்கல்
வண்ணச்சரபம். அருள்மிகு
தண்டபாணி சுவாமிகள் மடம்
அடிவாரம் பழனி.

# சிறப்புக்கவி

## வெண்பா

பாண்டிச் சிவகளையூர்ப் பாவலவன் சுப்பையா
ஈண்டியபே ரன்புள்ளத் தேற்றமிக்கான்—ஏண்டிகழும்
கொங்குநாட் டுள்ளதிருக் கோயில் களின்சிறப்பை
அங்குசென்று கண்டுமகிழ்ந் தான்.

தான்கண்ட இன்பம் தனைப்பிறரும் கண்டுவக்க
மான்கண்ட கைச்சிவன்வேள் மாயன்முதல்—வான்கண்ட
கோயிலெழில் செல்லுநெறி கூடுபுகழ் ஆதியன
தோயிதைத்தந் தான்பெரிய தொண்டு.

தூயதமிழ்த் தொண்டு தெய்வத் தொண்டு மக்கட் கான
தொண்டு
தோயச் சிவகளையூர்ச் சுப்பையனார்—சேய
வரலாறும் நூலிதனை மாணுறத்தந் தார் நாம்
தரலாவ தன்போன்றே தான்.

அச்சிட்டோர் இங்கிதனை ஆர்வ முடன்படித்தோர்
நச்சி எழிற்கொங்கு நாடுசென்று—மெச்சினிமைக்
கோயிலடைந் தன்பினொடு கும்பிடுவோர் நூல்வரைந்தோர்
சேயஇன்பாய் வாழ்க சிறந்து.

திரு. செ. முருகதாச ஐயா

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க

தவத்திரு
சாந்தலிங்க இராமசாமியடிகள்
மடாதிபதி. பேரூராதீனம்

சாந்தலிங்கர்
திருக்கோயில், பேரூர்
கோவை-10.

## வாழ்த்துரை

தெய்வநன் னெறியும் தொண்டால் திளைக்குநல்
லுளமும் சான்றோர்
உய்வகை கூறக் கேட்பின் உவப்புடன்
ஏற்றவ் வாறே
செய்திடும் அன்பு சேரும் சிவகளைச்
சுப்பையா தான்
மெய்நெறிக் கொங்கு நாட்டுக் கோயில்கள்
விளக்க நூலை

படிப்பவர் உளங்கொண் டன்பால் பலபல
இடமும் சென்று
அடிப்படையாகக் காணும் ஆக்கமும்
எடுத்துக் காட்டும்
வடித்திடு கிளவியாலே வகுத்தனன்
இந்நூல் நன்கு
பொடித்திரு மேனி எந்தை புகழ்பொருள்
பரப்பி வாழி!

சாந்தலிங்க இராமசாமியடிகள்.

A. S. GNANASAMBANDAN, M. A.,
Ex. Officio Secretary B.T.P.

Fort St. George
Madras-9.

நண்பர் சிவகளை. மு. சுப்பையா அவர்கள் எழுதிய 'கொங்கு நாட்டுக் கோயில்கள்' என்னும் நூலைப் பார்த்தேன். இனிய எளிய தமிழ் நடை சொல்ல வந்த கருத்திற்கு நல்லதோர் துணையாக அமைந்துள்ளது. பழனியில் தொடங்கி கொல்லிமலை வரையுள்ள தலங்களைப்பற்றி வரைந்துள்ளார் அன்பர். அவற்றுள் பாடல் பெற்றவை சில; பெறாதவை சில. சிவனுறையும் திருக்கோயில்கள் பற்றிமட்டும் எழுதவேண்டும் என்ற குறுகிய நோக்கமில்லாமல் திருமால் அமர்ந்துறையும் திருக்கோயில்கள் பற்றியும் எழுதியுள்ளார்.

ஒவ்வோர் ஊரைப்பற்றிக் கூறும் பொழுதும் அது அமைந்துள்ள இடம், அவ் வூரின் பழைய பெயர், அப் பெயர் வரக் காரணம் ஆகியவற்றை எல்லாம் நன்கு ஆராய்ந்து, தெளிந்து விளக்கமாக எழுதியுள்ளார். இத்தகைய நூல்கள் எழுதும் நவீன ஆசிரியர் யாரும் அவ்வூரின் தல புராணங்களைப் பற்றிக் குறிப்பிடுவதில்லை. காரணம் அத்தகைய புராணங்களைப் படிப்பதும் அறிவதும் அவைபற்றிக் குறிப்பதும் சற்று நாகரிகக் குறைவாகவே கருதப்பெறும் காலம் இது.

இதன் எதிராக இவ்வாசிரியர் கூடுமானவரை ஒவ்வோர் ஊரைப்பற்றிக் கூறும்போதும் அந்த ஊரின் தல புராணக் குறிப்புகளையும் தந்து செல்வது மகிழ்ச்சி அளிக்கிறது.

மருதமலையைச் சுற்றி வாழும் 'இருளர்' பற்றிக் குறிப்பிடும் பொழுது அவர்கள் பேசும் மொழி பற்றியும் குறிப்பிடுகிறார். தகப்பனார் பெயர் 'அம்மா', பாட்டனார் பெயர் 'அப்பா' என்றும் வழங்குதற்குரிய காரணத்தை ஆய்ந்தால் சுவையான சில உண்மைகள் தெரிய வரலாம்.

வரலாறுகளின் இடைஇடையே ஆசிரியர் பழைய இலக்கியங்களிலிருந்து சுவையான பாடல்களை எடுத்துக் கூறியுள்ளமை போற்றற்குரியதாகும்.

பழமையை மறந்து புதுமையை நாடி ஓடும் இக்கால உலகிற்கு இத்தகைய நூல்கள் நல்ல வழிகாட்டிகளாகும்.

அ. ச. ஞானசம்பந்தன்.

குருவே துணை

தவத்திரு சுந்தரசுவாமிகள்
கௌமார மடாலய ஆதீனகர்த்தர்

சின்னவேடம் பட்டி
கோயமுத்தூர்-6.

# ஆசியுரை

## வெண்பாக்கள்

தமிழகத்தில் சீர்த்தி தழைத்தகொங்கு நாட்டில்
அமிழ்தனைய கோயில்வர லாற்றை—இமிழ்தமுறத்
தந்தான் சிவகளையூர் சார்சுப்பை யாஅன்பன்
சந்தஉரை போற்றுதகைத் தாம்.

கொங்குநாட் டிற்பன்னுள் கோயில்வழி பாடுசெய்து
தங்கி யிருந்த தகைஅன்பன்—இங்கவற்றைச்
சேர்த்துப் பல் கட்டுரையாய்ச் செய்பாண்டிச் சுப்பையா
சீர்த்தியொடு வாழ்க சிறந்து.

கோயில் திருமடங்கள் கொங்குநாட் டுள்ளவற்றை
ஆயும் உரைநடையால் ஆக்குவித்துத்—தோயும்
புகழ்கொண்ட சுப்பையாப் புண்ணியனுர் வாழ்க!
மிகவும் நலம்பெறுக! மேல்.

அன்புள்ள,
சுந்தரசுவாமி

கவியரசு
உயர்திரு கு. நடேசகவுண்டர் P.O.L.,
முன்னாள் தலைவர்
தவத்திரு சாந்தலிங்க அடிகளார்
தமிழ்க் கல்லூரி.

84, நான்காம் தெரு
காந்திபுரம்
கோவை-12.

# மதிப்புரை

எங்கள் கொங்கு நாடு சங்கத் தமிழ் நூல்களிலும் பாராட்டப் பெற்ற பொங்கு பழம் புகழ்படைத்த நாடு. காவிரி, காஞ்சி, ஆன்பொருநை, வானி முதலிய நதிகளும், வெள்ளிமலை, பொன்மலை, கந்தமலை, கொல்லிமலை, சென்னிமலை, சிவன்மலை, பழனிமலை முதலிய புண்ணியபல மலைகளும் தேவாரம் பெற்ற சிவதலங்கள் ஏழும் சிலவைப்புத் தலங்களும் திருப்புகழ் பெற்ற மலைகளும் கோவில்களும் விளங்கும் நாடு. கொங்கு வேள், அடியார்க்கு நல்லார், பெருந்தலைச் சாத்தனார், முதலிய நல்லிசைப் புலவர்களும் அதிகமான், குமணன். நல்லதம்பிச் சர்க்கரை முதலிய வள்ளல்களும் வாழ்ந்த நாடு, இக்காலத்தும் பெருநிலக்கிழார்களும் தொழிலதிபர்களும் கலைக்கல்லூரிகளும் தொழிற் கல்லூரிகளும் திகழும் நாடு.

இந்நாட்டில் உள்ள சிவன் கோயில்கள் திருமால் கோயில்கள் குமரன் கோயில்கள் பலவற்றையும் நேரிற் சென்று கண்டும் ஆங்காங்கு வாழும் அறிஞர்களிடம் அத்தலங்களின் பெருமையைக் கேட்டறிந்தும், நூல்களைப் படித்தறிந்தும் அக்கோயில்களின் சிறப்பை எல்லாம் விளக்கிக் கொங்குநாட்டுக் கோயில்கள் என்ற பெயரால் ஒரு புத்தகம் ஆக்கி அளித்துள்ளார் நம் அரிய இனிய அன்பர் சிவகவி மு. சுப்பையா அவர்கள். கார் முதலாகக் கட்டைவண்டி ஈறான பலவகை வாகனங்களிலும் கால்நடையாகவும் சென்று சென்று கண்டும் பலரும் அறிந்து இன்புறற்குரிய செய்திகளை எல்லாம் அத்தகைய வசதிகள் பெறாதாரும் இருந்த இடத்திலிருந்தே தெரிந்து மகிழும்படியும் உதவுவது இந்நூல். சமயப்பற்றுள்ளவர்களும் சரித்திர ஆராய்ச்சியாளர்களும் இப்புத்தகத்தால் பெரும் பயன் பெறுவர். வாழ்க சிவகவி மு. சுப்பையா.

கு. நடேச கவுண்டர்

திருமதி ந. சுப்புலட்சுமி M.A. B.O.L.,
விரிவுரையாளர், நிர்மலா மகளிர் கல்லூரி
கோயமுத்தூர்.

# பாராட்டுரை

திக்கெல்லாம் புகழ் பரப்பும் திருநெல்வேலி மாவட்டத்தினர் இந் நூலாசிரியர் சிவகளை மு. சுப்பையா. அஞ்சற் பிரிப்புத் துறை (RMS)க்கும் தமிழ் எழுத்தாளர் உலகிற்கும் உள்ள உறவிற்கு அகிலனை அடுத்துச் சான்று ஆகின்றார். தாம் செல்லுமிடங்கள் தோறும் அவற்றிற்கு ஒளியாம் புகழ்ச் செய்திகளை அறிவதில் ஆர்வம் உடைய இவரது கைவண்ணத்தால் இவர் சென்ற இடங்கள் எழுத்தோவியமாக்கப்படுகின்றன. அதன் பயனாய்ப் பயண நூல்கள் பல நற்றமிழில் கிடைக்கப் பெறுகிறோம். முதற் படைப்பு "ஸ்ரீகாசி யாத்திரை விளக்கம்" என்ற கடித மலர். இரண்டாம் படைப்பு "கொங்கு நாட்டுக் கோயில்கள்" என்ற கோயில் மலர். கொங்கு நாட்டில் சிலகாலம் இருந்ததற்கு நன்றிக் கடனாக இந்நூலை ஆக்கியுள்ளார் எனக் கருதுகிறேன்.

கோவையில் இவர் வாழ்ந்த இன்ப அனுபவங்களாக நிலைத்து நிற்பது இவரது முயற்சியால் உருவாகிய கொங்கு நாட்டுக் கோயில்கள் என்ற இந்நூல். "அரிய பொருளே அவிநாசியப்பா! பாண்டி வெள்ளமே" என்றார் மாணிக்க வாசகர். அவிநாசி முதலான கொங்கு நாட்டுத் தலங்கள் பற்றிய சுவைதரும் செய்திகளைப் பாண்டி நாட்டினரான இவ்வாசிரியர் இந்நூலில் தருகிறார். சிறு சிறு வாக்கியங்கள்; ஓட்டமான நடை; விவரிக்கும் திறம்; ஒவ்வொன்றையும் ஊன்றி நோக்கும் முறை இவை தமிழ் எழுத்துலகில் ஒரு புதுமை.

"வேங்கடம் முதல் குமரிவரை", "ஆற்றங்கரையினிலே", "வாருங்கள் பார்க்கலாம்" முதலியன படித்துச் சுவைத்து வந்த தமிழ் மக்களுக்குக் கொங்குநாட்டுக் கோயில்கள் பற்றிய பல சுவைதரும் செய்திகளை அழகுற அச்சிடப் பெற்றுள்ள

இந்நூலில் தொகுத்துத் தருகிறுர், வாசகர்கள் முன்பே சென்று கண்ட இடங்களாயின் அவர்களது உள்ளத்தில் அவை புத்துருவம் பெறும். கண்டறியாதன ஆயின் செலவும், உடல் அலுப்பும் இன்றி ஆசிரியர் உடன்சென்று அநுபவித்து மானசீகமாய் வணங்கி வரலாம், கட்டுரையைப் படித்தவாறே. கோவை "நவ இந்தியா"வில் முதலில் தொடர்ந்து வெளிவந்த கட்டுரைகளைத் தொகுத்து இந்நூல் வடிவில் வெளியிட்டுள்ள தமிழ் எழுத்தாளர்கள் கூட்டுறவு சங்கம் கொங்கு நாட்டாரின் பாராட்டுக்குரியதாகும். இந்நூல் ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்கவேண்டியது தோன்றும்.

ந. சுப்புலட்சுமி

## என் கருத்து

இக் கட்டுரைகளை "நவஇந்தியா" நாளிதழில் படித்துப் பார்த்து உங்களைப் போலவே நானும் உவகை அடைந்தேன். கொங்கு நாட்டுத் தலங்கள் பலவற்றுக்கு நானும் சென்றதுண்டு, வழிபட்டதுண்டு. ஆனல் பல புதிய செய்திகளை இக்கட்டுரையைப் படித்த பின்னர் அறிந்து கிழ்கிறேன்.

வித்துவான் மு. நாராயணன்.
வள்ளியூர்.

# நண்பருரை

அருமை நண்பர் திருமிகு சிவகளை மு. சுப்பையா அவர்கள் தமிழார்வமும் தெய்வ நம்பிக்கையும் மிக வுடையவர். அவரு டன் பழகும் அரிய வாய்ப்பு, பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகள் அவர்களால் எனக்குக் கிடைத்தது எல்லோருடனும் மிகவும் அன்புடன் பழகும் நல்ல உள்ளம் கொண்டவர். திருவள்ளுவரின் திருக்குறளுக்கு ஒப்பாகத் திருமதி சண்முகத் தம்மையாருடன் இனிதாக இல் வாழ்க்கை நடாத்துபவர். இவரது கொங்கு நாட்டுக் கோயில்கள் என்னும் சிறந்த நூலை அச்சிடும் நல்ல வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இயன்றவரை என் பணியைச் செய்துள்ளேன். மெய்ப்புகளை அவ்வப்போது மிக நன்கு திருத்தியுதவிய பேராசிரியர் உயர்திரு. ர. வையாபுரியார் அவர்கட்கும் நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டவன். திரு. சுப்பையாவின் நட்பினால் எனக்குப் பல கோயில்கட்குச் சென்று வழிபடும் பேறு கிடைத்தது.

நல்ல நண்பர்களைக் காணுவது அரிதாகவுள்ள இக்காலத்தில் நட்புக்கு இவர் ஒரு நல்முத்து. திருவாளர் முத்தையா பெற்றெடுத்த நல்லமுத்து. அடுத்து, ஒரு நல்ல நூலை ஆக்குவது, அச்சிட்டு வெளியிடுவதென்பது எளிதானதன்று. எனினும் இக்காலத்தில் சிலர் எளிதாகக் கருதுவதால் ஈசல்போன்ற அளவில் நூல்கள் வெளிவருகின்றன, ஆனால் அவை ஈசல் போலவே மறைந்து விடுவதாகவே உணர்கிறேன். கொங்கு நாட்டுக் கோயில்கள் போன்ற நூல்கள் அந்த வகையைச் சேர்ந்தவை அல்ல. உயர்ந்தவை என்றும் நின்று நிலவக்கூடியவை. ஒருமுறை படித்தால் போதாது. எத்தனை முறைகளோ படிக்கவேண்டும். அத்தனை சுவை கூட்டி ஆசிரியர் எழுதியுள்ளார். மேலும் இவைகளைப் படிக்கும்போது கவியரசு அவர்களின் அருமை மகளார், சகோதரி திருமதி ந. சுப்புலட்சுமி

அவர்கள் கூறியுள்ளதுபோல் அந்தந்த ஊர்கட்குச் செல வின்றிச் சென்று, கண்டு வந்த இன்பம் முழுமையாகக் கிடைக்கும் வண்ணம் எழுதியுள்ளார். எனவே இதைப் படிப்பவர்கட்குத் தலயாத்திரை செய்து வந்த புண்ணியப் பேறும் கிடைத்து விடுகிறது. எந்த ஊருக்குச் சென்றாலும் ஆங்குள்ள கோயில்கட்குச் சென்று இயன்றவரை புகைப் படம் எடுத்து, கோயிலின் சிறப்புக்களைக் கேட்டறிந்து வருவார் நண்பர் சுப்பையா. இஃது இவருக்கு இயல்பாக அமைந்த சிறப்பாகும். கோவையிற் சிலவாண்டுகள் இருந்தமைக்கு நன்றிக் கடனாக இந்நூலை ஆக்கியுள்ளார் என்று சகோதரி யார் ந. சுப்புலட்சுமி அம்மையார் எழுதி இருப்பதைப் பார்த் தேன். ஆனால் இந்நூலை வெளியிட்டமைக்கு கோவையும், அதைச் சார்ந்த ஊர்மக்களுந்தான் என்றென்றும் நன்றிக் கடன் செலுத்த வேண்டியவர்களாகிறார்கள். எனவே இவ்வருமை யான நூலைத் தமிழ் மக்கள் வாங்கிப் பயனடைவார்கள் என்று பெரிதும் நம்புகிறேன். இதன் விற்பனை, இதுபோன்ற பல அரிய நூல்களை எழுத ஆசிரியரை ஊக்குவிக்கும்.

இப்புத்தகம் அச்சாகும்போது நல்ல கருத்துக்களைச் சொல்லி ஊக்குவித்த அருமை நண்பர் பி. ரா. கந்தன் B. A., (Inspector RMS) அவர்கட்கும் என் அன்பான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நண்பர் திரு. சுப்பையா வாழ்க! அவரது தமிழ்த் தொண்டும் சைவத் தொண்டும் வாழ்க!! என்று உங்களோடு நானும் சேர்ந்து வாழ்த்துகிறேன்.

இன்னும் பல அருமையான நூல்களை நாம் எதிர் பார்ப்போமாக.

பாரி. மு. நாராயணன்

# நன்றியுரை

என் வாழ்வின் பெரும்பகுதியை வளமான கொங்கு நாட்டில், தமிழ் பரப்பும் சாந்தலிங்கர் நிலையத்தில் கழிக்க நேர்ந்தது. ஆடுவதும், பாடுவதும் ஒரு சிலருக்கு மனமகிழ்வைக் கொடுப்பது போன்று 'எழுதுவது' எனக்கு இன்பம் கொடுக்கும் பொழுதுபோக்கு. என் பொழுது போக்கை நன்கறிந்த கோவை சேக்கிழார் திருக்கூட்டத்துச் செயலாளர் திரு. சம்பந்தனுர் கொங்கு நாட்டுக் கோயில்கள் பற்றி நாளிதழான நவ இந்தியாவில் எழுதும்படித் தூண்டினுர். ஒவ்வொரு கோவிலாகச் சென்று, அதைப்பற்றிய செய்திகளைக் கேட்டு, கல்வெட்டுக்களைப் பார்த்து, தலபுராணங்களைப் படித்து, இலக்கியங்களில் வருமிடங்களைக் குறித்து கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதலானேன். அவை நவ இந்தியா வாசகர்களின் மத்தியில் நல்மதிப்பைப் பெற்றன. நவ இந்தியா நிர்வாகத்தினருக்கு நன்றி. தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் அக் கட்டுரைகளைப் புத்தக வடிவில் வெளியிட முன்வந்து ஊக்குவித்தது. எங்கள் கூட்டுறவுச் சங்க நெறியாளர்கட்கு என் நன்றி என்றுமுண்டு.

இப் புத்தகம் வெளிவரப் பெரிதும் உதவியவர்கள் நிரம்ப உண்டு. கோவில்களின் நிருவாகத்தினரும், ஆணையாளர்களும், குருக்கள்மாரும் உதவினர். அவ்வப்போது கோவை கிழார், கவியரசு முதலியோரிடமும் என் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டேன். கல்வெட்டாராய்ச்சியாளர், ஈரோடு புலவர் திரு. செ. இராசு ஈரோடு பற்றிய கல்வெட்டுச் செய்திகளை ஆராய உதவினுர். இவர்களெல்லாம் என் நன்றிக் குரியோர்கள்.

புத்தகம் அச்சிடுவது ஒரு தனிக்கலை. அக்கலையில் தமிழகத்தில் தலை சிறந்து விளங்குவது சென்னை பாரி அச்சகம். மதுரைத் தமிழ்ச்சங்கப் பலகை புலமையற்ற புலவர்கட்கு இடம் கொடாதிருந்ததுபோல் இந்த பாரி அச்சகம் இலக்கியமும், சமயமும் அற்ற புத்தகங்களுக்கு வாகனமானதில்லை. அதனுல் சங்கப் பலகையின் பெயர் நிலை நிற்பதுபோன்று பாரி அச்சகத்தின் பெயரும் புகழும் தமிழ்ப்புத்தக உலகில் நிலைத்து நிற்கும் என்பதில் ஐயமில்லை. அதன் உரிமையாளர்

திரு. பாரி. மு. நாராயணன் அவர்கள் காசுக்காகச் செய்யாது கடமையுணர்வோடு அழகுற, பிழையற அச்சிட்டுக் கொடுத்துள்ளனர். அவர்கட்கும், அச்சகத் தொழிலாளர்கட்கும் என்றும் கடப்பாடுடையேன்.

இப்புத்தகத்தின் உள்ளே நீங்கள் காணும் கொங்கு நாட்டுக் கோயில்களின் படங்களை எடுத்துப் பிரதி செய்து பிரதிபலன் கருதாது கொடுத்து எல்லோரும் கண்டு இன்புறுமாறு செய்த பெருமை ஈரோடு ரவிவர்மா போட்டோ ஸ்டுடியோவைச் சாரும். அதன் உரிமையாளர், சைவத்தில் ஊற்றமும், தமிழில் ஆர்வமும் கொண்ட திரு. மு. அழகப்பன் அவர்கள். அவர்களும் என் நன்றிக்குரியவர்கள். புத்தகம் வெளியிடுவது என்பது எளிதான காரியமல்ல. இடையில் ஏற்படும் இடையூறுகள் எத்தனை எத்தனையோ. பிழைகளைத் திருத்துவது அவற்றுள் தலையாயது. அதை இன்பமுடன் ஏற்றுப் பிழைகளை நீக்கிப் பெரிதும் உதவிய பேரூர்ச் சாந்தலிங்கர் தமிழ்க்கல்லூரி விரிவுரையாளர் வித்துவான், திரு. ர. வையாபுரியாரும் நிர்மலா மகளிர் கல்லூரி விரிவுரையாளர் திருமதி ந. சுப்புலட்சுமி அம்மையாரும் M.A., B. O. L., என் நன்றிக் குரியவர்கள்.

இப்புத்தகத்திற்கு, உயர்திருவாளர்கள் வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன் M. A., அ. ச. ஞானசம்பந்தன் M.A ஆகியோர்கள் முன்னுரை, அணிந்துரை கொடுத்துப் பெருமைபடுத்தியுள்ளனர். அவர்கட்கு என் நன்றி. ஆசியுரை, வாழ்த்துரை, மதிப்புரை, சிறப்புக்கவி. பாராட்டுரை என் கருத்து நண்பருரை ஆகியன தந்துள்ள தவத்திருவாளர்கள் தி.செ. முருகதாச ஜீயா, சாந்தலிங்க இராமசாமி அடிகளார், சுந்தர சுவாமிகள் சைவத் திருவாளர்கள் கு. நடேச கவுண்டர், பாரி. மு. நாராயணன், திருமதி ந. சுப்புலட்சுமி, மு. நாராயணன் ஆகியோர்கள் என் வாழ்வில் பின்னிப் பிணைந்தவர்கள். என்னை உருவாக்கிவிட்ட உத்தமர்கட்கு வாழ்நாள் முழுவதும் கடப்பாடுடையேன் என்று கூறவும்வேண்டுமோ? இப்புத்தகத்திற் காணும் பிழைகளையும், குறைகளையும் விட்டுப்போன குறிப்புக்களையும் குறிப்பிட்டெழுதுவோர்களுக்கு இனி நன்றியுள்ளவனுவேன்.

ஆசிரியன்

# கொங்கும் கோயிலும்

கொங்கு என்ற சொல்லுக்குத் தேன், இன்பம், மணம், மகிழ்ச்சி, பூந்தாதுகள் எனப் பலபொருள் உண்டு. இப்பொருள்கள் எல்லாம் அதிக அளவில் நிறைந்திருந்ததால் கொங்குநாடு எனப் பெயர்பெற்றிருக்குமோ! இரண்டாம் நூற்றுண்டில் கங்கை வமிசத்தினர் இப்பகுதியை ஆண்டபோது கங்கை நாடாகி பின் அது மருவி கொங்கு நாடாயிற்றென்று கூறுவர். கொங்கணி வர்மாக்கள் ஆண்டதால் இப்பெயர் பெற்றதென்றும் சொல்வர். இக் கொங்குநாடு மூன்று பெரும் பிரிவாய்ப் பிரிக்கப்பட்டிருந்திருக்கிறது. அவை மீ கொங்கு (மீ=மேற்கு) தென் கொங்கு, வட கொங்காகும். கொங்கு நாட்டின் எல்லையைக் குறிக்கும் கொங்கு மண்டல சதகப் பாட்டு இதோ.

"வடக்குத் தலைமலையாம், வைகாவூர் தெற்கு
குடக்கு வெள்ளிப் பொருப்புக் குன்று கிழக்கு
கழித் தண்டலை சூழும் காவிரிசூழ் நாடா
குழித்தண்டலை யளவும் கொங்கு."

(கிழக்கு—குழித்தலை. மேற்கு—வெள்ளியங்கிரி. வடக்கு—தலைமலை. தெற்கு—வைகாவூர் என்ற (பழனி)—இந்நாட்டை ஆண்ட அரசர்கள் அநேகம்பேர். அவர்கள் கங்கை வமிசத்தார், மாராட்டியர், சோழர்கள், மைசூர் மகாராஜாக்கள், விஜய நகர அரசர்கள், உடையார்கள், மகமதிய மன்னர்களாவார்கள். 1799ல் திப்புசுல்தான் காலத்தில் இப்பகுதி ஆங்கில ஆட்சியின்கீழ் வந்தது. இக் கொங்கு நாடு புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை போன்ற பழம்பெரும் நூல்களில் இடம்பெற்றுள்ளது. இந்நாட்டைச் சங்கப் புலவர்கள் பெருந்தலைச் சாத்தனுர், பொன்முடியார், கருவூர்ப் பூதஞ் சாத்தனுர் போன்ருேர் பாடியுள்ளனர். இந்நாட்டைச்சார்ந்த புலவர்கள் நன்னூலாசிரியர் பவணந்தி முனிவரும், உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரும், பெருங்கதையாசிரியர்

கொங்குவேளும் சாத்தனாரும் ஆவார்கள். பல கோவைகளை யும் சதகங்களையும், குறவஞ்சிகளையும், நிகண்டுகளையும் பாடிய பல புலவர்கள் வாழையடி வாழையாய் வாழ்ந்து வருகிறார்கள். கடையெழுவள்ளல்கள் ஓரியும், அதிகனும், குமணனும் வாழ்ந்த நாடு. கருவூர்ச் சித்தர், கஞ்சமலைச் சித்தர், மருதமலைப் பாம்பாட்டி சித்தர், சென்னிமலைப் பிண்ணாக்குச் சித்தர், சிவமலை சிவவாக்கியச் சித்தர், பழநிப் போகர், புலிப்பாணி ஆகியோர் கொங்குநாட்டுச் சித்தர்கள் ஆவார்கள். கொங்கு மலிந்தால் எங்கும் மலியும் என்ற பழமொழிக்கொப்ப செல்வ வளம் மலிந்த நாடு. இங்குள்ள மக்கள் கள்ளம் கபடமற்ற வெள்ளையுள்ளமுடைய நல்ல மக்கள். பழைமைக்குச் சீரும் சிறப்பும் கொடுப்பவர்களானாலும் புதுமையுடன் சேர்ந்து வாழவும் கற்றவர்கள். இன்றும் கிராமீயப் புறங்களில் இவர்களுடைய பழம் பண்பாட்டையும், பேச்சு வழக்கையும், வாழ்க்கை முறையையும் நயத்தக்க நாகரீகத்தையும் காணலாம். நீங்கள் அவர்களிடம் பேசும்போதும் ஒவ்வொரு சொல்லுக்கும் மரியாதைக்கான "ங்க" போட மறவாதீர்கள். "ஏனுங்க எப்பாங்க! போவீங்க! சரிங்க! நானுமுங்க! வரேனுங்க" இதுபோன்று எப்போதும் மிக்க மரியாதையுடன் பேசவேண்டும்.

'ஆலயந் தொழுவது சாலவும் நன்று' என்பது ஔவையார் வாக்கு. எள்ளுக்குள் எண்ணெய் போன்று, விறகில் தீ போன்று, பாலிற் படுநெய் போன்று இறைவன் எங்கும் பரவி இருப்பினும், காட்சிக்கு மறைந்து விளங்குகிறான். பசுவின் உடம்பெல்லாம் பால் பரவி இருந்தாலும், மடியிலிருந்து காம்பின் வழியே வெளிப்படுவதுபோன்று எங்கும் வியாபித்துள்ள இறைவன் ஆலயத்திலுள்ள திருமேனியின் வழியாக நமக்கெல்லாம் அருள் பாலித்து விளங்குகிறான். "திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே" என்று சிவஞான சித்தியார் கூறுகிறது.

கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது முதுமொழி. திருநாவுக்கரசு நாயனார் "திருக்கோவில் இல்லாத

திருவில் ஊரும், திருவெண்ணீறணியாத திருவில் ஊரும்......
அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே' என ஆறாம் திரு
முறையில், (பதிகம் 95, பாட்டு ஐந்து) நமக்குக் கூறுகிறார்.
இத் திருக்கோயில்களெல்லாம் ஆகம, சிற்ப சாத்திரப்படி
அமைக்கப்பட்டவை. அவை அமைப்பதற்கான சிற்ப சாத்
திரம் வேதாகமங்களில் பலவகை சுலோகங்களாக உள்ளன.
பழங்கால அரசர்களும், குறுநில மன்னர்களும் அவர்தம்மக்
களும் சோறிருக்கக் கவலையின்றிக்கலைகளையே எண்ணி வாழ்ந்
தனர். அவர்கள் தங்கள் அரண்மனையைக்கூட அத்தனை
பெரிதாய்க் கட்டுவதில் அக்கறை காட்டிலர். ஆனால்
அரன் தளிகளையும். விண்ணகரங்களையும் கட்டுவதில் அதிக
கவனம் செலுத்தினர். மேலும் அக்கால அரசர்கள் கோயில்
திருப்பணி செய்வோர் யாராயிருப்பினும் அவர்கட்கு சிரம்
தாழ்த்தத் தவறுவதில்லை என்பதற்குத் தென்காசிக் கோயிற்
கோபுர வாசலில் உள்ள பராக்கிரம பாண்டியனின் கல்வெட்டு
ஒன்றே சான்றாகும். 'மானுடப் பிறவி தானும் வகுத்தது
மனவாக்காயம் ஆனிடத்தைந்தும், ஆடும் அரன் பணிக்காக
அன்றோ' என்ற சித்தியார் வாக்கிற்கேற்ப அக்கால மக்களும்
விருப்போடு தங்களையும் கோயில் திருப்பணியில் அர்ப்ப
ணித்தனர். இதன் பலனாய் வானளாவிய கோபுரங்களுடன்
ஊர்தொறும் கோயில்கள் எழுந்தன.

அப்பர் பெருமான் காலத்தே திகழ்ந்த கோயில்
வகைகளை "பெருக்காறு சடைக்கணிந்த பெருமான்சேரும்
பெருங்கோயில்" என்று தொடங்கும் அவர்தம் திருப்பாட்
டொன்றில் நாம் காண்கிறோம். அதில் "கோயில்" என
வருவனவற்றை வகுத்தருளியுள்ளார். அவற்றை வழிபட்டால்
உண்டாகும் பலனையும் அதிற்கூற மறந்தாரில்லை. அப்பர்
பெருமான் காலத்தே கோச்செங்கட் சோழனால் தமிழகத்தில்
கட்டப்பட்ட பெருங்கோயில்கள் எழுபத்தெட்டு இருந்தன என்
பதையறிகிறோம். தேர் வடிவமாய் சக்கரங்களுடன் கூடிய
கோயில் கரக்கோயில். கடம்பூர்க் கோயில் அவ்வகையைச்
சார்ந்தது. இந்திரன் கரத்தால் அகழ்ந்ததால் கரக்கோயில்

எனப் பெயர்பெற்றதென்பர். ஞாழக்கோயில்—மரத்தடியில் கட்டப்பெற்றது. கொகுடிக் கோயில்—முல்லைக்கொடியுள்ள இடங்களில் எழுப்பப்பெற்றது. இளங்கோயில்—இன்று பாலாலயம் எனக் கூறப்பெறுவது. மணிக்கோயில்— ஆலக்கோயில் என்ற பலவகைக் கோயில்களையும் குறிப்பிடுகிறார். கற்களால் பாறைகளின்மேற் கட்டப்பட்ட கோயிலுக்கு அறைப்பள்ளி எனப் பெயர். கோயில் என்ற பொதுப்பெயர் சிறப்பாய்க் குறிப்பது சைவர்கட்கு சிதம்பரம் கோயிலையும், வைணவர் கட்கு திருவரங்கக் கோயிலையுமேயாம். பாரதநாடு பழம் பெரும் நாடு. உலகில் பல நாடுகளுக்கு ஆன்மீகத்துறையில் வழிகாட்டி நிற்பது. ஆத்ம சிந்தனையை வளர்க்கும் நாடு. ஆலயங்கட்குக் குறைவற்ற நாடு. பாரத நாட்டில் சிறப்புடைய கோயில்கள் 1008 சிவனுக்குரியன. அவற்றுள் பாடல் பெற்றவை 275. அதுபோன்று வைணவத் தலங்கள் நூற்றெட்டு. பத்து ஆழ்வார்களும் ஆண்டாளும் பாடி மங்களா சாசனம் பெற்றவை இந்த நூற்றெட்டும். சிவதலங்கள் ஆயிரத்தெட்டிலும் பாடல்பெற்ற தலங்கள், வைப்புத்தலங்கள், பஞ்சபூத தலங்கள், பஞ்ச சபை, சப்த விடங்கஸ்தானங்கள், சப்தஸ்தானங்கள், அட்டவீரட்டானம் என்ற பல்வகைப்பட்ட கோயில்களும் அடங்கும்.

சைவ சமயப்பரமாசாரிய மூர்த்திகள் நால்வரில் தலங்கள் தோறும் சென்று பாடியவர்கள் மூவர். அவர்கள் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள். இம் மூவரும் பரமனைத் தனிப்பட ப்பதிகம் பாடிப் பரவித் துதித்துள் ளனர். அவ்வாறு அவர்கள் பாடியருளிய தலங்கட்குப் பாடல் பெற்ற கோயில்களென்று பெயர். இக் கொங்கு நாட்டில் பாடல்பெற்ற பழம்பதிகள் ஏழு. வைப்புத்தலங்கள் பல உண்டு. குன்றுதோறும் குமரன் குடிகொண்டுள்ள பலமலைக் கோயில் கள் கொங்கு நாட்டிலுண்டு. அருணகிரிநாதர் அம்மலைகளுக் குப்போய் திருப்புகழ்மாலை பாடிச் சூட்டியுள்ளார். வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடிய தலங்களும் பல உண்டு. இனி புத்தகத்தின் உள்ளே நுழையலாமா? ஊர் ஊராகச் செல்லலாமா?

## தலங்களும் பக்கங்களும்

# பழநி

“படிக்கின்றிலை! பழநித் திருநாமம் படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை! முருகா! என்கிலை! முசியாமலிட்டு
மிடிக்கின்றிலை! பரமானந்தம் மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின்றிலை! நெஞ்சமே தஞ்சமேது நமக்கினியே.”

—கந்தர் அலங்காரம்.

என்றும்,

“ஒருபொழுது மிருசரண நேசத்தே வைத்துணரேனே
உனது பழநி மலையெனு மூரைச் சேவித்தறியேனே”

—திருப்புகழ்.

என்றும் அருணகிரிநாதர் வருந்திக் கூறுகின்றார். அப் பழநி எனும் ஊரைச் சேவித்தறிய உங்களை அழைத்துச் செல்ல ஆசைப்படுகிறேன்.

பழநிமலை, சிவமாய் விளங்குகிறது. அதன்மீது சிவகுமாரன் கோயில் கொண்டிருக்கிறார். குடமுனி, குறுமுனி, தமிழ்முனி எனப் புகழ்பெறும் அகத்தியமுனி முருகனின் மனத்துக்குகந்த முனிபுங்கவர். பொதிகையில் வாழ்பவர். அவர் இமயமலையிலிருந்த சிவகிரி சத்திகிரி என்ற இரு மலைகளைத் தன் பொதிகைமலைக்குக் கொண்டுவரக் கூறி இடும்பனை ஏவினார். இடும்பன் இவ்விரண்டு மலைகளையும் காவடி போன்று கட்டி எடுத்துக்கொண்டு வரும்போது இளைப்பாற எண்ணினான். நெடும்பெருங்காடாய் இருந்த இவ்விடத்தில் இறக்கி வைத்தான். பின்பு பெயர்த்தெடுக்க முடியாது திணறினான். சிவமலையின்மேல், குராமரத்தின் கீழ், குமரன் நிற்கக் கண்டு அவனது குறும்புதான் இது

என எண்ணி அவனை யார் என்று தெரியாது போர் புரிந்தனன். இளஞ்சிறுவன்தானே என எள்ளி நகையாடிப் போரிட்ட இடும்பன் இறந்தனன். இடும்பியின் வேண்டுகோளுக்கு மனமிரங்கிய மால் மருகன் - வள்ளி மணாளன்—இடும்பனை உயிர்ப்பித்து, குன்றுதோறும் நம் கோயில்களில் எல்லாம் வழிக்காவலனாக என்றும் நீ இருக்க எனவும், நீ மலைகளை எடுத்து வந்தது போன்று நம் தலங்களில் மெய்யன்பர்கள் காவடி எடுத்துவரின் அவர்கள் வேண்டுவன அருள்வோம் எனவும் இரு வரங்கள் அவனுக்கு ஈந்தார். பின்பு சிவபெருமானும் பார்வதியும் அங்கு வந்தனர். அருங்கனிக்காகச் சீராடிவந்த அருமைக் குழந்தையைக் கண்டனர். "மாதுளங் கனிக்காகக் கோபிக்கலாமா? நீயே சிவஞானப்பழம். அடியார்க்கு நல்ல ஞானம் அருளும் ஞானப்பழம். பழம் நீ" என்று கூறினர். அதனால் அவன் இருக்கும் இம்மலைக்குப் பழநி என்று பெயர் உண்டாயிற்று.

"கூறுடையாளும் குன்றுக் குணப்பெருங் குன்றும் ஞானப்
பேறுடைப்பழம்நீ என்னப் பெயரது மருவி எங்கள்
ஆறுமுகவன் வைகும் நகரமும் அன்று தொட்டு
வீறுதொல் பழநி என்றே விளம்பின உலக மூன்றும்".

எனப் பழநித் தலபுராணம் கூறும். "பழனம் உழவர் கொழுவில் எழுது பழைய பழநி" என்கிறார் அருணகிரிநாதர். (பழனம் - வயல்) பழனங்கள் சூழ்ந்துள்ள காரணத்தால் பழநி எனப் பெயர் பெற்றது என்பதும் பொருந்தும்.

பழநி கொங்குநாட்டின்கண் உள்ளது என்பதற்கு,

"ஆதியந்த உலா ஆசுபாடிய சேரர் கொங்கு
வைகாவூர் நன்னாடதில் ஆவினன்குடி வாழ்வான
தேவர்கள் பெருமாளே."

என்ற திருப்புகழ்ச் சொற்றொடர்கள் ஆதாரமாகும். ஆங்கிலேயர்கள் காலத்தில் மதுரை மாவட்டத்துடன் சேர்க்கப்பட்டது. இப்போது பழநித் தாலுகாவின் தலை நகராய் மிளிர்கிறது. பழநி ஒரு பழம்பெரும்மூதூர். சங்ககாலத்தில் வாழ்ந்த நக்கீரரால் திருமுருகாற்றுப் படையில் திருவாவினன்குடி பாடப்பெற்றுள்ளது. ஆறு படை வீடுகளில் திருவாவினன்குடி ஒன்று. இது இப் பழநிமலையின் அடிவாரத்தில் உள்ளது. ஆவியர் என்ற வேளிர் மரபினர்களின் நன்னகரமாதலால் ஆவினன் குடி என்று பெயர்பெற்றது. இவ்வாவினன்குடியில் குடிகொண்டுள்ள குமரனுக்குக் குழந்தை வேலாயுத சுவாமி என்றுபெயர். ஆவினன்குடிக்கு அருகிருக்கும் மலைக்குப் "பொதினி" என்பது பழம் பெயர் என்று அறிஞர்கள் கூறுவர். பழநிக் கோவில் ஆதியில் சேரனால் கட்டப்பெற்றது என்பதற்குப் பழநித் தலபுராணம் எட்டாவது பாட்டில்,

"பாராதி பரவுபுதர் பரவு சிவகிரிவரு பச்சிமத்து வாசல்
சேரர் கோனலயத்துள் நின்றிலங்கும் பரஞ்சுடரைச்
சிந்தை செய்வாம்"

என்ற அடிகளே சான்று பகரும். ஆதாரமாகக் கல் வெட்டுக்களும் உண்டு. குன்றுதோறாடலில் பழநியும் ஒன்றாகும். இரண்டுபடை வீடுகள் ஒரே தலத்தில் அமைந்துள்ள பெருமை இவ்வூருக்கு உண்டு.

கோயமுத்தூரிலிருந்து 100 கிலோமீட்டர் தூரத்திலும் திண்டுக்கல்லிலிருந்து 59 கிலோமீட்டர் தூரத்திலும் பழநி அமைந்துள்ளது. இரயிலடியிலிருந்து சுமார் இரண்டு கிலோமீட்டர் தூரத்தில் பழநி மலையடிவாரம் இருக்கிறது. பழநிமலையின் உயரம் கடல் மட்டத்துக்கு மேல் 1068 அடி. நிலப்பரப்புக்குமேல் அது 450 அடி உயரம். அதற்கு ஏறும் படிகள் 697.

இது தவிர யானையடிப்பாதை என்ற படியில்லாத தடம் இணைப்பு, எய்ப்பின்றிப் பெருமூச்சின்றி நம்மை மலையுச்சிக்குக் கொண்டு செல்லும்.

விநாயகரும் வள்ளியும் பதினெட்டாம்படிக் கன்னிமாரும், குறுநில மன்னரான வையாபுரியாரும் இடும்பனும் குராவடி வேலவரும் மலைப்படிகளில் இடையிடையே சந்நிதி கொண்டுள்ளனர். யானைப்பாதையில் கயிலை இறைவனின் திருவோலக்கமும், வள்ளி தினைப்புனக் காவலும், ஔவைக்கருள் செய்தலும், புலிப்பாணி திருமஞ்சனக்குடத்துடன் வருதலும், ஆங்காங்கே பொம்மைகளாய்ச் செய்து வைக்கப் பெற்றுப் பொலிவுடன் விளங்குகின்றன. உண்மை உருவமோ என எண்ணித் திகைக்கும்படிக் கண்களை அவை ஏமாற்றுகின்றன.

அங்கங்குறைந்தவர்களும், வயோதிகர்களும், பச்சிளம் பாலகர்களும் மலையேறி இறைவனைப் பார்த்து மகிழும்படி இப்போது மின்விசையால் இழுக்கும் ரயில் பெட்டி (Winch rail) அமைத்துள்ளனர். இந்த இழுக்கும் ரயில் நிலையத்தின் சுவரில் என்றோ எழுதிய பாட்டொன்று காணப்படுகின்றது. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் பாடப்பெற்ற பழநித் திருவாயிரத்தில் அது உள்ளது. எத்தனை பொருத்தமானது என்பதைப் படித்துப் பார்த்து மகிழுங்கள்.

“ உன்னைத் தவிர மற்றொன் றுண்டென்ன உன்றுபவர்
என்னைத் தொடராவாழ் வென்றருள்வாய் முன்னை
ஒழுக்கம் கருணை தவம் உள்ளவரை யெல்லாம்
இழுக்கும் பழநியப்ப னே.”

முருகதாசர் முக்காலத்தையும் உணர்ந்தவர் என்பதற்கு இப்பாட்டொன்றே சான்றாகும்! பின்புறமுள்ள ஓர் பாதை மலையுச்சியிலிருந்து வரட்டாறுவரை

செல்கிறது. இப்பாதைகள் இல்லாக் காலத்தே தண்டபாணிக்குத் திருமஞ்சனம் கொண்டுவர பாணிக்கு வாகனமாய்ப் புலியொன்று வருவது வழக்கமாம். அதனுல்தான் புலிப்பாணி என்ற பெயரைப் போகரின் மாணவர் பெற்றுர்போலும்! அடிவாரத்தில் அமர்ந்துள்ள பாத விநாயகரைப் பார்த்து வணங்கி நேரே மலையேறும் மக்களும் உண்டு. மலை வலம் வந்தபின் ஏறும் பக்தர்களும் உண்டு. மலை மேலுள்ள கோவில் மலைமுடிக்குக் கிரீடம் போன்றமைந்துள்ளது. கோயிலின் முகப்பிலுள்ள கட்டைக்கோபுர வாயிலைக் கடந்தவுடன் ஐந்து நிலையுடைய இராச கோபுரம் அடையலாம். இரண்டு பிரகாரங்கள் இக் கோயிலுக்கு உண்டு. உள்ளே கருவறையில் இறைவன் ஆண்டிக்கோலத்தில் எழுந்தருளியுள்ளார். கோவிலில் எழுந்தருளியுள்ள சுப்பிரமணியரின் வலது கையில் தண்டம் பிடித்திருப்பதால் அவருக்குத் தண்டபாணி என்றும் பெயர். இடது கையை இடுப்பில் ஊன்றியுள்ளார். இங்குத் தண்டபாணி மேற்கு முகமாய் நிற்கிருர். அது இப்பழநியின் சிறப்பாகும். தங்களைக் கடைக்கண் பார்த்துக் காப்பாற்றும் கருணை மிகுந்த தெய்வம் இத் தண்டபாணித்தெய்வம் அல்லாது வேறில்லை என்றுணர்ந்து மலையாள மக்கள் ஆண்டு முழுவதும் சாரை சாரையாய் வந்து வணங்கிப்போகின்றனர். சுவாமி நவபாஷாணத்தால் ஆனவர். அதனுல் திருமேனியில் படும் அபிஷேகப் பொருள் மருந்துத் தன்மை பெற்று நோய் தீர்க்கும். ஒன்பது வகை பாஷாணத்தை ஒன்று கூட்டி இச்சுவாமியை உருப்பெறச் செய்தவர் போகர் என்பவர். அவர் பதினெண் சித்தர்களில் ஒருவர். போகருக்குப் பின் அவர் சீடர் புலிப்பாணியும் அவருக்குப் பின் அவர்கள் மரபில் வந்தோரும் திருமலைநாயக்க மன்னர் காலம்வரை பூசித்து வந்துள்ளனர். போகரின் சமாதி உட்பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் உள்ளது. அவர் பூசித்த புவனேசுவரி அம்மையின் திரு



மலைக்கோயில் உட்தோற்றம்

மேனியை இன்றும் பார்க்கலாம். மூலத்தானத் திற்கும் இந்தச் சமாதிக்கும் சுரங்கப் பாதை ஒன்று இருந்திருக்கிறது. உட்பிரகாரத்தில் வடக்கு வரிசையில் மலைக் கொழுந்துநாதர் கிழக்கு நோக்கி மலைமுடியில் வீற்றிருக்கிறார். இதுவே பழநி மலையின் உச்சியாகும். அவர் பக்கலில் மலைக் கொழுந்து நாயகி கச்சிதமாய்க் காட்சி அளிக்கிறார். தட்சிணா மூர்த்தியும் பக்கத்தே உள்ளார். ஈசானிய மூலையில் நவ வீரர்களின் சந்நிதியும், தென் பாகத்தில் கைலாசநாதர் சந்நிதியும், சண்டேசுரர் சந்நிதியும் உள்ளன. சுற்றுப்புறச் சுவர்



பழநிமலைத் தோற்றம்

களில் சுப்ரமணிய பராக்கிரமப் படங்கள் முழுவதும் எழுதப்பெற்றுள்ளதைப் பார்க்கலாம்.

மகாமண்டபத்திற்குள் நுழையுமுன் துவாரபாலகர்களை வணங்கி விடைபெற்று உட்செல்லவேண்டும். உள் நுழைந்தவுடன் இடப்பாகத்தில் காண்பது ஆடலரசரின் அழகுத் திருவுருவமும், அவனருகில் அமைதியுடன் நிற்கும் அம்மை சிவகாமியுமே. அடுத்தது தண்டபாணியின் பள்ளியறை. அதற்கடுத்தது சண்முகநாதரின் சந்நிதி. சண்முகநாதர் வள்ளி தெய்வயானையுடன் காட்சியளிக்கிறார். அடுத்திருப்பவர் பழநித் தண்டபாணியின் உற்சவர். அவர் 'சின்ன குமாரர்' எனச் செல்லமாய் அழைக்கப் பெறுகிறார். பன்னிரு கற்றூண்களையும் தவிலக் காற்றோட்ட வசதிகளையும் திருமுறைகள் ஓதும் ஒலி எல்லோருடைய செவிகளிலும் விழ எதிரொலியற்ற ஒலிபெருக்கியையும் உடையது இம்மகாமண்டபம். போகர் வழிவந்த சைவ மரபைச் சார்ந்த அனுக்கத் தொண்டர்களும் ஆதி சைவ மறையோர்களுமே அர்த்த மண்டபத்துள் நுழையலாம். இத்தண்டபாணி அபிஷேகப் பிரியன்.



மலைக்கோயில் முகப்பு

அதிக வேடம் புனைபவன். வேடனாகவும், விருத்தனாகவும், அரசனாகவும், ஆண்டியாகவும், அடியவர்களுக்குக் காட்சி கொடுப்பவன். அவனுக்கு அபிடேகித்த பஞ்சாமிர்தம் உலகப் பிரசித்தம். அது தின்னத் தின்ன ஒருகால் திகட்டலாம். ஆனால் அவன் திருவுருவத்தைத் திரும்பத் திரும்ப எத்தனை மணி நேரம் கண்கொட்டாது நின்று பார்த்து வணங்கினாலும் மனம் நிறைவுபெறுவதில்லை. போகர் நமக்கு அளித்த சொத்து அவன். அவன் நமக்களிக்கும் சொத்து அவன்மீதுண்டாகும் போதை. அவரை வழிபட்டு வாழ்ந்தவர்கள் அகத்தியர், போகர், சேரர் கோன், வசுமந்தன், சொர்ணதித்தன், நித்யானந்தன், பிரமன், இந்திரன், கவுசலசேரன், அக்கினி, ஆதிசேடன், அருச்சுனன் முதலியோர். பழநிப்பதியில் உண்டான தீர்த்தங்கள் சண்முகநதி, வையாபுரிக் குளம், அமுததீர்த்தம், காளுச்சுனை, சரவணப் பொய்கை ஆகியன. மலையைச்சுற்றி ஒன்றேகால் மைல் சுற்றுப்பாதை உண்டு. கிரிவலம் வருவோர் இதன்வழி வருவர். பலவகை மூலிகைகளையுடைய மலைக்காற்று நோயால் நலிவுறும் மக்களுக்கு நல்வாழ்வு அளிக்கிறது. மலையைச்சுற்றி நான்கு திசையிலும் நான்கு மயில் மண்டபங்களும் ஆங்காங்கே சிறு தேவதைகளின் சந்நிதிகளும் உண்டு. ஹரிஜனசேவா சங்கத்து நந்தனார் விடுதியும் உண்டு. சாது சுவாமிகள் என்ற பெரியார் இருபதாம் நூற்றாண்டில் கண்கண்ட தெய்வமாய்க் காட்சியளித்து வந்தார். அடியவர்கட்கு அன்னமிடுதலே அவருடைய இலட்சியம். "சண்முக விலாசம்" என்ற அன்னதான சமாஜமடம் அமைத்து ஏழை எளியவர்கட்கும் அரனடியவர்கட்கும் தினமும் மகேசுவர பூஜை பண்ணி வந்தார். பணம் மிக்கோரிடம் வாங்கி நாளைக்கெனச் சேமியாது அறுவகைச் சுவையுடன் உணவிடுவார். அதற்கு வகையில்லையாயின் கூழேனும் காய்ச்சி ஊற்றும் குணாளர் இவர்.



பழநி பாலதண்டாயுதபாணி ஏறிவரும் எழில்மிக்க தேர்.

மலையில் இராக்கால பூஜை இம்மடத்தினரால் செய்யப் பட்டு வருகிறது. அப்பணியை இம்மடத்தினர் இன்றும் செய்து வருவது குறிப்பிடத்தக்கது.

இவ்வூர் மத்தியில் ஊர்க்கோயிலாகப் பெரியநாயகி அம்மன் கோவில் ஒன்றுள்ளது. அங்கு முற்றுப்பெருத மொட்டைக்கோபுரம் உள்ளது. சோமாஸ்கந்த அமைப் பில் அமைந்துள்ளது இக்கோயில். பெரியநாயகி அம்மைக்கும் கயிலாசநாதருக்கும் மத்தியில் வள்ளி, தெய்வானையுடன் முருகன் காட்சி யளிக்கிருர். உற்சவர் பெயர் முத்துக்குமாரசாமி. தூண்களில் உள்ள சிற்பங்கள் சிறப்புடையவை. சண்முக நதிக் கரையில் பெரியாவுடையார் கோவில் ஒன்றுள்ளது. இதற்குப் பெயர் கன்னிகாரவனம் என்று தலபுராணம் கூறும். இயற்கையழகின் மத்தியில் அமைந்துள்ள இக்கோவிலிலிருந்து காவடி கட்டி மலைக் கோவிலுக்குக் கொண்டு செல்வர். எண்ணற்ற திருமணங்கள் இக் கோவிலில் நடைபெறுகின்றன.

பழநியில் பல மகான்களும் சித்தர்களும் வாழ்ந் திருக்கின்றனர். அருணகிரிநாதர் பலநாள் இங்குத் தங்கிப் பல்புகழ் பாடிப் பரவினுர் என்பதற்கு 96 திருப் புகழ்ப் பாடல்களே சான்ருகும். எந்தத் தலத்துக்கும் இத்தனை பாடல்கள் அவர் பாடவில்லை. அவரது வழி வந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பழநிப் பிள்ளைத் தமிழ், பழநித் திருவாயிரம் உள்ளிட்ட 1274 பாடல்கள் இப்பழநிக்குப் பாடியுள்ளார். இங்குப் பிறந்த மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பழனுபுரிமாலை முதலாகப் பல பிரபந்தங்கள் இத்தலத்திற்கு இயற்றியுள்ளார். அண்ணுமலைக் கவிராயரால் பழநிப் பதிற்றுப்பத்தந்தாதி இயற்றப் பெற்றது. பழநிக்குத் தல புராணம் ஒன்று உண்டு. பாடியவர் பாலசுப்ரமணியக் கவிராயர். பாம் பன் சுவாமிகள் என்று போற்றப் பெறும் குமரகுருதாச

சுவாமிகள் தாம் பாடிய குமாரசாமியத்தில் பழநிபற்றி அதன் சிறப்பையும் வரலாற்றையும் சுமார் பத்து சருக்கங்களில் பாடியுள்ளார்கள். இது போன்று இத்தலத்துடன் தொடர்புடைய முனிவர்கள், ஞானிகள், புலவர்கள், சாதுக்கள் அநேகருண்டு. போகர் முதல் தண்டபாணி சுவாமிகள் ஈருக மிக முக்கியமான இருபத்தாறு மகான்களின் ஓவியத்தை இடைநாழிக்கு அடுத்து உயரத்தே எழுதியுள்ளனர். இது இருபதாம் நூற்றுண்டுச் சித்திரக் கலைக்கு எடுத்துக்காட்டு.

கோவைக்கவியரசு நடேச கவுண்டர் இத் தண்டபாணிக்கு ‘மயில்விடு தூது’ பாடியுள்ளார்; அது ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. விசயகிரி வேலச்சின்னோ வய்யன் பாடிய பிள்ளைத்தமிழ் கேட்டுப் பழநிக்குமாரர் ஏறிய தேரோடு ஓடி வந்த செய்தி ஒன்றுண்டு. இன்றும் பண்ணோடு ஓதும் பல ஓதுவார்கள் பக்திச்சுவை நனிசொட்டச் சொட்டப்பாடி நம்மையும் பரவசப்படுத்துகின்றனர். இக் கோயிலில் கொண்டாடும் பெருவிழா பங்குனிப் பெருவிழா. ஏழாம் திருவிழா பங்குனி உத்தரவிழா. வேனிற் காலத்தில் (சித்திரை-வைகாசியில்) அக்னிநட்சத்திரமாகிய பதினான்கு நாட்களில் விழா உண்டு. கந்தர் சஷ்டி விழாவும் சிறப்புடையது. ஆண்டில் ஒரே ஒரு முறைதான் உற்சவரான சின்ன குமரர் மலையிலிருந்து கீழிறங்கி வந்து சூர்தடிந்து மீண்டும் மலைக்கு ஏகுவார். திருக்கார்த்திகை விழா, கார்த்திகை மாதத்தில் பத்து நாள் நடைபெறும். முதல் நாள் விழாவைக் கோவை சேக்கிழார் திருக்கூட்டத்தினர் நடத்துகின்றனர்.

இக் கோயில் மற்றைய கோயில்களுக்கு முன்னோடியாய் வழிகாட்டி நல்ல பல தொண்டுகளை மக்களுக்குச் செய்து வருகின்றது. அவற்றுள் குறிப்பிடத் தக்கவை

இந்தியப் பண்பாட்டுக் கலைக்கல்லூரி, விடுதி, தேவத் தான சத்திரங்கள், ஏழை விடுதி (அன்பு இல்லம்), நூல் நிலையம், நாதசுரக் கலைக் கல்லூரி, தேவார இசைப்பள்ளி, வேதசிவாகம பாடசாலை போன்றவை. வெறுத்தவனுக்கு எல்லாம் வலிதில் வந்து சேர்வது இயற்கை. அது போன்று எதுவும் வேண்டாமென ஆண்டிக் கோலம் பூண்ட தண்டபாணிக்கு உண்டியல் வருமானம் அதிகமாதலால் இக்கோவிலின் பொறுப் பாளர்கள் மற்ற கோவில்களுக்குப் பணம் கொடுத்து உதவுகின்றனர். கோவில் விமானம் தங்கத் தகட்டால் வேயப் பெற்றது. பெருமதிப்புடைய ஆபரணங்களும் வாகனங்களும் மக்களால் அளிக்கப்பட்டுள்ளன.

ஞான வடிவாய், கவின்றெழுகும் முகமும், வடிவு நூலும், மார்பும், கையொண் கோலும், நெடிய கோவண உடையும் உடன் கொண்டு நின்ற காட்சியை மனத் திரையில் எழுதி மற்றொரு முறையும் கைகூப்பித் தெண்டனிட்டுப் பழநித் தண்டபாணித் தெய்வத்திடம் விடைபெறுவோமாக!





மேலைச் சிதம்பரம் (பேரூர்)—நடராஜர், சிவகாமி

# பேரூர்

(பட்டிப் பெருமான் திருக்கோவில்)

பகவத்கீதையின் பத்தாவது அத்தியாயத்தில் விபூதி யோகத்தின் முப்பத்தைந்தாவது சுலோகத்தில் "மாதங்களில் நான் மார்கழி" எனக் கண்ணன் கூறுகிறான். இம்மார்கழி தேவர்களுக்கு விடியற்காலை (உஷத்காலம்). இம்மாதத்தில் இறைவனை நோக்கித் திருவெம்பாவையையும், திருப்பாவையையும் பாடிப் பரவும் சைவ வைணவ பக்தர்களுக்கு சுக்ல பட்சத்தில் வரும் திருவாதிரையும், வைகுண்ட ஏகாதசியும் முறையே முக்கியமானவை. ஆதிரை நாளில் உமையம்மையார் கண்டு களிக்க அம்பலவாணர் ஆனந்தத் தாண்டவம் ஆடுகிறார். 'ஆரார் வந்தார் அமரர் குழாத்திலணி யுடையாதிரை நாள்' எனச் சேந்தனார் ஆதிரை மகிமையைத் திருப்பல்லாண்டில் இசைக்கிறார். திருநாவுக்கரசர், தன் மறுமாற்றத் திருத்தாண்டகத்தில் "அங்கமே பூண்டாய் அனலாடினாய், ஆதிரையாய்" என்றும், ஆக்கூர்த் திருத்தாண்டகத்தில் 'ஆதிரை நாளாவமர்ந்தார் போலும் ஆக்கூரில் தான்றோன்றியப்பனாரே' என்றும் பாடி ஆதிரையின் மகிமையைக் கூறுகிறார்.

திருப்புகலூரில் முருக நாயனார் திருமடத்தில் திரு ஞானசம்பந்தரிடம் திருநாவுக்கரசு நாயனார் ஆதிரை

நாளில் ஆரூரிற் கண்ட காட்சிகளைப் படம் பிடித்தாற் போன்று "முத்து விதானம்" என்று தொடங்கும் பதிகத்தில் பாடிக் காட்டுகிறார். "அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அது வண்ணம்" என்று முடியும் பதிகம் அது. சேக்கிழார் இந்நிகழ்ச்சியைத் தம் பெரிய புராணத்தில் பின்வரும் பாட்டால் விளக்கு கிறார்.

*சித்தம் நிலாவுந் தென்திருவாரூர் நகராளும்*
*மைத்தழை கண்டர் ஆதிரை நாளின் மகிழ்செல்வம்*
*இத்தகைமைத் தென்றென் மொழிகேன்? என்றருள் செய்தார்*
*மூத்துவிதான மணிப்பொற் கவரிமொழி மாலை.*

அத்தகைய பெருமை வாய்ந்தது ஆதிரைநாள். ஆனந்தத் தாண்டவம் ஆடும் புலியூர்ச் சிற்றம்பலம் ஆன சிதம்பரம் உள்பட சிவ தலங்களிலெல்லாம் ஆதிரை நாள் கொண்டாடப்பெறும். ஆரூர்போன்று ஆதிரை நாள் அதி விமரிசையாய்க் கொண்டாடப்பெறு வது நம் பேரூரில்தான். பேரூர் கொங்கு ஏழ்தலங் களில் ஒன்று.

கோயமுத்தூரிலிருந்து நான்கு கல் தொலையில் உள்ளது. வளர்ந்துவரும் கோவையின் நகர்ப்பகுதியி லொன்ருய்விட்டது. வாகன வசதிகளும் தேவைக்கு மேல் கிடைக்கும். நொய்யல் நதியைக் கடந்தால்தான் பேரூர் அடையமுடியும். இந்நதி காஞ்சிமாநதி என்றும் அழைக்கப்பெறும். வன மூலிகைகளைத் தன்னகத்தே உடைய பல மலைகளைத் தாண்டி வருவதால் இந்நதி யின் நீர் தொழுநோய் தீர்க்கும் தன்மையும் உடலை மெருகேற்றும் திறமும் பெற்றுள்ளது. நேராகக் கோயிலை நோக்கிச்செல்கிருேம். அதன் எதிரில் காணப்படுவது தெப்பக்குளம். கால் கை சுத்தம் செய்

யத் தெற்கேயுள்ள படிக்கட்டில் இறங்கிக் குளிக்கிறோம். "தெற்கண்ணும்பி மாதையன் சேவை" என்ற தமிழ், கன்னடக் கல்வெட்டுக்கள் இறங்குதுறையின் இரு மருங்கும் இரண்டிரண்டிடங்களில் காணப்படுகின்றன. கால் கை சுத்தம் பண்ணினதும் குளத்தைச்சுற்றி எங்கெங்கெல்லாம் இம்மாதிரியான கல்வெட்டு இருக்கிறது என்பதைப் பார்ப்போமே என்ற எண்ணத்தின் தூண்டுதலால் சுற்றி வருகிறோம். நான்கு இறங்கு துறைகளிலும், இரு ஓரங்களிலும், இரண்டிரண்டு இடங்களில்—மொத்தம் பதினாறு இடங்களில்—இவ்வாறான கல்வெட்டுகளைப் பார்க்கிறோம். பார்த்து மகிழ்ந்து கீழ்ப்புறப் படிக்கட்டில் ஏறுகிறோம். எதிர்ப்படுவது ஒரு சிறு கோவில். மாதேசுரன் கோயில் என்பர். குளம் கட்டிய மாதையனால் கட்டப்பட்டது இச்சிறு கோயில் போலும்! எதிரிலுள்ள பெரிய கோயிலை நோக்கி வருகிறோம். ஐந்தடுக்கு உடைய இராசகோபுரம் கம்பீரமாகத் தோற்றமளிக்கிறது. ஏறிட்டுப்பார்த்துச் சுதையாலான சிற்பங்களையும் கண்டு களித்துக் கோபுர வாயிலின் முன் மண்டபத்தைத் தாண்டி உட்புகுகிறோம். மண்டபத்தின் விதானம் எவ்வாறிருக்கிறது பார்க்கலாமே என்று தலைதூக்கிப் பார்த்தால் அழகிய சித்திரங்கள் நம் கண்ணைக்கவருகின்றன. அத்தனையும் பெரிய புராண வரலாற்றுப் படங்கள். அறுபத்துமூன்று நாயன்மார்களின் எழிலான திரு உருவங்கள் அளவிலா உவப்பில் ஆழ்த்துவனவாய் அவர்கள் வாழ்க்கையின் பொன்னான நிகழ்ச்சிகளையும் சித்திரத்தால் புரிந்து கொள்ளும்படி, சொல்லாமல் சொல்லுவனவாய்ச் சுவைபட எழுதப்பட்டுள்ளன. கொடி மரம் தாண்டி நடுநாயகமாய் விளங்கும் நந்தி எம்பெருமானிடம் விடைபெற்று நம் இடப்பக்கமிருக்கும் கணபதியையும், வலப்பக்கமிருக்கும் சண்முக சுப்பிரமணியரையும் வணங்கி உட்செல்கிறோம். முன் மண்டபம் விசாலமானது. வடபுறம் சிருங்க தீர்த்தம் உள்ளது. இறை

வனுக்கு நீராட்ட இது பயன்படுத்தப்படுகிறது. மகா மண்டபமும் அர்த்த மண்டபமும் இராசேந்திரதேவன் காலத்தில் பதினொன்றாம் நூற்றாண்டில் கட்டப்பட்டவை; பழமையானவை. கல்வெட்டுக்களுக்கு இக் கோயிலில் பஞ்சமில்லை. காணக் கண்ணும் ஒளியும் இருந்தும் கல்வெட்டைப் பார்த்தும் படிக்கத் தெரியாது



பிச்சாடனர்



ஆலங்காட்டுக் காளியம்மை

திகைத்துத் திரும்பும் மக்கள் பலருண்டு. தூணிலும் சுவரிலும், விட்டத்திலும், விதானத்திலும் எங்கு காணிலும் கல்வெட்டுக்களே. கன்னடக் கல்வெட்டுக்களும் சில உண்டு.

நல்ல உச்சிவேளை. உச்சிக்காலப் பூசைக்குப் படிகளைகின்றனர். அர்ச்சகர் அன்புள்ளம் கொண்டவர்.

இறைவனிடம் ஈடுபாடு உடையவர்களை எளிதில் அறிந்து இன் முகத்துடன் உள் அழைக்கிருர். அகமிக மகிழ்ந்து உட்சென்று கர்ப்பக் கிரகத்தின் சமீபத்தில் கைகுவித்து நிற்கிரேம். மூலவர் நன்கு காட்சி அளிக்கிருர். "பேரூருறைவாய்பட்டிப் பெருமான் பிறவா நெறியானே" என்று பாடினுர் சுந்தரர். திருவெண்ணெய் நல்லூரில் முதிய வேதியனுகி வந்து, முதலில் அவரைத் தடுத்தாண்ட மூர்த்தி இப்பேரூரில் பச்சை நாயகியாகிய பள்ளியுடன் பள்ளனுகி வயலில் வேலை செய்து அவருக்குக் காட்சி நல்கினுர். அக்காட்சி உயர்ந்ததும், தாழ்ந்ததும் தானே என்பதை உணர்த்த இறைவன் எடுத்த திருக்கோலம். இவர் மால் பிரமன்மற்றுமுள்ள தேவரெல்லாம் பூசித்த புண்ணியர். கச்சியப்ப முனிவருக்கும், சாந்தலிங்கப் பெருமானுக்கும் காட்சியளித்த கண்ணுதற் பெருமான். "ஆரூர் மூலத்தானம் ஆனைக்காவும்" என்ற க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்தில் "பேரூர் பிரமபுரம் பேராவூரும்" என்றும் "அஞ்சைக்களத்துள்ளார் ஐயாற்றுள்ளார் ஆரூரார் பேரூரார் அழுந்தூருள்ளார்" என்று திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்திலும் அப்பர் சுவாமிகளால் போற்றிப் புகழப்பட்டவர். சுவாமி சுயம்புலிங்க மூர்த்தி. சிவலிங்கங்கள் இறைவனுடைய அருவுருத் திருமேனிகள் எனப்படும். அவற்றில் பலவகையுண்டு. தலை சிறந்தது சுயம்பு. இவர் தானுகவே மூலத்தலத்தே முளைத்தெழுந்த சுயம்புமூர்த்தி. சிற்றுளிபட்டுச் செதுக்கப்படாதவர். முடியில் வடுக்கள் காண்கிரேம். என்ன! மூர்த்தியின் முடியில் வடு! என்று எண்ணிக் கேட்க வாயெடுத்ததைக் குறிப்பால் உணர்ந்த அர்ச்சகர் தல புராணச் சுருக்கத்தை வெகு அழகாக எடுத்தியம்பினுர். நீங்களும் தெரிந்துகொள்ளத் தருகிறேன்.

முன்பெலாம் இவ்விடம் அரச மரங்களடர்ந்து காடாய் இருந்ததால் 'பிப்பிலாரண்யம்' எனப் பெயர்

பெற்றது. அதில் ஆநிரை மேய்க்கும் இடையர், பசு ஒன்று தினமும் ஓரிடத்தில் பால் சுரப்பதைப் பலநாள் பார்த்து ஒருநாள் அதை நையப் புடைத்தனர். பசுவின் குளம்பு பட்டதால் இரத்தம் பீறிட இலிங்கத்தைக் கண்டு வடுவானதையறிந்து, வியந்து ஊராரிடம் உரைத்தனர். அதன் மூலமாய் ஒரு பெருங் கோயிலாய்



அகோர வீரபத்திர மூர்த்தி



யானையுரி போர்த்த மூர்த்தி

உயர்ந்ததென்பர். கச்சியப்ப முனிவர் இயற்றிய பேரூர்ப் புராணத்தில் 8,9 படலத்தில் காணக்கிடைப்பது; நாரத முனிவர் ஏவுதலால் ஆதிபுரி என்ற இப் பேரூரில் காமதேனு பட்டியிட்டும் ஆதிலிங்கமூர்த்திமீது பாலைப் பொழிந்து பூசித்து வரும்போது ஒருநாட் காலை காமதேனுவின் கன்று இலிங்கம் மீதிருந்த புற்றை மிதிக்க, உட்புகுந்த காலை எடுக்க முடியாததனால் இரு

கொம்புகளாலும் அப்புற்றைக் குத்தியழித்தது. அதனால் ஆதிலிங்கரின் முடியில் குளம்புகளும் கொம்புகளும் ஏற்படுத்திய வடுக்கள் அவை. துள்ளித்திரியும் இளங்கன்று பயமறியாதது. விளையாட்டால் விளைந்த வினையைக் குற்றமாய்க் கொள்ளவில்லை குணக்குன்றன இறைவன். இடபாரூடராய்க் காட்சி கொடுத்தது மட்டுமின்றித் தமக்கும் பட்டிப்பெருமான் (கோஷ்டீஸ்வரன்) என்ற பெயரை ஏற்றுக்கொண்ட ஈசனின் திறத்தை என்னென்று கூறுவது! 1928-ல் நடந்த கும்பாபிடேகத்தின்போது மூன்று ஆவுடையார்களைத் தோண்டியும் மூர்த்தியின் அடியைக் காண முடியவில்லையாம். திருமாலும் பன்றியாய்ச் சென்று உணராத் திருவடியாயிற்றே! எப்படிக் காணமுடியும் ?

கங்கையைச் சடைமுடியில் தரித்த கங்காளருக்கு "நல்லதில நெய்யாடி ஆனிடத்தைந்தாடி" என்ற முறைப்படி அபிடேகம் நடைபெறுகிறது. பாலாபிடேகம் வரும்போது வெள்ளியாலான பசுவை வைத்துப் பால் ஊற்றி மடியிலிருந்து திருமுடியில் பால் விழும்படி செய்கின்றனர். பார்த்து நிற்கும் பக்தர்கள் பரவசம் அடைகின்றனர். தல புராணத்திற்கு ஏற்றபடி அமைக்கப்பட்டுள்ளதை எண்ணி எண்ணி இன்பமடைகிறோம். அலங்காரம் தூப தீபங்கள் முடிந்தவுடன் அருச்சனை ஆரம்பம். பக்கத்தில் விளக்கம் கூறிவந்த தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் "விரும்பினால் தமிழிலும் அருச்சனை செய்யப்படும்" என்ற பலகையைச் சுட்டிக்காட்டினார். தமிழிலும் அருச்சனை செய்வீர்களா? என்ற கேள்வி அர்ச்சகரிடம் கேட்கப்பட்டது. "அருச்சனை பாட்டே யாகும், ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்ற பிரான் தென் மொழியையும், வட மொழியையும் இரு கண்ணாய்ப் பாவித்தான். அவனை எந்த மொழியிலும் பாடிப் பரவலாம். பக்திதான்

வேண்டும் என்று கூறி "வேற்ருகி விண்ணுகி நின்ருய் போற்றி" என்ற கயிலாயப்பதிகத்தை நின்று, நிறுத்தி, சுத்தமாக, தெளிவாக எல்லோரும் வியக்கும்படி, விளக்கமாக ஓதி மலரிட்ட மாட்சி மனதை விட்டகலாக் காட்சி.

ட்பிரகாரம் சுற்றி வருகிருேம். அறுபத்து மூவரும் சிலாரூபத்தில் தென் பிரகாரத்தில் எழுந்தருளியுள்ளனர். மேற்குப் பிரகாரத்தின் மத்தியில் இக்கோயிலின் தலவிருட்சமான பனீர் மரமொன்று பூத்துக்குலுங்கி மணம் பரப்பி நிற்கிறது. வடக்குப் பிரகாரத்தில் மேற்கு ஓரத்தே சுப்பிர



பேரூர் கனகசபையிலுள்ள
தாண்டவ விநாயகர்

ருடன் காட்சியளித்துக் கொண்டிருக்கிருர். சண்டேசுரரையும் சுந்தரரையும் சேரமானையும் வணங்கி வெளிப் பிரகாரம் வருகிருேம். மேற்குப் பகுதியில் மேற்குத் திசையை நோக்கியிருக்கும் தண்டபாணி மேம்பட்டவர். "தீராப் பிணி தீர சிவாத்துமஞான, ஊராட்சியதான ஓர் வாக்கருள்வாயே, பாரோர்க்கிறைசேயே பாலாக்கிரி ராச பேராற் பெரியோனே பேரூர்ப் பெருமாளே" என்றும் "பட்டியாள்பவர் கொட்டியாடினர் பாருராகும் பேரூராள்வார் பெருமாளே" என்றும் அருணகிரிநாதர்

இவரைப் போற்றியுள்ளார். கலியுகவரதன், கண்கண்ட தெய்வம், நாடி வந்தவர் நலிவைத் தீர்க்கும் நல்ல தெய்வம். காசி விசுவநாதர் விசாலாட்சியின் நடுநாயகமாய்த் திகழும் மூர்த்தி. தண்டபாணித் தெய்வத்தின் முகத்தழகும் திருவடியழகும் எடுத்து எழுத முடியாதவை. வடிவழகன் அவ்வடிவேலன். முதற்சுற்று சுற்றி வந்து இறைவியின் திருக்கோயிலுள் நுழைகிறோம். நுழையுமுன் நம் கண்ணிற் படுவது வட பக்கமுள்ள வரதராசப் பெருமாள் சந்நிதி. நின்ற திருக்கோலம். திருத்துழாயும் தீர்த்தமும் சடகோபமும் சாதித்தலுண்டு. தென்புறம் இருப்பவள் துர்க்கை. எட்டுக் கைகளையுடையவள். எழில் உடையாள் இவளுக்காக எதிரிலுள்ள நடராசர் நடனம் ஆடிக் கொண்டிருக்கிறார். திருவாலங்காட்டில் ஆலங்காட்டுக் காளிக்காக ஆடலரசு எப்படி நடனமாடுகிறாரோ, அது போன்றே இங்குந் துர்க்கைக்காக ஆடுகிறார். இச்சந்நிதிக்கு நேராகக் குஞ்சிதபாதத்தை அவள் காண ஓர் சன்னல் கனகசபையிலுள்ளது.

இறைவியின் கோயிலில் மகாமண்டபம் தாண்டி அர்த்தமண்டபத்துள் நுழைகிறோம். அகிலத்தையே பெற்றெடுத்தும் அழியாக்கன்னியவள். என்றும் இளையாள். இனிய முகத்தாள். அவளுடைய சுந்தரப் பொலிவு சொல்லும் தரமன்று. திருவுருவம் சுமார் நான்கடி உயரமிருக்கும். இரண்டு கைகள்; வலக்கை அபயமளிக்கிறது. இடக்கை திருவடியைச் சுட்டுகிறது. எடுப்பான பீடம். பச்சைநாயகி என்று தென் தமிழிலும், மரகதவல்லி என்று வட மொழியிலும் இம்மலை மங்கை அழைக்கப்படுகிறாள். இவளுக்கு எண்ணற்ற பாமாலைகள் சூட்டப்பட்டுள்ளன. பிள்ளைத்தமிழ் இரண்டுண்டு. நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன் ஓராட்டுக்குப்பை முத்துநைநாத்தை முதலியாரும், இருபது ஆண்டுகளுக்கு முன்பு சிரவணபுரம் கௌமார



கனகசபைக் கற்றூண் (வீரப்போர்க் காட்சி.)

மடம் கந்தசாமி சுவாமிகளும் அவற்றை இயற்றிச் சூட்டினர். கோவை சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் தந்தையார் வித்துவான் கந்தசாமி முதலியார் மரகதவல்லியம்மன் மாலை, பச்சைநாயகியார் ஊசல் முதலியன பாடி அணிவித்துள்ளனர். இறைவன் சந்நிதிக்கும் இறைவி சந்நிதிக்கும் இடையில் சோமாஸ்கந்த மூர்த்தி எழுந்தருளியிருக்கும் கல்யாண மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தில் வீற்றிருக்கும் ஐந்து உற்சவமூர்த்தங்கள் கண்ணையும் கருத்தையும் கவரும் கவினழகு படைத்தவை. அறுபத்துமூவர் உற்சவமூர்த்திகள் தென்பகுதியில் எழுந்தருளியுள்ளனர். இத்திருவுருவங்களில் நாற்பது சிவக்கவிமணி அவர்களால் பல அன்பர்களின் பொருளுதவியால் செய்து வைக்கப்பெற்றவை. வெள்ளிக்கிழமைகளில் அம்மனுக்கு இங்குத் திருவூசல் விழா நடைபெறும்.

அடுத்து நாம் செல்ல இருப்பது அடுத்துள்ள கனகசபைக்கு. உட்செல்லுமுன் ஒரு வார்த்தை. தென்னாடு கோயில்களால் சிறந்தது. அக்கோயில்களும் சிற்பங்களால் சிறப்படைகின்றன. சோற்றுக் கவலையில்லா திருந்ததால் கலைகளையே எண்ணி வாழ்ந்த தமிழர்கள் கல்லில் கலையை வடித்தனர். வடிவழகைக் கொடுத்தனர். வடித்துக்கொடுத்த பெருமக்கள் மறைந்தாலும் வடிவழகுடைய சிற்பங்கள் நம்மோடு இன்றும் பேசுகின்றன. பேரூர், பெரியபாளையம், தாரமங்கலம், தாடிக்கொம்பு என்ற ஊர்களிலுள்ள கோயில்கள் ஒரே காலத்தில் ஏற்பட்ட ஒற்றுமையுடைய கொங்கு நாட்டுச் சிற்பக் கருவூலங்கள் என்பார். பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விஜயநகர அரசர்களும், பின் மைசூராரும் கொங்கு நாட்டை ஆண்டனர். ஆனால் பதினோராம் நூற்றாண்டில் கொங்குநாடு பல துறைகளிலும் மேம்பட்ட பழம் பாண்டி நாட்டு அரசர்களின் ஆளுகைக்குள்

வந்தபின்தான் இக்கருவூலம் ஏற்பட்டது. 1625—1659-ல் ஆண்ட திருமலை நாயக்கரின் உறவினரும் பிரதிநிதியுமான அளகாத்திரி நாயக்கரால் கட்டப் பட்டது இக்கனகசபை. துப்பாக்கி தூக்கிய கையுடன் நுழைவாயில் தூண்கள் இரண்டில் வீரர் இருவர் காட்சியளிக்கின்றனர். பிற்காலத்தே கட்டப்பட்ட தென்பதற்கு இக்காட்சி ஓர் சான்றாகும்.

கனகசபையில் உள் நுழைந்தால் சிறுசிறு சிற்பச் சிலையும் ஒவ்வொரு புராணக் கதையை அல்லது உண் மையை அல்லது இறை தத்துவத்தை உணர்த்திக் கொண்டிருக்கும். அண்ணாந்து பார்த்தால் அட்டவிரட் டான சித்திரங்களின் நடுவே ஒரே கல்லில் செதுக்கப் பட்ட சுழல் தாமரையும் நாற்புறமும் இரும்புச் சங்கி லியோ என ஐயுறுமாறு தொங்கும் எட்டுக் கற்சங்கிலி களும் கருத்தையும் கவனத்தையும் ஈர்க்கின்றன. எட்டுப்பாம்புகளின் உடலின் நடுவே இணைக்கப்பட்டுத் தொங்கும் இச்சங்கிலிகள் சதுரத்தின் முனைகளி லுள்ளன. எட்டு உட் சதுரங்களில் எட்டுத் திக்குப் பாலகர்கள் எழிலுடன் காணப்படுகின்றனர். மத்தியில் அமைந்துள்ள தாமரையைச் சுற்றிலும் எட்டுக் கிளிகள் சம தூரத்தில் வட்டவடிவமாய் அமர்ந்துள்ளன. அவை அழகுக்கு அழகு ஊட்டுகின்றன. சதுரத்தின் மேற்குப் பக்கம் மன்மதனும், கிழக்குப் பக்கம் இரதியும் காட்சி கொடுக்கின்றனர். எப்படித்தான் செதுக்கினாரோ ! சிற்றுளியின் தரந்தானோ ? சிற்பியின் கைத்திறமோ ! அற்புதம் ! அற்புதம் ! ! என வியந்து தலையைக் கொஞ் சம் இறக்கிச் சுற்றிலுமுள்ளவற்றைச் சற்றே உற்று நோக்குகிறோம். புராண வரலாறு புதைந்த சிற்பங்கள் ; நடனக் கலையை ஆடி விளக்கும் நடன மாதர் சிலைகள், வேடந் தாங்கிய வேறு பலரின் உருவங்கள் இருவரி சையிலுள்ளன. அவற்றின் மூலம் அக்காலத்திய மக்கள், அவர்களின் நடை, உடுத்திய உடை, அணிந்த

ஆபரணங்கள், உபயோகித்த பொருள்கள், பயன்படுத்திய வாத்தியக் கருவிகள் ஆகியவற்றை நம்மால் அறிய முடிகிறது.

தூண்களைச் சற்று ஆராய்வோமா? இம்மண்டபத்தில் வரிசைக்கு நான்காக ஏழு வரிசைகளில் இருபத்தெட்டு தூண்களுள்ளன. மத்தியில் உள்ள இரு வரிசையான '' தூண்கள் பதினான்கும் நம்மை ஈர்ப்பதில் ஒன்றை ஒன்று முந்துகின்றன. மண்டப நடை ஏறியதும் முதல் இரண்டு தூண்களில் நம் கண்ணிற் படுவன வீரக்காட்சிகள்—யானையின் துதிக்கையைப் பிடித்துக்கொண்டு அதன்மீது நிற்கும் யாளி; யாளியின் மீதமர்ந்த வீரன்; அவன் ஈட்டி எறிந்து போரிடும் வீரப் போர்க்காட்சி. அடுத்திருப்பது யானை யுரி போர்த்த மூர்த்தி. ஒரே கல்; வழவழப்பானது; வட்ட வடிவமானது; கல்லைக்குடைந்து செதுக்கப்பட்டது. ஒருகாலைத் தூக்கி, மறுகாலை யானையின் தலையிலூன்றி, அதனுடலால் தன்னைப்போர்த்தி, மூர்த்தி நின்று கொண்டிருக்கிறார். எட்டுக் கரங்களுடன் எடுப்பாய் மிடுக்குடன் திகழ்கிறார். நான்கு பக்கங்களிலும் யானையின் கால்கள் அதன் உடலுடன் தொங்குகின்றன. மூர்த்தியின் முகத்தழகும், வார்காதுகளின் வளையங்களும், ஆபரணங்களின் வகைகளும் இடுப்பிலிருந்து தொங்கும் தலைமாலையின் தனித்தோற்றமும் வியப்பிலாழ்த்துகின்றன. யானைக்காதிலோடும் நரம்புகளும் மூர்த்தியின் நகங்களும் கூட நம் கவனத்தைத் தம்பால் இழுக்கின்றன. கனகசபையின் வெளியே கீழ் மண்டபத்து இரண்டாவது தூணில் இச்சிற்பத்தின் சிறு மாதிரி வடிவொன்று காணப்படுகிறது. வரைபடம் வரையும் மாணவன், மாதிரி ஒன்று முதலில் வரைந்து பார்த்துத் திட்டமிட்டுப் பின் கருதியதைக் கணக்காய் வரைந்து முடிப்பது போன்று யானை யுரி போர்த்த மூர்த்தியின் சிலை செதுக்கு முன் அச்சிற்பி அவ்வுருவத்



கனகசபையிலுள்ள அக்கினி வீரபத்திரர்

தைச் சிறியதாய்ச் செய்து சிந்தையில் எண்ணிய கருத்திற்கு உருவம் கொடுத்துக் கணக்கிட்டிருப்பான் போலும்! அடுத்த தூணில் கிழக்கு நோக்கி எடுப்பாயிருப்பவர் அக்னி வீரபத்திரர். தலைக்கு மேலான நீண்ட சூலத்தால் அரக்கனின் மண்டையில் குத்தும் காட்சி. வீரம் செறிந்த முகம். வெற்றிச் சிறப்புடைய கண்கள். அங்கங்கள் ஒவ்வொன்றும் அழகுறப் படைக்கப்பட்டுள்ள அக்னிவீரபத்திரர் சடையில் தேளொன்று காணப்படுகிறது. இறைவன் சடை முடியில் தேள் உண்டு என்றியம்பும் உபநிடத நூலை இச்சிற்பி கற்றிருக்கிறன் என்பதை நாசுக்காக நமக்குப் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது அத்தேள். தலைக்கு மேல் காலைத்தூக்கி ஆடிக்கொண்டிருக்கும் ஊர்த்துவ தாண்டவரை அடைகிறோம். பெண்மை நாணித் தலைகுனிந்து தோல்வியை ஒப்புக்கொள்ளும்படிச் செய்த பெருமிதத்தையும் மூர்த்தியின் முகத்திலே காணுகிறோம். முயலகனின் முதுகிலூன்றியுள்ளது ஒரு பாதம். பதினாறு கைகளையும் பார்த்துத் திகைக்கிறோம். அறுமுகனும் சங்கு சக்ரதாரியும் முறையே கைகட்டியும், உடுக்கை தட்டியும் ஓரத்தே நிற்கின்றனர். அவர்களின் மத்தியில் எடுத்த பாதத்தின் அடியில் “பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும்; இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்து பாடி அறவா! நீ ஆடும் போதுன் அடியின் கீழ் இருக்க” என்று வரம் வேண்டிய காரைக்காலம்மை நிற்கிறார்.

அம்மையார் “கொங்கைதிரங்கி நரம்பெழுந்து குண்டுகண் வெண்பற்குழி வயிற்றுப் பங்கி சிவந்திரு பற்கள் நீண்டு பரடுயர் நீள்கணைக்காலோர் பெண்பேய் தங்கி அலறி உலறுகாட்டில் தாழ்சடை எட்டுத்திசைகள் வீசி அங்கங் குளிர்ந்தனல் ஆடும் எங்கள் அப்பன் இடந்திரு ஆலங்காடே” என மூலம் காண்பரிய மூர்த்திடம் போற்றி நம்மிடம் மூத்த நற்பதிகம் கூறுவது

போன்று அடக்கமாய், அமைதியாய், ஆனந்தத்தில் ஆழ்ந்து நிற்கிறார். பக்கத்துத் தூணில் ஐங்கரக்கடவுள் மூஷிகத்தின்மீது பாங்காய் வலது காலைத் தூக்கி ஆடிக் கொண்டிருக்கிறார். துதிக்கை வலதுபக்கம் சுருண்டிருப் பதால் சீரும் சிறப்பும் உடையவர். மூர்த்தியின் இளந் தொந்தியை எத்தனை தரம் தொட்டனுபவித்தாலும் விட்டுவர விருப்பமில்லை. அவருக்கு எதிரேயுள்ள அறு முகன் பன்னிரு கைகளுடன் மயிலேறி மடக்கிய இடது காலுடன் அமர்ந்து அநுக்கிரகிக்கிறார். மேற்கு நோக் கிய திருவுருவங்களில் அறுமுகனுக்கு அடுத்து இருப் பது ஆலங்காட்டுக் காளியம்மை. நடம் ஆடும் நல்ல திருக்கோலம். இடையைச் சுற்றியுள்ள ஆபரணங் களும் கபால மாலையும் எட்டுக் கரங்களிலும் ஏந்திய கரு விகளும் மடிப்புக்களுடைய உடையும் மணிமகுடமும் சிலம்புகளும் தண்டைகளும் சிற்ப அழகுக்கு அழகு செய்கின்றன. எதிரேயுள்ள ஊர்த்துவ தாண்டவமூர்த் தியின் எடுப்பான தோற்றத்தை நோக்கும் இறைவி நாணத்தால் தலை கவிழ்ந்திருப்பது நன்கு புரிகிறது. குனிந்த முகத்தால் ஓரக்கண்ணால் உற்று நோக்கு கிறாள். ஒரு மூலையிலிருந்து பார்த்தால் சாந்தம் தவழ் கிறது. மறு மூலையிலிருந்து பார்த்தால் கோபம் பீறிடு கிறது. கண்ணின் அமைப்பால் அவளைக் காணுவோர் பெறும் இரு பேறு இவை. பக்கத்துத் தூணில் அகோர வீரபத்திரர் முன்னிற்கப் பயந்து மூலையில் நின்று பார்க் கிறோம். அரக்கனின் நெஞ்சிற்பாயும் வாள் அரவின் நெஞ்சுறுதியையும் வீரத்தையும் நமக்கறிவிக்கின்றது. இளமைத் துடிப்பையும் அதில் இணைத்துச் செதுக்கி யிருப்பது போற்றத்தகுந்தது.

முறுக்கான மீசை; மிடுக்கான பார்வை. கிரீடம் முடியையும் போர்க் கருவிகள் கைகளையும் பாதக் குறடுகள் பாதங்களையும் நம் நினைவினின்று நீங்காது இடம் பெற்றுவிடச் செய்கின்றன. பிச்சாடனர் உருவம்



கனகசபைக் கற்றூண் (யானையின் துதிக்கையைப் பிடித்து நிற்கும் யாளி. அதன்மீது போர்வீரன்.)

உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விடுகிறது. கல்மன துடைய நாமே கரைந்துருகும் நிலை என்றால் முனிபத் தினிமார் மனம் மருண்டதில் வியப்பில்லைதான். துள்ளி வரும் யாகசாலை மானுக்கு இறைவன் உணவளித்து நிற்கிறார் நிர்வாண நிலையில். திருவோட்டில் உண வைச் சுமந்து நிற்கும் பூதத்தின் முகத்தில் புன்னகை தவழ்கிறது; பொலிவு மிளிர்கிறது. ஊரெல்லாம் அட்ட சோற்றைச் சுமந்து எத்தனை நாள்தான் இப்படி நிற்பது என்ற எண்ணம் எள்ளளவும் இல்லாததால் ஏற்படும் நிறைவையும் இறைவனுடன் இணங்கி அருகி லேயே அணுக்கத் தொண்டனாய் நிற்பதால் ஏற்படும் எக்களிப்பையும் நாம் உணரும்படி சிற்பி செதுக்கி யுள்ளான்.

இச்சிற்பங்கள் ஒவ்வொன்றும் தனித்தனியே ஒரே கல்லால் ஆனவை. ஒவ்வொன்றையும் மும்மூன்று பூதங்கள் தம் தலையால் சுமந்து கொண்டிருப்பதுபோல் அமைத்துள்ளனர். தூணின் மற்றைய மூன்று பக்கங் களிலும் தொடர்புடைய சிறுசிறு வடிவங்களை அமைத் திருப்பது (நடனமாடும் தெய்வங்களின் மற்றை மூன்று பக்கங்களிலும் நடனத்திற்கேற்ப மத்தளம் கொட்டும் சிற்பம், பிச்சாடனரின் பக்கங்களில் முனிபத்தினிமார் நிலையழிந்து கலைசோரக் கரண்டியுடன் நிற்கும் சிற்பம்) சிற்பக்கலைக் களஞ்சியமாய்க் காட்சியளிக்கிறது. தேவர்களின் வடிவங்கள் உண்டு. மானிட உருவங் களும் உண்டு. தாம்பத்திய வாழ்வுக்கான படிப்பினை நடத்திக்காட்டும் சிற்பங்களும் சில உண்டு. அக் காலத்தே மக்கள் இவற்றைப் பார்த்துத் தெரிந்து கொள்ளட்டுமே என்று எண்ணிச் செதுக்கிவைத்திருப் பார்கள் போலும். பூரி ஜகன்னாதர் கோயில் கோபுரத்தில் இத்தகையவை எத்தனை எத்தனையோ உண்டு.

ஆடும் ஆடலரசரின் கனக சபைக்குள் நுழைவோமா? சிவகாமசுந்தரி சிரித்த முகத்துடன் நம்மை வாழ்த்தி இறைவனைக் காட்டுகிறாள். இறைவனோ குஞ்சிதபாதத்துடன் அங்கையில் அனலேந்தி மறு கையில் உடுக்கையுடன் காட்சியளிக்கிறான். கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்புடன் 'எப்போதிங்குற்றாய்?' எனக்கேட்பது போன்று கனிவுடன் காணப்படுகிறான். இறைவனையும் இறைவியையும் முற்றும் காண இரு கண் போதாது. ஒவ்வோர் உறுப்பின் அழகையும் ஆய்ந்தறிய, அழகின் ஆழத்தை அளக்க வாழ் நாளும் போதாது.

"பாரூரும் அரவல்குல் உமை நங்கையவள்
பங்கன் பைங்கண் ஏற்றன்
ஊரூரன் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆரூரன் தம்பிரான் ஆரூரன் மீ
கொங்கில் அணி காஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்
சிற்றம்பலத்தே பெற்றாம் அன்றே."

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் இந்தப் பெருமானைச் சிதம்பரத்தில் "பெற்றாம் அன்றே" எனக் கூறிப் பாடி மகிழ்கிறார். நாமும் அப்பாடலை ஓதித்துதித்து நடராசரை உள்ளே வலம் வரலாம். நான்கு தூண்கள் அந்நல் மாடத்தைத் தாங்கி நிற்கின்றன. தாய்வாழை பக்கக்கன்றுகளுடன் நிற்பது போன்று நான்கு தூண்களிலும் பெரிய தூண் ஒன்றைச் சுற்றிலும் மூன்று சிறிய தூண்கள் உள்ளன. அவ்விளஞ் சிறிய தூண்கள் பெரும் பாரத்தைத் தாங்காது கொண்டை வளைந்து நிற்கின்றன.

உற்ற இடத்து உயிர் வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ-கற்றூண்
பிளந்து இறுவதல்லால் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்" (ஔவையார்)

என்ற பாடலைப் பொய்யாக்கித் தன் கற்பனையை மெய்யாக்கி, வடித்திருக்கும் சிற்பியின் திறத்தை என்னென்றுரைப்பது? விடையேறும் வித்தகனிடம் விடைபெற்றுக் கோமுனி, பட்டி முனிகளை வணங்கி இறங்கும்போது கீழ்ப்பக்கம் அடுத்துள்ள வெளித் தூணில் ஒரு சிற்பம் உடைக்கப்பட்டு நீண்ட கல்லின் தாங்கலால் நிற்பதைக் கண்ணுறுகிரும். இதன் இணையான மறுபக்கமுள்ள தூணில் இளம் வீரன் புரவியின் மேல் அமர்ந்து புலியைக் குத்துகிருன். அது போன்றே இத்தூணிலும் இருந்திருக்க வேண்டும். உடைப்பதற்கான காரணம் காட்டும் கர்ண பரம்பரைக் கதை ஒன்றுண்டு. மைசூர் இராஜ்யத்தில் பேலூர் விநாயகர் வயிற்றுக் குழியில் தேரை இருந்ததை, கல்லைத் தட்டிப் பார்த்து உண்டான ஒலியினுலறிந்து, கோயில் கட்டிய ஜகணுசாரியின் குற்றத்தை உணர்த்திய அவன் மகன் தக்கணுசாரியின் கதை போன்றது இது. தேரை இருக்கும் கல் கோயிலின் உள்ளிருக்கக் கூடாது என்பது சிற்பசாத்திரத்தில் கல் ஆராய்ச்சியில் முதற் பாடம். சந்தனக் குழம்பைச் சாத்தி அது உலரா இடத்தை உடைத்துச் சிற்பியின் மகன் தேரையை வெளிப்படுத்தியதால் அவ்விடம் வெற்றிடமாய்க் காட்சி யளிக்கிறதென்பதை



"உடைபட்ட கற்றூணுக்கு இணையான மறுபக்கமுள்ள தூண்"

யறிகிறோம். இது போன்ற கதை உட்கல (ஒரிசா) நாட்டுக் "கோனார்க்" சூரியனார் கோயிலிலும் வழங்கப் படுகிறது.

இனிப் பேரூர்ப் பெருமையைப்பற்றி வேறு சில செய்திகளையும் தெரிந்துகொள்வோமா? பிரமன் பூசித்த வடகயிலாயமும் அவன் கமண்டலத்தால் உண்டாக்கிய பிரம தீர்த்தமும் இத்தலத்தில் உள்ளன. அவ்விறைவன் சித்தத்தைச் சிவமாக்குகிறான்; உயிரைப் பற்றிய மலத்தை நீக்கி முத்தியைக் கொடுக்கிறான். அத்தீர்த்தமும் சித்தப் பிரமையை நீக்குகிறது. செம்பைக் களிம்பேறாத தாக்குவதுடன் பொன் படிந்து மிளிரச் செய்கிறது. தென் கயிலாயம் விஷ்ணுவால் தோற்றுவிக்கப் பெற்றது. அரசம்பலவாணர் கோயில் அகிலம் புகழ்வது. புராண முக்கியத்துவம் பெற்றது. பெரும் புகழுடையது. காலவ முனிவர் வழிபட்ட மூர்த்தியுள்ளது. இங்கு உள்ள அம்பிகையின் பெயர் அகிலாண்டேசுவரி. நான்கு கைகளுடன் நான்கரை அடி உயரம் உள்ள மிக அழகான மூர்த்தம். ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் இக்கோயிலில் தேர்த் திருவிழா நடைபெறுகிறது. இவ்விழா சிவக்கவிமணி அவர்கள் அவரது குடும்பச் சொத்திலிருந்து ஏற்படுத்திய தருமத்திலிருந்து நடைபெற்று வருகிறது. பின்தெருவிலுள்ள பட்டிவிநாயகர் கோயில் பழமையானது. நச்சுப்பொய்கையின் மேலுள்ளதாய் நம்பப்படுகிறது. இத்தலத்தில் இறக்கும் உயிர்களுக்கு இறைவன் முத்தியைக் கொடுப்பதால் இது ஒரு முத்தித் தலமாகும். ஆகையால் தம்பிரான் தோழரான சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இறைவன் இங்கு பொன்கொடுக்க மறுத்து "நின் பாட்டிற்கு நமதாட்டமே பரிசில். மற்றைய தலங்களில் பொன் தருவோம். சேரமானுக்குச் செய்தியறிவிப்போம்" என இறைவன் இயம்பியதைத் தலபுராணப்

பள்ளுப் படலத்தில் பார்க்கின்றோம். இதுபற்றிய விழா "நாற்று நடவு உற்சவம்" என்ற பெயரில் ஆண்டு தோறும் ஆனித்திருமஞ்சனத்திற்குப் பத்து நாட்களுக்கு முன்பு தொடங்கித் தனி விழாவாக நடைபெறுகிறது. இதை நிறுவியவர் சிவக்கவிமணி அவர்களின் தந்தையார் கந்தசாமி முதலியார்.

பிறவாப்புளி, இறவாப்பனை என இரு மரங்கள் உள்ளன. கோயிலின் முன்புறமுள்ள புளிய மரத்தின் விதை முளைப்பதில்லை. பிரமதீர்த்தக் கரையிலுள்ள பனை இறப்பதில்லையாம்.

கூடலில் சங்கத் தமிழின் தலைவனாய் வீற்றிருந்து தமிழாராய்ச்சி செய்த தனிப்பெருந் தெய்வமல்லவா சிவபிரான்?

" போதி நிழலிற் புக்கருளிப் பொருந்த மன்றமெழுகவெனச்
சோதி மலர்ந்த திருவாயாற் சொன்னார் மன்ற
மெழுந்ததே"

—பேரூர்ப்புராணம் நிருத்தப்படலம்.

என்பதற்கேற்ப ஆடும் மன்றத்துக் கிணையாய்த் தமிழாராயும் மன்றம் ஒன்றும் முன்பு எழுந்தது. இப்போது இப்பேரூரில் தமிழ் வளர்க்கும் கல்லூரி ஒன்று உள்ளது. பல முனிவர்கள் வாழ்ந்ததல்லவா இப்பேரூர்! முந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் சாந்தலிங்க அடிகளார் என்ற முனிபுங்கவர். வீர சைவர். கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்ற நான்கு ஞான நூல்களை மொழிந்தவர். அருள் ஞானக் குரவர் சந்ததியாய்க் குமாரதேவரையும், பேரூர்ச் சிதம்பர சுவாமிகளையும் உருவாக்கிக் கொடுத்த உத்தமர். அவர் சமாதிகொண்டருளிய இவ்விடத்தில் அவர் பெயரால் தமிழோடு சைவத்தையும் இக்கல்லூரி பரப்பி வருகிறது. கவிராட்சச

கச்சியப்ப முனிவரின் குருவாயும், திருவாவடுதுறை ஆதீனத்து மாதவச் சிவஞானயோகிகளுக்கு ஞானாசிரியராயும் திகழ்ந்த, பின்வேலப்ப தேசிகரின் ஞான சமாதியும் வடக்கு இரதவீதியில் திருவாவடுதுறை ஆதீனத்துத் திருமடத்தின் பின்புறம் அமைந்துள்ளது.

பல பெயர்களை உடையது இவ்வூர். அவற்றுள் சில; ஆதிபுரி, ஞானபுரி, மேலைச் சிதம்பரம், வன்மீக புரி, தேனுபுரி என்பன. இங்கு உள்ள தீர்த்தங்கள்: காஞ்சி என்னும் நொய்யல் நதி. காலவ தீர்த்தம், பிரம தீர்த்தம், சிருங்க தீர்த்தம். தலவிருட்சம்: பன்னீர் மரம். நடக்கும் உற்சவங்கள்: பங்குனியில் பிரம்மோற்சவம், ஆண்டொன்றில் நடக்கும் பத்து நடராஜ அபிஷேகங்கள். மார்கழியில் நடக்கும் திருவாதிரைத் திருமுழுக்கும், பங்குனி உத்திர அபிஷேகமும் திருவீதியுலாவும், நாற்று நடவு உற்சவமும் குறிக்கத்தக்கன. மூர்த்தி, தலம், தீர்த்தம் எனும் மும்மைச் சிறப்புமுடையது. இம்மை, மறுமை, வீடுபேறெனும் மும்மைப் பயனில் வீடுபேற்றைத் தரத்தக்கது. இவ் வெள்ளியம்பலத்தே நடராசர் சிதம்பரத்தில் நடம்புரிவது போன்று விருப்புடன் ஆனந்தத் தாண்டவம் ஆடிக்களிக்கிறார். பட்டிப்பெருமானும் பச்சை நாயகியும் தம்மை நாடி வந்தவர்கட்கு முத்தி அருள் பாலித்துக் கொண்டிருக்கும் கண்கண்ட மூர்த்தங்கள். ஆனந்தத் தாண்டவத்தைப் பற்றித் திருமூலர்,

“புளிக்கண்டவர்க்குப் புனலூறு மாப்போல்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர் நெஞ்சுருக்கும்
ஒளிக்குள் ஆனந்தத் தமுதூறும் உள்ளத்தே”

என்று கூறுகிறார். அப்பாட்டின் பொருளாய் விளங்கும் இப்பேரூர் நடராசரை நாம் பார்க்கும் போதெல்லாம் நம் உள்ளம் ஆனந்தத் தமுதத்தில் ஊறித் திளைக்கிறது!



மருதமலை-கோயில் முகப்பு

# மருதமலை

ஆறுமுகனின் படை வீடுகள் ஆறு. திருமுருகாற்றுப் படையிற் கண்டபடி திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவிநன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர்சோலை என்பன அவை. தொல்காப்பியம் நிலப்பகுப்புக் கூறுமிடத்து "மாயோன்மேய காடுறை உலகமும், சேயோன் மேய மைவரை உலகமும்" எனப் பகுத்துக் கூறுகிறது. மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும். குறிஞ்சித் தலைவன் குமரன். "குன்றுதோருடலும் நின்றதன் பண்பே" என்பது நக்கீரர் வாக்கு. "சேயோன் மேய மைவரை உலகம்" என்றல், செங்கேழ் - செந்நிற முருகன் காதலித்து வான் தங்கியவரை (மலை) சூழ் உலகம்" என்பது பொருள். நச்சினார்க்கினியரும் குறிஞ்சி நிலத்திற்குக் குறவர் முதலியோர் குழீஇ வெறியயர்தற்கு வேண்டும் பொருள் கொண்டு, வெறியயர்ப வாகலின், ஆண்டு முருகன் வெளிப்படும் என்றார். அத்தகைய குன்றுதோருடும் குமரன் குடிகொண்டுள்ள மருதமலைக்கு உங்களைக் கூட்டிச்செல்ல நினைக்கிறேன்.

கோயமுத்தூருக்கு வடமேற்கில் காணப்படும் மேற்குத் தொடர்ச்சி மலையின் மத்தியில் சுமார் 500 அடி உயரத்தில் ஒரு அழகிய பீடபூமியில் ஆலயம் அமைந்துள்ளது. இரவில் பார்த்தால் முத்துத் தொடர் மலைஅடிவாரத்திலிருந்து அக்கோயில் முடி

வரை தொடர்ந்து தொங்குவது போன்று தோன்றும். படிகளின் ஓரத்தே ஒளிரும் வண்ண விளக்குகள் அக்காட்சியை ஈந்து காணுவோர் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றன. கோவையிலிருந்து எழில்மிகு இக் கோயிலுக்கு ஏழரைக்கல் தொலைவு இருக்கிறது. நெடுஞ்சாலை ஒன்று நேராக நம்மைஅழைத்துச் செல்கின்றது.



தலவிருட்சம்

அடிவாரத்தே சிறு முன்மண்டபம் நம்மை வரவேற்கிறது. அதனருகில் சற்றே உயரத்தில் 'தான் தோன்றி விநாயகர்' மலைமேலுள்ள ஆலயத்தை நோக்கி அமர்ந்திருக்கிறார். மலையேறுகிறோம். கரடு முரடான கற்பாறைகளைக் கால்கடுக்கக் கடக்க வேண்டாம். சிற்றுளி பட்டுச் சீராயமைந்த படிக்கட்டில் எடுத்து அடி வைத்து ஏறுவதே ஒரு தனி இன்பம். வயது முதிர்ந்தோரும், இளைத்தோரும், இளையாரும் வருந்தாது ஏறுகின்றனர். இறைவனை எண்ணி நடக்கின்றனர். வாய்விட்டு அவன் நாமம் கூறி வருத்தம் தெரியாது ஓடுபவர்களும் உண்டு.

களைப்புத்தீர உட்கார இடை இடையே மண்டபம் அமைத்துள்ளனர். மலையின் நடுவில் இடும்பன் கோவில் உண்டு. வட்டமான பெரிய பாறையின்

முன்பு காவடி தூக்கிய இடும்பன் இரண்டடி உயரத்தில் காட்சியளிக்கின்றான். பிள்ளைவரம் வேண்டுவோர் சிறு துணியில் தூளிகட்டிப் பூச்ச மரத்திலும், கோடாரி முறி மரத்திலும் தொங்கவிட்டுச் செல்கின்றனர். "மருதமலை திருஅருணகிரிநாதர் அருள் நெறிக் கிருத்திகைக் கழகம்" அமைத்துள்ள அழகான முன் மண்டபத்தில் எழுதப் பெற்றுத் திகழும் திருப்புகழும், கந்தரலங்காரமும் அனுபூதியும் நம் கண்ணை ஈர்க்கின்றன. கருத்தொன்றிப் படிக்க வைக்கின்றன. இடும்பன் கோவிலில், அம்முன் மண்டபத்தில் கீழ்க் காணும் பாடலையும் பார்க்கின்றோம் :—

மருதமலை இடும்பா வம்புசெய வேண்டா
ஒருபலியும் நீயேற்க ஒண்ணு — தருள்மிகுநம்
செவ்வேளடிமைத் திருமுடையார்க் கூறுமோ ?
இவ்வேளை ஈதுரைத்தேன் யான்

—வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

மேலே ஏறுகிறோம். மலை முகட்டின் மேல் மேகக் கூட்டம் முட்டுகிறது. மப்பும் மந்தாரமும் மனதிற்கு மகிழ்வையும் மலையேறத் தெம்பையும் தருகின்றன. கோயிலை அடைந்து விட்டோம். கோயில் இரு மலைகளின் நடுவில் பரந்த வெளியில் அமைந்துள்ளது.



முதல் மண்டபம்-அடிவாரம்

இயற்கை யன்னையின் எழிலை இங்கு நின்று கண்ணுறுவோர் கண் குளிரும். இதயமும் குளிரும். உடல் குளிர நீராட மருத தீர்த்தம் என்ற தீர்த்தமும், பாம்பாட்டிச் சித்தர் சுனை என்ற சுனையும் இவண் உண்டு. மருதமரம் தலவிருட்சமான காரணத்தால் மருதமலை என்று பெயர் பெற்றது.



ம. அ. அ. கிருத்திகைக் கழகம் அமைத்துள்ள மண்டபம்

மருதமலைக் கோவில் சிறிதெனினும் மருதமலை ஆண்டவனின் கீர்த்தி பெரிது. இவ்விறைவன் பெயர் மருதமலை ஆண்டவன். நான்கடி உயரம் உள்ள நல்ல மூர்த்தி. கண்கண்ட தெய்வம். தண்டாயுதம் கைக்கொண்டு கிழக்கு நோக்கி நிற்கும் இக்கலியுகவரதன், தன்னைக் கண்டு வணங்கி வாழ்த்த வந்தார்க்கு வாழ்வளித்து வரம் கொடுக்கின்றான். கருவறை சிறியது. அர்த்த மண்டபமும் அவ்வளவே. முன்மண்டபம்தான் சற்று விசாலமானது. மகாமண்டபம் நிறைய மக்கள் நின்று மருதமலையானை மனங்கசிந்துருகிப் பாடி வணங்குகின்றனர். சுற்றுப்பிரகாரத்தில் இடதுபக்கம் சிவலிங்கமும், வலதுபக்கம் மரகதாம்பிகை சந்நிதியும் கண்ணுறுகிறோம். வெள்ளியங்கிரியைச் சிவன் உருவமாகவும், நீலிமலையை அம்மை உருவாகவும் இம்மருதமலையை முருகனுருவாகவும், மும்மலையும் சேர்ந்து

சோமாஸ்கந்த மூர்த்தமாக அமைந்திருப்பதாகவும் பேரூர்ப்புராணம் பகர்கின்றது. வெளிப் பிரகாரம் வந்தடைகின்றோம். மதிலின் ஓரத்தே செல்லும் பாதை நம்மைப் பழைய கோயிலுக்கு அழைத்துச் செல்லு கின்றது. அக்கோயிலில் மூன்று சுயம்பு மூர்த்திகள் காணப்படுகின்றன. வள்ளி - சுப்பிரமணியர் - தெய்வயானை என்று கூறுகின்றனர். வணங்கி மீண்டு சுனை நோக்கி வருகிறோம். இங்குச் சுவையான செய்தி கிடைக்கிறது. பாம்பாட்டிச் சித்தர் குகைக்குச் செல் லும் பாதை என்ற பலகையைப் பார்க்கிறோம். பதி னெண்சித்தர்களில் பலசித்தர்கள் இக்கொங்குநாட் டில் வாழ்ந்து தவமியற்றி இருக்கின்றனர். பழநி மலையில் போகரும், சென்னிமலையில் பிண்ணாக்குச் சித் தரும், சிவன் மலையில் சிவவாக்கியச் சித்தரும், கஞ்சமலையில் கஞ்சமலைச் சித்தரும் முருகனை எழுந்தருளச் செய்து, சித்துக்கள் பல விளையாடிய செய்திகள் எத்தனை எத்தனையோ இக் கொங்கிற்கு உண்டு. இம்மருத மலையில் எழுந்தருளியுள்ள மருதாசல ஆண்டவரை வழிபட்டு வந்தவர் பாம்பாட்டிச்சித்தர். இச்சித்தர் இருந்து தவமியற்றிய குகை சற்றே கூப்பிடுதூரத்தில் உள்ளது. ஒடுக்கமான ஒற்றையடிப்பாதை. ஆழமான மலைச்சரி


பாம்பாட்டிச் சித்தர் குகை

வின் ஓரமாய்ப் போவதால் கவனிப்பாகவே செல்ல வேண்டும். இங்குள்ள கோயிலைச் சுற்றிக் குடியிருக்கும் மக்கள் பழங்குடியைச் சார்ந்தோர். 'இருளர்' எனப் படுவர். சுமார் 140 குடிகள் இங்குள்ளனர். காடுகளிலும் மலைகளிலும் வசிக்கின்றனர். மரம் வெட்டுதல் மலைத் தேன் எடுத்தல் முதலியன அவர்களது மரபுக்குரிய தொழில்கள். கோயிலுக்கு வரும் மக்களுக்குக் குற்றேவல் செய்தும் கூலி பெறுவர். மலைபடு பொருள் விற்பதும் உண்டு. இவர்கள் பேசும் மொழி வியப்பாயிருக்கும். ஒரு சில சொற்களை நீங்களும் தெரிந்து கொள்ளுங்கள்.



மூன்று சுயம்பு மூர்த்திகள்

உட்கார்—குக்குவே

தாயார்—அவ்வா

தகப்பனார்—அம்மா

பாட்டனார்— அப்பா

பழம்—பாமு

படுக்கப் போ—கடக்கப்போ

அவள்—இதவே

அங்கே தள்ளு—அக்கட்ட தள்ளுவே

இனி, இம்மருதமலை இடம் பெற்றுள்ள சாசனங்கள், இலக்கியங்கள் பற்றிச் சற்று ஆராய்வோமா?



இடும்பன் கோயில்

எண்ணூறு ஆண்டுகளுக்கு முந்திய திருமுருகன் பூண்டிச் சாசனத்தில் மருதமலை இடம் பெற்றுள்ளது. மருதாசல மூர்த்தி சதகம், மருதாசல பதி தாய்மகள் ஏசல் ஆகிய நூல்கள் உண்டு. ஆனால் ஆக்கியோர் பெயர் தெரியவில்லை. கச்சியப்ப முனிவர் இயற்றிய பேரூர்ப் புராணத்தில் அபயப்படலத்திலும், மருதவரைப் படலத்திலும் இம்மலையைப் பற்றிய செய்திக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. திருப்புகழில் "திரிபுர மதனை ஒரு நொடியதனில்" என்ற பாடலில் "அவனி செயும் மருதமலையோனே" என்பதற்கு மாறாக "அருணையில் உறையும்" என்ற பாடபேதம் கொண்டிருக்கின்றனர் என்று சிலர் கருதுகின்றனர். கோவை சிவக்கவிமணியின் தந்தையார் திரு. கந்தசாமி முதலியார் மருதாசலபதி உயிர் வருக்கமாலை என்ற நூலை இயற்றியுள்ளார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் முருகன் வண்ணப் பதிகமும், திருப்புகழும் பாடியுள்ளார்கள். சிரவணபுரம், கௌமார மடம், தவத்திரு கந்தசாமி சுவாமிகள் மருதமலை அலங்காரம் நூறும், யமக அந்தாதி நூறும், சந்தப்பதிகமும் பாடியுள்ளார்.

தவத்திரு சுந்தர சுவாமிகள் பாடிய பதிகம் ஒன்றும் இம் முருகனுக்கு உண்டு. கோவை கிழாரின் மருதமலை மான்மியமும் குறிப்பிடத்தக்கது. கவியரசு நடேச கவுண்டரின் "இரக்கம் இம்மியும் ஏன் உனக்கில்லை" என்ற நிந்தாஸ்துதியும், "எனக்குனை யலதொரு துணை யிலைஐயா," என்றும் "கந்தநாதா உனது காட்சி காண எனது காயம் எல்லாம் கண்கள் வேண்டும் ஐயா" என்றும் தொடங்கும் கீர்த்தனைகளும் உண்டு.

இன்றைய நிலை:—இக்கோயிலில் தினசரிப்பூசனை நடைபெறுகின்றது. கார்த்திகைதோறும் சிறப்பு வழி பாடு உண்டு. மக்கள் தங்குவதற்கு மடங்கள் பல உள. உற்சவமூர்த்தி கார்த்திகை தோறும் எழுந்தருளிக் கோயிலை வலம்வந்து பக்தர்களுக்குக் காட்சியளிக்கிறார். கோவைப் பஞ்சாலைத் தொழிலாளர்கள் ஆயிரக்கணக் கானவர்கள்-இன, அரசியல், மொழி வேறுபாடுகள் இன்றி-மருதமலை அருணகிரிநாதர் அருள்நெறிக் கிருத் திகைக் கழகம் என்ற கழகம் ஒன்றை அமைத்து மாதக் கார்த்திகை தோறும் வழிபாடாற்றித் திருநீற்றுப் பிரசாதத்தை மருத்துவமனையில் இருக்கும் நோயுற் றோர்க்கு உதவி அருப்பணியாற்றுகிறார்கள். ஆண்டு தோறும் படி விழா நடத்தி மக்களைப் பக்தியாற் பயண டையச் செய்கிறது இக் கழகம். திரைப்படத் தயாரிப் பாளர் திரு. எம். எம். ஏ. சின்னப்பாத் தேவர் முருகன் அடியார். படிக்கட்டுகளும், தண்ணீர்க் குழாய்களும், மின்விளக்குகளும், திருமடமும் அமைத்துள்ளார். மலை மீது நல்ல பாதை போடவும் ஏற்பாடுகள் நடை பெறுகின்றன.

இறங்குமுன் வடபால் ஏறிட்டுப் பார்த்தால் மலை யின் இடப்பால் சாரலில் இருவர் நிற்பது போன்ற இரு கற்கள் நிற்பது நம் கண்களிற்படும். ஒரு சமயம் இறை வனின் திருவாபரணத்தைத் திருட வந்த திருடர்களை

இறைவன் கல்லாகுமாறு தண்டித்ததால் இன்றும் அவை நின்று நமக்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகளை நினைவூட்டுகின்றன.

குன்றுதோறுடும் குமரனடியைக் கும்பிட்டு மன நிறைவோடு திரும்புகின்றோம். பச்சை மயில் ஏறும் பாலகனைச் சேவித்து, இம்மைப் பிறப்பில் இருவாதனை யகற்றப் பசுமை நினைவோடு, மருதமலையைவிட்டு இறங்க மனமின்றி இறங்குகிறோம். என்றும் அவனருள் நம்பால் நின்று இன்பம் பயப்பதாக!





காரைமடை அரங்கநாயகித் தாயார், ஆண்டாள் ஆகியோர் கோயில் விதானங்களின் மத்தியில் அரங்கநாதர் கோயில் விதானம்

# காரைமடை

## அரங்கநாதர்

காரை என்பது ஒருவகை முட்செடி. மருதாணி போன்ற இலையையும் திராட்சை போன்ற பழத்தையும் உடையது. வேள்விக்காகும் சுள்ளிகளில் ஆல், மின்னை, மிஷ்டை போன்று இக்காரைச் சுள்ளிகளும் பயன்படுவன. இராச பிளவை போன்ற நோய்கட்கு அருமருந்துமாம். காரைமடை என்ற தலத்திலுள்ள குளத்தின் நீரணைப்பக்கமும், மூட்டுவாய்ப் பக்கமும் காரைச் செடிகள் நிரம்பிக் கிடந்ததால் காரைமடை (காரை-காரைவனம், மடை-குளம்) என்ற காரணப் பெயர் பெற்றது.

காரைமடை என்ற தலம் கொங்குநாட்டில், கோயமுத்தூரிலிருந்து இருபத்தொன்பது கிலோ மீட்டர் தூரத்தில் ஒத்தக்கல் மந்து (உதகமண்டலம்) செல்லும் பாதையில் அமைந்துள்ளது. இன்று காரை வனமாகக் காட்சியளிப்பதில்லை. கவின்மிக்க சிற்றூராய்க் காட்சியளிக்கிறது. ஊரின் நடுவே அரங்கநாதர் ஆலயம் அமைந்திருக்கிறது. கிழக்கு நோக்கிய நல்ல பெரிய அழகிய கோயில். ஆலயத்தின் நான்கு பக்கமும் தேரோடும் வீதி விசாலமாய் அமைந்துள்ளது. வடக்குப் பிரகாரத்திலுள்ள பரமபத வாசலுக்கு ஒரு பக்தர் கோபுரம் எடுத்துள்ளார். பரமபத வாசலுக்குக்

கோபுரம் எடுப்பவருக்குச் சொர்க்கத்தில் ஓர் இடம் நிச்சயம் உண்டு என எண்ணி இராசகோபுரத்தை மறந்தார் போலும்! எந்தப் புண்ணியவான் இக்கோயிலுக்கு இராசகோபுரம் கட்டப்போகிறாரோ தெரியவில்லை. காத்திருந்து பார்ப்போம்.

இக்கோயில் பற்றிய பூர்வீகத்தை அறிந்து கொள்ள நீங்கள் ஆசைப்படுவதை அறிகிறேன். எங்குமிலாத் தனிச்சிறப்புகள் சில இக்கோயிலுக்குண்டு. ஆகையால் இதன் புராணத்தைத் தெரிந்து கொண்ட பின், வழிபட்டால் ஈடுபாடு இருமடங்காகும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. கடந்த கால நிகழ்ச்சிகளைக் கண் முன் காட்ட எண்ணம். பழங்காலத்தில் இவ்விடம் காடாய்க் கிடந்திருக்கிறது. புல் புதருடன் கூடிய காரைவனமாய்க் காட்சியளித்திருக்கிறது. இன்று கருட தீர்த்தமென வழங்கும் தீர்த்தம் அக்காலத்தில் குடிநீர் மடு. அந்நிலப் பகுதியில் உள்ள கிராமங்களில் வாழ்ந்திருந்த மக்களுக்கு மாடுமேய்த்தல் தொழில். அதன் அருகில் சரித்திரப் புகழ்வாய்ந்த பெல்லாதி என்ற ஊர் உண்டு. அக்காலத்தில் பெரு நகராய்த் திகழ்ந்தது. பெல்லாதியில் சங்கமேசுவரருக்கும், அழகு மாதவப் பெருமாளுக்கும் தனித்தனிக் கோயில்கள் இருந்தன. இக்கோயில்கட்கு இறையிலி நிலங்களும் இருந்தன என்பது அங்கங்கே இன்று சிதைவுற்றுக் கிடக்கும் மதிற்சுவர்க் கற்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். ஹைதர் அலி காலத்தில் டணாய்க்கன் கோட்டைத் தாலூக்காவில் இருந்ததென்று ஒக்கிலியக் கவுடர்கள் எழுதிக்கொடுத்த பட்டக்காரர் நியமனச் சாசனச் செப்பேட்டிலிருந்து தெரிகிறது.

அவ்வூரில் வாழும் பழம்பெருங்குடி மக்கள் ஒக்கிலியக் கவுடர்களும், (தொட்டிய) நாயக்கர்களுக்



காரமடை அரங்கநாதர் கோயில் முகப்பு-இராசகோபுரமில்லா முன் மண்டபம்

ஆவார்கள். மைசூரிலிருந்து வந்து குடியேறியவர்கள். மைசூர் மாநிலத்தில் மகமதியரின் கொடுங்கோன்மைக்கு அஞ்சி இவர்கள் நாடு நகர்விட்டுக் காடு கரை தாண்டி இவண் வந்து குடியேறினர். இங்ஙனமிருக்கையில் பசு ஒன்று காரை வனத்தில் புல்மேய்ந்து வீடு திரும்பும்போது தினமும் தன் மடியிலுள்ள பாலைப் புற்றொன்றில் பொழிந்து வந்தது. இதைக் கண்ட மாட்டிடையன் மாட்டின் சொந்தக்காரனான நாயக்கனிடம் கூறினான். அவனும் புற்றை அரிவாளால் வெட்டினான். வெட்டிய அரிவாளில் இரத்தம் படிந்திருந்தது. புற்றை அகற்றவே சுயம்பு ஒன்றிருந்ததைக் கண்டனர். கண்டவர் அஞ்சினர். கால்கடுக்க ஓடித் தங்கள் குரு முதல்வரான ஸ்ரீவேதவியாச பட்டரிடம் தெரிவித்தனர். அவரும் இது அரங்கநாதனின் திருவிளையாடல் என எண்ணி அரங்கநாதனுக்குச் சிறு கோயில் எடுக்க ஆணையிட்டதாய் வரலாறு கூறப்படுகிறது. இது போன்ற கதையுடையவையும் ஒப்புநோக்கத் தக்கவையுமான கோயில்களுள் பேரூரும் திருநெல்வேலியும் முக்கியமானவை ஆகும்.

பார்க்கவ புராணம் உப புராணத்தில் இவ்வூர் பற்றிய குறிப்பு வருகிறது. ஸ்ரீராமானுஜர் குலோத்துங்க சோழனால் துரத்தப்பட்ட பின், மூன்று நாள் பட்டினியோடு இப்பாலைமலைச் சார்பில் தங்கியிருந்தார் என்றும் நல்லான் சக்கரவர்த்தியின் சிஷ்யன் என்று கூறிக் காரைவனத்திற்கு எழுந்தருளியபோது மக்கள் தேனும் தினை மாவும் கொடுத்து ஆதரித்தனர் எனவும் குரு பரம்பரை நூல் கூறும் இராமாநுஜ காவியம் ஒன்றிலிருந்து அறிகிறோம். இக்கோயிலில் இராமாநுஜருக்குத் தனிச் சந்நிதியுண்டு.

திருவரங்கத்துப் பெரிய அழகிய மணவாளர் இந்தக் காரைமடையில் எழுந்தருளியிருந்தார் என்பது



காரைமடை அரங்கநாதர் கோயில்—கொடி மரமும் மகாமண்டபமும்

ஒரு வரலாறு. அதன் விபரம்; மாலிக்காபூர் என்ற மகம்மதியப் படைத்தலைவன் இந்துக் கோயில்களைக் கொள்ளையடித்து வந்த காலத்தில் ஸ்ரீரங்கத்துக்குப் போனான். அரங்கநாதரின் உற்சவமூர்த்திக்குச் சேதம் விளையக்கூடாதென எண்ணித் திருவரங்கத்தில் வாழ்ந்திருந்த அன்பர்கள் பல ஊர்கட்குக் கொண்டு போய்ப் பத்திரப்படுத்தி வைத்திருந்தனர். இவண் எழுந்தருளிய அரங்கத்து மணவாளர் ஓராண்டுக்காலம் கழித்துப்புறப்பட்டுப் பல இடங்கள் சென்று அதன் பின் திருவரங்கம் சேர்ந்தார் எனக் கூறுவர். இச்செய்தி ஆசாரியரப்படி குரு பரம்பரையில் வருகிறது. இன்னோரன்ன செய்திகளை வைத்து இக்காரைவனப் பெருமான் காலங் கடந்த பெருமான் எனக் கூறுவர். ஒரு சாரார் நாலு யுகங்கண்ட பெருமாள் எனவும் நவில்வர். ஆழ்வார்களின் அபிமானத் தலம் எனவும் புகல்வர்.

மூலவர் திருநாமம் அரங்கநாதர். ஓரடி உயர முடையவர். நான்கு பட்டையுடைய சுயம்பு மூர்த்தி. பெருமான் மூலத்தானத்தில் அருவுருவுடன் எழுந்தருளி இருப்பது எங்குமில்லாத் தனிச் சிறப்பு. முடிமீது வெட்டுப்பட்ட இடம் இன்றும் நன்கு தெரிகிறது. சனிக்கிழமை தோறும் திருமஞ்சனம் செய்கின்றனர். திருமஞ்சனத்திற்குப் பயன்படும் தீர்த்தங்கள் கோயிலினுள் உள்ள பிரம்மதீர்த்தமும், ஊரின் ஓரத்தேயுள்ள கருட தீர்த்தமும் ஆகும். இக்கருட தீர்த்தத்தில் தான் காரைவன அரங்கநாதர் இருக்கும் இடம் கண்டுபிடிக்க முடியவில்லையே எனக் கவலையுற்ற ஸ்ரீ வேத வியாசப் பட்டர் கழுத்தளவு தண்ணீரில் கடுந்தவம் செய்ததாயும், தான் இருக்கும் இடம்வரை திருத்துழாய் கிடந்து வழி காட்டுமெனப் பெருமாள் அசரீரியாய்க் கூறினதாயும் கர்ண பரம்பரைச் செய்தி ஒன்று கூறும். பெல்லாதி அழகு மாதவப் பெருமாள் இங்கே எழுந்தருளியுள்ளார்.

உற்சவர் காரமடையான் வெங்கடேசன். உபயநாச்சியார்கள் ஸ்ரீதேவி, பூதேவி. இப்பகுதி மக்கள் இந் நாச்சியார்களைப் பெட்டத்தம்மன் (பெட்டா என்றால்-கன்னடத்தில்-மலை எனப்படும்) துளசியம்மன் எனக்கூறுகின்றனர். இவ்வூரருகில் உள்ள பெட்டத்தம்மன் மலையில் பெட்டத்தம்மனுக்கு ஒரு சின்னக் கோவில், குளம் உள்ளன. ஆஞ்சநேயர் சந்நிதியும் அங்கு உண்டு. பிரம்மோற்சவத்தில் ஐந்தாம் நாள் கல்யாண சேவைக்குப் பெண் அழைக்கும் முறை இந்த மலையில் உள்ள பெட்டத்தம்மன் சந்நிதியில் நடைபெறுகிறது. பெண் அழைத்துவரும் தாசர்களை எதிர்கொண்டழைக்கும் முகத்தால் வேல் (இராமபாணம் என்கின்றனர்) கொடுத்து வரவேற்கின்றனர். உற்சவ மூர்த்திக்கும், உபயநாச்சியார்களுக்கும் ஏகாதசியில் தான் திருமஞ்சனம். இவ்வுற்சவர் நல்ல எடுப்பான திருவுருவம் உடையவர். எழிலால் இதயம் கவர்கிறார். அதோடு இலட்சம் மதிப்புள்ள ஆபரணங்களையும் பூட்டிக் காட்சியளித்துப் பக்தர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விடுகிறார். இக் கோயில் முதல் தீர்த்த மரியாதை ஸ்ரீ வேதவியாசப்பட்டர், நல்லாஞ் சக்கரவர்த்தி தாத்தாச்சாரியார், பிரதிவாதி பயங்கரம் ஆகிய ஆச்சாரிய புருஷர்கட்கு உண்டு.

நாரதீய புராணத்தில் திருமால், துளசியிலும், தாமரை மலரிலும், பக்தர்களின் உள்ளத்திலும் அமர்கிறேன என்கிறாரல்லவா. இங்கு வழங்கும் திருத்துழாயம் சிறப்புடையது. சுற்றுப் பிரகாரம் சுற்றி வலம் வரலாமா? சுற்றுப்பிரகாரத்தில் வடக்குப் பார்த்துப் பன்னிரு ஆழ்வார்கள் இருக்கிறார்கள். அவர்கள் மத்தியில் பரவாசுதேவர் காட்சி அளிக்கிறார். பிரகாரத்தில் கிழக்கு நோக்கிய தனிச் சந்நிதியுடன் காட்சியளிப்பவர் அரங்கநாயகித் தாயார். மூலவராய் இருக்கும் தாயார் இரு கைகளையுடையவர். அரங்க



காரைமடைப் பரந்தாமன் கோயில் பரமபத வாயில்

நாயகித் தாயாரின் உற்சவக் கோலம் பத்மாசனத்தில் உட்கார்ந்த கோலம். நான்கு திருக்கரங்கள். மேற்குப் பிரகாரத்தின் வடக்குப் பக்கத்தில்தான் தலவிருட்சம் உள்ளது.

தலவிருட்சம் காரைச் செடி. காரை வனத்தில் தலவிருட்சம் காரையல்லாது வேறு எதுவாக இருக்க முடியும்? இக்காரைச் செடிகளின் தழைகளைப் பறித்து மஞ்சளுடன் சேர்த்துத் தின்பதால் மக்கட்பேறு உண்டாவதாய்க் கூறுகின்றனர். காரைமடைக் காரைச் செடியின் தழைகள் திருமலை நாயக்கரின் இராசபிளவை என்ற நோய்க்கு மருந்தாய்ப் பயன்படுத்தப்பட்டது என்றும் குணம் கண்டதால் இக்காரைவன அரங்கனுக்கு அவ்வரசர் கற்கோயில் எடுத்தார் என்றும் கூறப்படுகிறது.

அடுத்திருப்பது ஆண்டாள் நாச்சியார் சந்நிதி. தாயார் இரண்டரை அடி உயரம் உடையது. ஆடிப் பூரம் சிறப்பாய்க் கொண்டாடப் பெறுகிறது. அரங்கநாதரின் கருப்பக்கிருக வெளிச்சுவரில் ஆண்டாள் சந்நிதியை அடுத்து ஆஞ்சநேயரின் சந்நிதி வடக்குப் பார்த்து உள்ளது. ஆனால் ஆஞ்சநேய மூர்த்தியின் முகம் மேற்குப் பார்த்த முகம். ஞாயிற்றுக் கிழமைகளில் பக்தர்கள் வடைமாலை சாத்தி வழிபடுவது வழக்கம். கருவறைச் சுவரில் மூன்று சிற்பங்கள் உள்ளன. நல்ல வேலைப்பாடுகளை உடையன. அவற்றுள் வீணை ஏந்திய பெண் ஒன்று. கெண்டை விழியாளின் கொண்டையும், அக்கிள்ளை மொழியாளின் கிளியும் அவளுடைய இரு தோள்களின்மீதும் தனித்தனியே நின்று அழகு பெறுகின்றன. அடுத்து இருப்பது வில் ஏந்திய இராமர். மூன்றாவது சிற்பம் ஆவினம் புடைசூழ புல்லாங்குழல் ஊதும் வேணுகோபாலன். இத் திருவுருவங்கள்

தவிர கல்வெட்டுக்களோ பழங்காலச் சிற்பக் கலைத்திறனோ காணப்படவில்லை.

பெல்லாதி சங்கமேசுவரருக்கும் அழகு மாதவப் பெருமாளுக்கும் சர்க்கார் உபகாரப்பணம் (தஸ்தி) ஆண்டிற்குச் சுமார் ஆயிரம் ரூபாய் வரை கொடுக்கிறார்கள். இக் கோயிலின் ஆண்டு வருமானம் சுமார் நாற்பதினாயிரம். நிலம் சுமார் பதின்மூன்று ஏக்கர். கோபிச்செட்டிப் பாளையம் பக்கம் உள்ளது. வைகுண்ட ஏகாதசிச்சேவைக்காக ஒரு தாசன் எழுதிக் கொடுத்த நிலத்திலிருந்து குத்தகை வருமானமும் வருகிறது.

வைகுண்ட ஏகாதசி போன்ற பொது விழாக்களும் சேனை முதலியார், நம்மாழ்வார், உடையவர், மணவாள மாமுனிகள் ஆகியோரின் திருநட்சத்திரங்களும் கொண்டாடப் பெறுகின்றன. ஆனால் எங்குமே காணமுடியாச் சிறப்பான திருவிழா இவ்வூர்ப் பிரமோற்சவம். அது மாசி மாதத்தில் நடைபெறுகிறது. மாசிமகத்தில் திருத் தேர்விழா. தேர் பெரியதேர். இராமாயணத்தில் உள்ள ஆறு காண்டத்துக் கதையை விளக்கும் பதுமைகள் தேரைச் சுற்றிலும் அமைந்துள்ளன. அவை மரத்தில் அதி அற்புதமாய்ச் செதுக்கப்பட்டுத் தேரில் பொருத்தப் பட்டுள்ளன. நாரதர் வால்மீகிக்கு உபதேசம் செய்வது முதல் அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த......வசிட்டனே இராமனுக்கு முடி புனையும் பட்டாபிடேகக் காட்சி வரை அத்தனைச் சிற்றுளியால் செதுக்கித் தேரில் இணைத்துப் வால்மீகியும் கம்பனும் காவியத்தில் அமைத்த காட்சி களை மரத்தில் காணும்படிச் செய்துள்ளான். கவிகளின் பாடல்களைப் படித்துப் பொருள் புரிய முடியாப் பாமரரும், இத்தேரின் பதுமைகளைப் பார்த்து அது கூறும் இராமாவதாரத்தை எளிதில் புரிந்து கொள்ள

முடியும். தேரோட்டத் தினத்தன்று தேரிலிருந்து சுவாமி இறங்கியபின் தாசர்களின் சேவை ஆரம்பமாகிறது. காலையில் தண்ணீர் சேவை. நண்பகல் கவாள சேவை. இரவில் பந்தசேவை. "என்னய்யா தண்ணீர் சேவை? கவாளசேவை? பந்தசேவை?" என முணு முணுக்கிறீர்கள். கொஞ்சம் விளக்கம் தேவை தான்.

காரைமடை அரங்கனின் பக்தர்களைத் தாசர்கள் என அழைக்கின்றனர். இத்தாசர்கள் அரங்கனுக்கு வழி வழி யடிமை. பெரிய பெரிய பணக்காரர்களும், பரம ஏழைகளும் பல பிரிவு மக்களும் ஏற்ற இறக்கமின்றி சாதி பேதமின்றி இப்பரந்தாமனின் முன்பு சேவை செய்கின்றனர். தாசகோலம் பூண்டு விட்டால் யாவரும் சரிநிகர் சமானமே. உயர்வு தாழ்வு இல்லை. இருக்கக் கூடாது. இத்தாசர்கள் பாரம்பரியமாகத் தங்களுக்கென ஒரு சேவையை (தொண்டு)ச் செய்து வருகின்றனர். இது நாகரீக காலம். காலத்தின் நிலைமையைக் கருதி இச்சேவை செய்யா நாளினால் தெய்வத்தால் துன்பம் வருகிறது. ஆகையால் விட்டவர்களும் மீண்டும் தொடர்கிறார்கள். ஆதியில் அரங்கநாதன் இருந்த புற்றைக் காட்டில் காரைநு அலைந்த தாசர்கள் கையில் தீப்பந்தத்துடனும். தண்ணீர்ப் பஞ்சமான காலமானதால் ரத்தக் கறையைக் கழுவத் தோல் பையில் தண்ணீருடனும் சென்றனர். அதை இன்றும் செய்து, பழைமையை நினைவு படுத்துகிறார்கள். தண்ணீர்ச் சேவைக்கு உரியவர்கள் பூ முத்திரையையும், பந்த சேவைக்குரியவர்கள் பெரிய முத்திரையையும் கவாள சேவைக்கு உரியவர்கள் இரு முத்திரைகளையும் ஆச்சாரியர்களால் பெற்றிருப்பர். சேவைக்குரிய தாசர்களுக்குப் பதினெட்டு வகைச் சின்னங்கள் - விருதுகள் - உண்டு. மஞ்சள் பாவாடை, துளசிமாலை, திருமண், பிரம்பு, சங்கு, சேகண்டி, கால்வெண்டயம் போன்றவை அவை. தப்

பட்டை, லவண்டை, பம்பை போன்ற தோற் கருவிகள் ஒலி எழுப்ப அவர்கள் வருவது வழக்கம். புற்றை வெட்டிய பாளையக்காரனின் பூத சாபம் நீங்குவதற்குக் கவளம் எடுக்கும் பழக்கம் ஏற்பட்டது. கவளம் எனில் வாயளவு கொண்ட உணவு அல்லது சோறு என்று பொருள். கவளம் கவாளமாகத் திரிந்தது. இக் கவாளம் எடுத்தல் மூன்று வகைப்படும். ஒன்று பூத கவாளம். மற்றொன்று நடை கவாளம். பிறிதொன்று மாத்துக் கவாளம். பூத கவாளம் என்பது பூதத்திற்குப் படைப்பது போன்று மூன்று பனையோலைப் பெட்டிகளில் பழம், சர்க்கரை, பால், தயிர், திராட்சை ஆகியவற்றைக் கலந்து பஞ்சாமிர்தம் போன்று தயாரித்து மூன்று நான்கு தாசர்களின் முன்பு பூசை செய்கின்றனர். தாசர்கள் சில மந்திரங்களை உச்சரித்துத் தியானிக்கின்றனர். பின் தன் நிலையழிந்து பூதங்களைப் போன்று வாய் திறந்து பெட்டியில் உள்ளதைக் குடிக்கின்றனர். பூதங்கள் இம் மனிதர்கள் மீது வந்து அதை ஏற்றுக் கொள்வதாக ஐதீகம். அத் தாசர் மனித நிலையிலிருந்தால், இத்தனையையும் குடிக்க முடியுமா என்ன? இதைத் தவிர அந்த தாசன் மாத்துக் கவாளமும் நடை கவாளமும் எடுக்கிறான். கவாளம் எடுத்து முடிந்த பின் வீடு சென்று எப்போதும் போல் உணவு உட்கொள்ளும் பழக்கமும் உண்டாம். இதை யெல்லாம் எண்ணும்போது ஐதீகம் மாத்திரமல்ல உண்மையும் அதுவே என ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும்.

மாத்துக் கவாளம் எனில் பழங்களையும், சர்க்கரையையும் சேர்த்துக் கட்டியாகப் பிசைந்து வெள்ளைத் துணி (மாற்று-மாத்து என வழங்கப் பெறும்) மீது மூன்றிடங்களில் வைத்திருப்பர். இவற்றைப் புறங்கை கட்டப்பட்ட தாசன் கருடாழ்வார் போன்று கால்களை மடித்து வைத்துக் குனிந்து எடுக்க வேண்டும். வழி நெடு

கிலும் பிரார்த்தனை செய்து கொண்ட மக்கள் மாத்து விரித்துக் கவளம் இட்டு வைப்பர். தாசன் நடந்து கொண்டிருக்கும் போது கொடுக்கப்படும் கவளத்திற்கு நடை கவாளம் என்று பெயர்.

அதர்வண வேதத்தில் கவளம் கொடுக்கும் முறை பற்றி வருகிறது. யாகத்தில் கொடுப்பது ஆகுதி எனப் படும். தெய்வங்களும் தேவர்களும் அதைப் பெறு வதாய்க் கூறுவர். பேய், பிசாசு, பூதம் ஆகியவற்றிற் குக் கொடுப்பது கவளம் எனப் பெயர் பெறும். சிறு தெய்வ வழிபாடுகளில் கவளம் கொடுத்தல் ஓர் அங்க மாகும்.

தண்ணீர் சேவை, கவாள சேவை, பந்த சேவை ஆகியவை முறையே காலை, நண்பகல், மாலை நடைபெற வேண்டியவை. முறைப்படி செய்யாது தங்கள் நல னுக்காக மாற்றிச் செய்வது பாபம். முறைமாறிச் செய்து பெறும் பாபத்தைச் செய்யாதொழிவதால் ஏற்படும் பாபத்திற்கு ஒப்பிடுவர் பெரியோர். 450 பாடல்களாலான காரைமடைத் தலபுராணம் என்ற நூலில் இக் காரைவனப் பெருமானின் பெருமைகள் பேசப் பெறுகின்றன. அந்நூலை இயற்றிய பெரியார் சிரவணபுரம் கௌமார மடாலயம் தவத்திரு. கந்த சுவாமி சுவாமிகளாவார். இவ்வாசிரியர் காரைமடைப் பெருமானுக்குப் பாடிச் சூட்டிய பாமாலை, அரங்கநாத மாலை. அம்மாலை 102 பாடல்மணிகளையுடையது. ஆண்டாள் பதிகமும், அனுமார் பதிகமும் அவர் இயற்றியவையே. மேலும் கீழ்க்காணும் செய்தி இப் பெருமானின் பெருமையை உணர்த்தும் ஒரு நிகழ்ச்சி யாகும். திரு. டபிள்யூ. காரோ (Mr. W. Goro) என்ற ஆங்கிலேயத் தண்டல் நாயகன் (Collector) தன்னுயிர் காத்த பவாநி வேதநாயகித் தாயாருக்குத் தந்தத்தா லான ஊஞ்சல் செய்து வைத்தது போன்று பொறியியல்

வல்லுநன் ஒருவன் இக் காரைமடைப் பெருமானுக்கு வெள்ளைக் குதிரை வாகனம் ஒன்று செய்து வைத்திருக்கிறான். அக்குதிரை வாகனம் நினைவு செய்யும் வரலாறு இதோ. கோவை—மேட்டுப் பாளையம் இருப்புப் பாதை போடும் போது நிலத்தை அளந்து (Survey) பாதை அமைக்கப் படம் வரைந்த அந்தப்பொறியியலாளன் இக் கோயிலையும் அதன் தீர்த்தக் குளத்தையும் பாதிக்கும் வகையில் தயாரித்துவிட்டான். அன்றிரவு அவன் கனவில் பெருமாள் குதிரை மீது தோன்றிப் பிரம்பால் அடித்ததாயும், கண் ஒளியைப் பறித்ததாயும், தவறையுணர்ந்த வெள்ளையன் மன்னிக்கும்படி வேண்ட, மறுபடியும் கண்ணொளி கொடுத்ததாயும் அதனால் இருப்புப் பாதை சுற்றி வளைத்துச் செல்லும்படித் திட்டம் வரைந்து அனுப்பியதுடன் பெருமாளுக்குக் குதிரை வாகனம் செய்து வைத்ததாயும் கூறுவர். அத்துரை மகனே தளத்தைக் கல் பாவிக் கொடுத்ததாயும் கர்ண பரம்பரைக்கதை ஒன்று உண்டு. கனவிற்காட்சி கொடுக்கும் இப் பெருமாள் நல்ல பெருமாள். காக்கும் கடவுள் இல்லையா ? கருணைக் கடவுள் ஆயிற்றே. நாசர்கட்கு இன்பமும், தவறியவர்கட்குத் தண்டனையும் கொடுக்கும் பெருமாள். நமக்கும் நல்லவையே கொடுக்கட்டும். நன்மை நல்கட்டும், இன்பம் ஈயட்டும். இதயம் குளிர வாழ்த்தி வணங்கி விடை பெறுவோமாக !





குருந்தமலையடியில் பி. எஸ். ஜி. ஜி. மங்குத்தாயம்மாள் உபயத்தில் கட்டிய கோபுரமும், மலை முடியிலுள்ள குமரன் விதானமும்



கருமலைக் குழத்தை வேலாயுதன் கோயில் முகப்பு, மயில் மண்டபமும் மகாமண்டபமும்

# குருந்தமலை

முருகு என்ற சொல்லுக்கு அழகு, இளமை, தெய்வத்தன்மை, இனிமை, தேன், மணம், வெறியாட்டு என்று பல பொருள்கள் உண்டு. வேதங்களில் அதர்வண வேதத்திலும், இதிகாசங்களான இராமாயணத்திலும், மகாபாரதத்திலும் முருகனின் அவதாரமும், வீரமும் பேசப்படுகின்றன. கவிரத்ன காளிதாசரின் குமார சம்பவம் இவண் குறிப்பிடத்தக்கது. முருகனது ஆகமம் குமார தந்திரம் ஆகும். முருக வழிபாடு தமிழரின் பழம் பண்பாடு. தமிழ் மறையான திருமுறைகளில்,

“ கருகு குழல் மடவார் கடி குறிஞ்சியடி பாடி
முருகனது பெருமை பகர் முதுகுன்றடைவோமே.”

எனத் திருஞான சம்பந்தரும், “முருகவேள் தனைப் பயந்தாய் போற்றி”, “நம் செந்தின் மேய வள்ளி மணாளர்க்குத் தாதை கண்டாய்” என அப்பரும், “கடற்சூர் தடிந்திட்ட சேந்தர் தாதை”, “மயிலூர்தி முருகவேள் தாதை” எனச் சுந்தரரும் “குமரன் தன் தாதைக்கு உந்தீபற” என மாணிக்கவாசகரும் முருகனைப் பற்றிக் கூறிய குறிப்புக்கள் வருவதைக் காணலாம்.

தமிழ் இலக்கியங்களில் அகநானூறு “சூர் மருங்கு அறுத்த சுடர் இலை நெடுவேல் சினம் மிகு முருகன் தண்பரங்குன்றத்து அந்துவன் பாடிய சந்து கெழு

நெடுவரை'' என்றும், புறநானூறு, 'தண்ணடை மன்னர் தாருடைப் புரவி அணங்குடை முருகன் கோட் டத்துக் கலம் தொடா மகளிரின் இகந்து நின்றவ்வே' என்றும் முருகன் புகழ் பாடுவதைக் காணலாம். "திரு முருகாற்றுப்படை'' மூலம் நக்கீரர் அழகன் முருகனிடம் நம்மை ஆற்றுப்படுத்துகிறார். ''விரிகடல் வியன்தானை யொடு முருகு உறழப் பகைதலைச் சென்று'' என்று மதுரைக்காஞ்சி முருகனது மாண்பைக் கூறும். நச்சி னார்க்கினியர் மேற்கண்ட வரிகட்கு ''முருகு தெய்வத் தன்மை. ஆகுபெயராய் நின்றது. முருகன் பகைவர் மேற்செல்லுமாறு போலத் தடையறப் பகைவரிடத்தே சென்று'' என உரை எழுதுகிறார்.

இவை போன்று பழைய இலக்கியங்களில் ஒன் றான குறுந்தொகையில் ஒரு பாட்டு. அதுவும் முதற் பாட்டு. இதோ

" தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றா லுலகே "

(கடவுள் வாழ்த்து. பாரதம் பாடிய பெருந்தேவனார்)

தாமரையைப் போன்ற மலரடியையும், பவழத்தை ஒத்த மேனியையும், திகழ் ஒளியையும், குன்றிமணியை ஒக்கும் சிவந்த ஆடையையும், வேலையும், சேவற் கொடியையுமுடைய முருகவேள் பாதுகாத்து அருள லால் இன்பமயமாகிய நாட்களை அடைகின்றன உயிர் கள்; ஆதலின் உலகுக்கு இடையூறில்லை என்பது மேலேயுள்ள பாட்டின் பொருள். முருகன், குமரன். ஐம்முக இறைவனின் திருக்குமாரன். ஆறுமுகன்.



குருந்தமலைக் குன்றும், குன்றின்மேலுள்ள குமரன் கோயிலும்

குமாரன், குமரன் எனில் சிறப்பாகக் குறிப்பது சிவ குமாரனுகிய முருகனையே. குமரன் என்ற சொல்லுக்கு இளைஞன், புதல்வன், முருகன், மாயையை அழிப்பவன் என்று பல பொருள் உண்டு. குமரனுக்கு உகந்த இடங்கள் குன்றுகளே. அதனுல்தான் மலையும் மலை சார்ந்த இடமுமான குறிஞ்சித் தலைவனுக அதன் தெய்வமாகக் கொண்டு நம் பழந்தமிழர் வழிபட்டிருக் கின்றனர். ஆதாரம்: "சேயோன் மேயமைவரை யுலகமும்" (தொல்—பொருள்.) குன்றின் மேல் நிற்கும் குமரன் கோயில்களுக்குக் கொங்கு நாட்டிற் குறை வில்லை. அவற்றுள் சிறப்புடைய குன்ருென்றிற்குச் செல்ல இருக்கிருேம்.

அப்பன் சிவபிரான் உகந்த இடம் திருமுது குன்றம். ஆயின் அவன் மகன் குமரன் உகப்பது இளங்குன்றமாகத்தானே இருக்கவேண்டும்! மலை களிலெல்லாம் குருந்தானது, இளமையானது, குருந்தமலை. வடிவத்திற் சிறியது. வடிவழகிற் சிறந் தது. சுற்றியுள்ள பெருமலைகளைக் கண்ணுற்று இந்தக் குருத்து மலையையும் நோக்கும்போது இதன் இளமைத் தன்மை நன்கு தெரியும். அறுபது வயது முதியவர் களின் நடுவே ஐந்து வயதுக் குழந்தை நிற்பது போன்று காட்சியளிக்கிறது இக்குருந்தமலை. இளமை யில் தானே தெய்வத்தன்மையை உணரமுடியும். சின் னஞ்சிறு சிருர்களிடமும், கள்ளமில்லாப் பிஞ்சு உள்ளப் பிள்ளைகளிடமும் இறை-கடவுள்-குடிகொண்டிருப்பது போன்று இந்த மலைகளின் குருந்தாகிய குருந்தமலை யில் குமரன் குழந்தை வேலாயுத சுவாமி என்ற பெய ருடன் கோயில் கொண்டு அருளாட்சி புரிகிருன்.

கோயமுத்தூரிலிருந்து காரமடை 28 கிலோ மீட்டர். அங்கிருந்து அத்திக்கடவு செல்லும் பாதை யில் நான்கு கிலோ மீட்டர் தூரம் சென்ருல் புங்கம்

பாளையம் என்ற ஊர் வரும். அவ்வூரில் ஒரு புதிய பெருமாள் கோயில் உள்ளது. சிறுமுகைக்கு அக்கரையி லுள்ள கூத்தம் பூண்டிக் கிராமத்தில் பவாநிசாகர் நீர்த் தேக்கத்துக்குள் மூழ்கிய திம்மராயப் பெருமாள் கோயி லுக்காகக் கொடுக்கப்பெற்ற நட்ட ஈட்டுத்தொகையை வாங்கி இக் கோயில் கட்டப்பெற்றுள்ளது. இப் பெருமாள் பெள்ளியர் குடி ஒக்கிலியர்களில் பெள்ளியர் குலத்தாருக்குக் குல தெய்வம். மூலவர் திம்மராயப் பெருமாள். நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் திவ்விய சேவை சாதிக்கிறார். திருப்பதியில் போன்று இங்கும் ஏகமூர்த்தி, சங்கு சக்ரதாரி. உற்சவர் தாயார் களுடன் காட்சியளிக்கிறார். புரட்டாசி சனிக்கிழமை வைணவர்களின் வழிபாட்டிற்கு மிக முக்கியமான நாளல்லவா? அன்றைய தினங்களில் இங்கும் சிறப்பு வழிபாடுகள் உண்டு. மாமனைக் கண்ட நாம் மருகனைக் காண மலைக்குச் செல்லவேண்டும். அதற்கு இன்னும் சுமார் ஒரு கிலோமீட்டர் கடக்கவேண்டும். இவ் வூருக்குப் பழமையான சரித்திரப் பாரம்பரியம் உண்டு. புங்கம் பாளையம் ஊரின் நடுவில் உள்ள புங்கமா குளத் தில் புலிகள் வந்து நீர் குடித்துச் செல்லுமாம். கடந்த காலக்கதையாய்த் தோன்றுகிறது.

இந்த ஊரும் குருந்தமலையும் கொங்கு நாட்டின் 24 பிரிவுகளில் ஒன்றான ஒடுவங்க நாட்டில் உள்ளன. குருந்த மலைக்குத் தெற்கே ஆறு கிலோ மீட்டர் தூரத்தில் கட்டாஞ்சிமலை என வழங்கும் சஞ்சீவி மலை யுள்ளது. வடக்கேயுள்ள மலையில் பகாசுரன் வசித்த தால் பகாசுரன் மலை என வழங்கி வருகிறது. இன்றும் அப்பகாசுரனின் மலைப்பக்கம் நச்சுக்காற்று வீசுவதாகக் கூறுகின்றனர். அம்மலையருகில் ஆரவல்லி சூரவல்லி கோட்டைகள் இருக்கின்றன. கிழக்கே இருப்பது வள்ளிமலை. குருந்தமலைக் கோயில் தீர்த்தங்களில் ஒன்றான காஞ்சனை இம்மலை மீதுள்ளது. சின்னஞ்

சிறு பொந்துதான் தெரியும். குறுகிய பாத்திரத்தால் தண்ணீர் எடுக்கலாமே தவிர எத்தனை பரப்பிலிருக்கிறது; எவ்வளவு தண்ணீர் உள்ளது என்பவற்றை அறியமுடிவதில்லை. அதனால்தான் அதனைக் காணுச்சுனை என்ற காரணப் பெயரால் அழைக்கின்றனர். கருநொச்சியும் இம்மலைக்கே உரித்தான தனிச்சிறப்பு வாய்ந்தது. மருந்து மூலிகையாய்ப் பலவித பிணி தீர்க்கும் இக்கருநொச்சி. இன்னும் பற்பல மூலிகைச் செடிகள் இவ்வள்ளிமலையில் உண்டு. வள்ளிமலையிலுள்ள குகையில் வள்ளியின் திருவுருவம் உள்ளது. தைப்பூசத் தேர்த் திருவிழாவின்போது திருக்கல்யாண உற்சவம் இவ்வள்ளி நாச்சியாருக்கு நடைபெறுகிறது. கோணமுடி என்ற மலைத்தொடரில் குருந்தமலைப் பக்கலில் மேற்கே ஒரு குன்றும் அமைந்திருக்கிறது. இவற்றிற்கெல்லாம் மத்தியில் சிறிய, அழகிய, மரங்களடர்ந்த குருந்தமலை இளங்குன்று மலையாய், மலைக் குருத்துப் போன்று காட்சி அளிக்கிறது. குருந்த மரங்கள் நிறைந்திருந்ததால் குருந்தமலை எனப் பெயர் பெற்றது எனவும் பேசப்பெறும். நூற்றி இருபது அடி உயரமும், நூற்றெண்பது படிகளையும் உடையது.

கோயிலின் எதிரிலுள்ள மலைச்சரிவில் இரு சுனைகள் உள்ளன. அவை கஜபுஷ்கரணி என்றும் அனுமந்தசுனை என்றும் அழைக்கப்படுகின்றன. இக்கஜபுஷ்கரணி இரு பிரிவாய்க் காட்சியளிக்கிறது. ஒன்றில் உள்ள நீரைக்குடிப்பதற்கும் மற்ற பிரிவிலுள்ளதைக் குளிப்பதற்கும் பயன்படுத்துகிறார்கள். இச்சுனையில் குளிப்பதால் அலுத்துக் களைத்துவந்த உடல், ஆனந்தம் அடைகிறது. இளைத்துச் சலித்த மேனி இன்பம் பெறுகிறது. அடுத்துள்ள சுனை அனுமந்த சுனை. ஏன் அப்பெயர் பெற்றது என வினவுவீராயின், எதிரிலுள்ள அனுமன் கோயில் அதற்குப் பதிலளிக்கும். அனுமன், பக்கத்திலுள்ள சஞ்சீவிமலையில்

ஒரு காலும் இவ்விடத்தில் ஒரு காலும் வைத்ததாய்க் கர்ண பரம்பரைக் கதை கூறுவர். அதன் நினைவாக அனுமனுக்குக் கோயில் எடுத்துள்ளனர். இக்கோயி லில் எழுந்தருளியிருக்கும் அனுமனின் உயரம் மூன்றடி இருக்கும். ஓங்கிய கை வலக்கை. இடது கையில் நாளத்துடன் தாமரை மொட்டு உள்ளது. கையில் கடகமும் விரலில் மோதிரமும் காணலாம். இடையிற் சதங்கையுடனும் வாலில் மணியுடனும் கம்பீரமாகக் காட்சியளிக்கும் அனுமன் சந்நிதியில் "ஐந்திலேஒன்று பெற்றான்" என்ற கம்பனின் கவிபாடிப் பரவித் திரும்பு கிறோம். குன்றின் உச்சியிலிருக்கும் கோயிலையடைய நடக்கிறோம். முதலில் அடைவது உயர்ந்த கோபுரம். எடுப்பான தோற்றம். எழிலான பதுமைகள். ஐந்து நிலைகள். பூனைமேடு பி. எஸ். ஜி. ஜி. மங்குத்தாயம்மாள் அவர்களால் கட்டப்பெற்றதெனக் குறிப்பிடப்பட் டுள்ளது. இத்தலைமுறையினரும் கோபுரங் கட்டுவதில் குறைந்தவர்கள் இல்லை என்பதற்குச் சான்று பகர்ந்து கொண்டிருக்கிறது. நம் வலது கைப்பக்கம் கம்பீரமான விநாயகர் காட்சியளிக்கிறார். பானை வயிற்றோன்; ஒடிந்த கொம்பினன்; சர்ப்பாபரணன்; மோதகக் கையினன். அன்பெனும்பிடியுள் அகப்படும் இவ்வண்ணல் யானையை யாராலும் அங்குசத்தால் பிடித்து அடக்க முடியாது என்பதை யறிவிக்கக் கையில் அங்குசமும் வைத்துள்ளான். அடிவயிற்றிலிருந்து முடிவரை மூன் றரையடி உயரமிருக்கும். நம்மை முருகனிடம் ஆற்றுப் படுத்தும் கவியரசர் முதலில் ஐந்து கரத்தோனின் பெருமையைச் சொல்லி அதன்பின் திருத்தணிகைப் புராணத்தின் ஆபத்சகாய விநாயகர் வணக்கச் செய் யுளில் ஐந்து கரங்களிலுள்ள கருவிகளின் பயன் கூறப் பட்டுள்ளதையும் விளக்கினார்கள். நீங்களும் அப்பாட் டையும் அதன் பொருளையும் தெரிந்துகொள்ளவேண்டு மல்லவா!

"பண்ணியம் ஏந்தும் கரம்தனக்கு ஆக்கிப்
பால்நிலா மருப்புஅமர் திருக்கை
விண்ணவர்க்கு ஆக்கி அரதனக் கலச
வியன்கரம் தந்தை தாய்க்கு ஆக்கிக்
கண்ணில் ஆணவ வெங்கரி பிணித்து அடக்கிக்
கரிசினேற்கு இருகையும் ஆக்கும்
அண்ணலைத் தணிகை வரைவளர் ஆபத்
சகாயனை அகம்தழீஇக் களிப்பாம்."

பிள்ளையார் பணியாரம் ஏந்தும் கை ஒன்றினைத் தமக் காக்கிக் கொண்டார். ஒடிந்த கொம்பை ஏந்திய கையைத் தேவர்கட்கு ஆக்கினார். இரத்தின கலசம் தாங்கிய கை ஒன்றினைத் தம் பெற்றோருக் காக்கினார். கருணையற்ற ஆணவமாகிய கொடிய யானையைப் பாசாங்குசத்தால் பிடித்து அடக்கிக் குற்றம் உள்ளவனாகிய என் பொருட்டு இரண்டு திருக்கரங்களை ஆக்கினார். அடியார்கள் மேல் வைத்த கருணைக்கு இது ஓர் எடுத்துக் காட்டு ஆகும். மலைமேலேறுகிறோம். பாறைகளின் நடுவே பல இடங்களில் உள்ளங்கையில் ரேகைகள் ஓடியிருப்பன போன்று கருங்கல்லில் வெள்ளை ரேகைகள் ஓடியிருக்கின்றன. முதிர்ந்த பாறைகளின் நடுவே இவ்வாறான ரேகைகள் காணப்படும் போலும். மேற்குக் கடற்கரையிலுள்ள கோகர்ணம் கோயிலில் ஆவுடையார் சாளகிராமத்தினாலானது. அதன் மத்தியில் சுவர்ண ரேகை யோடுகிறது. அது போன்றுள்ளது என நான் பார்த்ததைக் கூறியதும் "பளிங்குத் தாரை பவள வெற்பில் குளிக்கும்போல் நூல் கோமாற்கு இடமாம்.........சோற்றுத்துறையே" என்று சுந்தரர் தேவாரத்தில் கூறப்பட்டுள்ள பகுதியை விளக்கி இலக்கியச் சிந்தனையைத் தூண்டினர் கவியரசு அவர்கள். பாறைகட்கும் பிறப்பு, வளர்ச்சி, முதிர்ச்சி இறப்பு உண்டென்பதை "கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்.........எல்லாப்

பிறப்பும் பிறந்து இளைத்தேன்'' எனவரும் திருவாசகத்தாலும் அறியலாம். இங்குள்ள பாறையின் மீது கல்வெட்டுக் காணப்பெறுகின்றது.

பழங்காலத்தில் ஏறும் வழியில் சந்நிதிக்கு எதிரில் இருந்த இடும்பன் கோயில் இடிந்துவிட்டது.இப்போது ஏறிவரும் வழியில் இடும்பன் சந்நிதியை இனித்தான் கட்டப்போகிறார்கள். முன்பு குருந்த மரத்தின் அடியில் இக்குழந்தை வேலாயுதன் குடிகொண்டிருந்ததால் குருந்த மரம் தலவிருட்சமாய்த் திகழ்ந்திருக்கிறது. குருந்த மரத்தின் சிறப்பைத் திருவாதவூர்ப் புராணம் கூறும். திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் குருவுக்காகத் தெய்வ பீடிகை அமைத்து வழிபட்டு வந்த பேற்றால் மணிவாசகப் பெருமான் சிவபுராணம் பாடினார். கல்லாலின் கீழிருந்து நால்வர்க்கு உரை செய்த நம்பெருமானார் குருந்த மரத்தடியில் குருவாய் வந்து மணிவாசகருக்கு அருளி, அவரை ஆட்கொண்டார்.

இக்கோயில் தலவிருட்சமான குருந்தமரமும் பட்டுவிட்டது. இனியாவது குருந்தமரம் வைத்து வளர்ப்பார்களென எதிர்பார்க்கலாம். காசி விசுவநாதரும் விசாலாட்சியும் காட்சியளிக்கின்றனர். எதிரிலுள்ள நவக்கிரகங்களின் சந்நிதி பிற்சேர்க்கை. இன்னும் மேலே ஏறும்போது அறுகோண வடிவமான ஆறுமுகச் சுனையையும் மயில் வடிவான மயில் சுனையையும் காணலாம். அடுத்து இடதுபுறம் ஆதியில் சிவலிங்க வடிவாய்க் காட்சியளித்த மூலமூர்த்தியைப் பார்க்கலாம். வலம் வந்து சந்நிதியில் நிலத்தில் வீழ்ந்து கும்பிட்டுக் குமரக்கடவுளின் அர்த்தமண்டபம் அடைகிறோம். இக்குமரன்தான் குழந்தை வேலாயுத சுவாமி. இருள் கெடுப்பவன். அருள் கொடுப்பவன். அருளை அள்ளி அள்ளிக் கொடுப்பவன். கொடுப்பதிலும் எல்லையின்றிக்

கொடுப்பவன். திருப்பூருக்கு அருகிலுள்ள வேலம் பாளையம் செட்டியார்கட்கு இவ்விறைவன் குலதெய்வம். ஐந்நூறு அறுநூறு ஆண்டுகட்கு முன் கங்காதரச் செட்டியார் கனவில், மூலமூர்த்தி தோன்றி, மூலவர் அமைய வேண்டிய தோற்றம் கூறி மறைந்ததால் இக் குழந்தை வடிவில் எழுந்தருளியுள்ளான். இப்போ திருப்பது இரண்டாவது மூர்த்தி. பழநி போன்று மேற்கு நோக்கிக் காட்சியளிக்கும் இக்குழந்தை தண் டாயுதபாணியாக நின்ற கோலத்தில் உள்ளார். நாலடியுயரமிருக்கும். நல்ல மூர்த்தி. அருகிலுள்ள அகத்தியமலைக் குடமுனி கும்பிட்டமூர்த்தி இக்குழந்தை வேலாயுத சுவாமி. நல்ல கீர்த்தியுடையவர்.

“ துறு துறு வென மலைமனமொடு திரை கடல்
சுண்ட வடக்கி முன் உண்ட குறுமுனி
தொழு, குக, முருக, கடம்ப,
குருந்தமிருந்த குமார நம.”

எனப் பாடிப் பரவும் கோவைக் கவியரசுடன் நாமும் தலைதாழ்த்தி வணங்குகிறோம், வாயார வாழ்த்து கிறோம். மனதார நினைக்கிறோம். உள்ளக்கிழியில் உரு வெழுதிக் கொள்கிறோம். பிரமன் வணங்கும் பெற்றி யோனை இம்மூர்த்தியைச் சூரியன் மார்ச் மாதம் 21,22,23 தினங்களில் தன் ஒளிக் கிரணங்கள் ஆகிய கைகளால் பாதபூசை புரிகிறான்.

இக்குழந்தை வேலாயுதனுக்குத் தினப்படி ஒரு வேளை பூசை; ஒரே ஒரு முறைக்காரர். தை மாதம் பூசத்தை ஒட்டிப் பிரம்மோற்சவம் நடைபெறுகிறது. மாதந்தோறும் கார்த்திகை விழா உண்டு. அதில் மகத் தானது கார்த்திகை மாதத்தில் வரும் திருக்கார்த்திகை விழா. சோமவாரமும் சிறப்பானதே. சாதாரண நாட் களில் கோயில் முறைகாரரையும் தண்ணீர்ப்பந்தல்

சாதுவையும் தவிர வேறு யாரும் இருப்பதில்லை. பக்கத்தில் வீடுகளோ கடைகளோ இல்லாததால் எதுவும் கிடைப்பதில்லை. மலைக்கு வழிபாட்டிற்கு வருபவர்கள் இதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். சுவாமிக்கு சுமார் 90 ஏக்கர் பூமியுள்ளதாம். இக்கோயிலைக் கண்போன்று காத்து வருபவர்கள் அறநிலையக் காப்பாளர்களாகிய மூன்று தனவந்தர்களும், அறநிலைய நிர்வாகி ஒருவருமாவார்.

இக்குமரனைக் கண்குளிரக் கண்டு நினைவிலிருத்த விரும்பும் அடியார்கள் இருவகை அலங்காரங்கள் செய்து பார்த்து மகிழ்கிறார்கள். ஒன்று இராஜ அலங்காரம். மற்றொன்று வேட அலங்காரம். தேவர்களின் அரசனான இந்திரன் மகளைக் கைப்பிடித்ததால் தேவ அரசாகவும், தினைப்புன வேட்டுவச்சி வள்ளியை விரும்பி நம்பிராசன் மருமகனாய் விளங்கியதால் வேட அரசனாகவும் இக்குமாரராஜா நமக்குக் காட்சியளிக்கிறார். சிறு குழந்தை என எண்ணிக் கட்டித்தழுவிக் கனிவாயில் முத்தமிட முடிவதில்லை. மூலத்தானத்திலல்லவா இருக்கிறான். அரசனாகவல்லவா காட்சியளிக்கிறான். அணுகாது அகலாது தீக்காய்வது போன்று அர்த்தமண்டபத்திலிருந்து தான் அவனழகைப் பருக முடிகிறது. ஆனால் இக்குறையை நீக்கப் பிள்ளைத்தமிழ் பாடிக் குழந்தைக்குமரனைக் கண்டு, எடுத்து, அணைத்து, உச்சிமோந்து, தாலாட்டுப்பாடியும் சப்பாணி கொட்டச் செய்தும் முத்தமிட்டும் அம்புலி காட்டியும் சிறுபறை முழக்கச்செய்தும் சிறுதேர் உருட்டச்செய்தும் பார்த்துக் களித்த பெரியார் தவத்திரு கந்தசுவாமி சுவாமிகள்.

இருபதாம் நூற்றாண்டில் கொங்கு நாட்டில் தல புராணமும் பாடல்களும் இல்லாதிருந்த பல கோயில்களுக்கு அக்குறையை நிறைவு செய்த பெரியார் அவர். பெருந்தவசி. சிரவணபுரம் கௌமார மடத்தைச்சார்ந்

தவர். கவிஞர் பெருமகனார். அவர் மாணவர் 'கவியரசு' என்ற பட்டம் பெற்று நம்மிடை வாழ்பவர்கள் கவியரசு நடேச கவுண்டர் அவர்கள். அவரும் இக் குழந்தைக் குமரனை இரு பதிகம்பாடிப் பரவினவர்கள். அவர் இன்று இக்குமரனிடம் நம்மை ஆற்றுப்படுத்துவது எத்தனை பொருத்தம்! சென்னை வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் இக்குருந்தமலைக் குமரனைக் கும்பிட்டு அவன் வடிவழகில் மயங்கிச் சந்நிதியிலேயே பாடிய பதிகமொன்றும் உண்டு. வேண்டுவார் வேண்டுவதே ஈயும் விமலனாயிற்றே. வைதாரையும் வாழவைக்கும் வள்ளலாயிற்றே!

"ஜெய ஜெய பரகிரி சீர் அலைவாய் பழனபுரி
யேரகம் வாழிறைவா
ஜெய ஜெய பலபல மலைகிழவா பழமுதிர்
சோலைமலை திகழ் மழவா
ஜெய ஜெய மதகய மகள் தழுவிய வரைநிகர் புயனே
குற மாதழகார்
குய முருவிய வுரமுருக கடம்ப குருந்தமிருந்த
குமார நம."

*(குருந்தமலைப் பதிகம்-நடேச கவுண்டர்)*

எனப் போற்றும்போது குறைகளைக் களைவான். வேண்டினவற்றைக் கொடுப்பான் என்ற நிறை மனதுடன் திரும்புகிறோம்.



கொங்கு நாட்டிலே மிகப் பெரிய தேர் அவிநாசித் தேர்தான்



அவிநாசிக் கோயில் உட்பிரகாரச் சுவரிலுள்ள ஓவியம்—முதலைவாய்ப் பிள்ளையையும் சுந்தரரையும் காணலாம்.''

# அவிநாசி

தண்டமிழ் நாட்டில் சமய ஆசாரியர்களால் பாடல் பெற்ற சிவத்தலங்கள் இருநூற்று எழுபத்தைந்து. "திருமுறை கண்ட புராணம்" இயற்றியருளிய உமாபதி சிவாசாரியார் திருமுறைகளைத் தொகுக்கும்போது, தலயாத்திரை செய்வோருக்குப் பயன்படுமாறு தல முறை வகுத்து வரிசைப்படுத்தினார். அதன்படி ஒன்பது நாடுகளில் நடுநாயகமாய் விளங்கும் நம் கொங்கு நாட்டில் திருப்புக்கொளியூர் என்ற அவிநாசி முதல் கருவூர் ஆனிலை என்ற கரூர் ஈருக ஏழு பாடல் பெற்ற தலங்களைக் குறிப்பிடுகின்றார்.

இந்த அவிநாசி சென்னைக்குச் செல்லும் நெடுஞ் சாலையில் கோவையிலிருந்து 35 கிலோ மீட்டர் தூரத் திலும், திருப்பூரிலிருந்து சுமார் 10 கிலோ மீட்டருக் குள்ளும் இருக்கிறது. திருமுருகன் பூண்டிக்கும் இதற் கும் இடையே உள்ள தூரம் 5 கிலோ மீட்டர்தான். புக்கொளியூர் ஆகிய இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் திருநாமமே "அவிநாசி" என்பது. இன்று ஊருக்கும் அப்பெயர் வழங்கி வருகின்றது. ஊழிக் காலத்தும் விநாசமின்றி இருப்பதால் புக்கொளி யூரனுக்கு அவிநாசியப்பர் என்று பெயர். நாசம் எனில் கேடு. விநாசம் எனில் பெருங்கேடு. அவிநாசியப்பர் என்பதன் தொகுப்புப் பொருள் பெருங் கேடிலியப்பர் எனலாம். அம்பிகையின் பெயர் கருணாம்பிகை. பெருங் கருணை நாயகி என்றும் சொல்வதுண்டு.

கோயிலின் ஓரத்தில் ஓடும் ஓடை போற் காட்சி தருவது ஒரு சிற்ருறு. அதன் பெயர் நள்ளாறு. ஒரு காலத்தில் இந்நள்ளாற்றில் நல்ல தண்ணீர் ஓடியது உண்டு. அப்போது அது தீர்த்தமாய்த் திகழ்ந்தது. இப்போது தீர்த்தமாய்த் திகழ்வன கோயில் சந்நிதியில் கங்கையை ஒக்கும் காசிக்கிணறும், நாககன்னிகை தீர்த்தமும், ஐராவத தீர்த்தமும் ஆகும். ஆதியில் தலவிருட்சம் மாமரம். அதனடியில் அன்னை கருணும்பிகை அருந்தவம் செய்து மகாதேவனின் இடப்பாகம் பெற்ருள். மாமரம் இருந்த இடத்தில் இன்று பாதிரி மரத்தையும் அம்மை மாதவம் செய்த இடத்தில் அவளது தவக்கோலப் படிமத்தையும் பார்க்கலாம்.

காசி விசுவேசுவரரிடமிருந்து ஒரு வேர் கிளைத்து ஓடி அவிநாசியப்பராய் முளைத்ததென்று தலபுராணம் மொழியும். திருப்புக்கொளியூர் முதன் முதலில் கோயிலுக்கும் குளத்திற்கும் தென்பால் இருந்தது. மறைந்த அவ்வூரின் பெயர் பதிவுப் பத்திரங்களில் ‘புக்கொளியூர் நத்தம்’ என இப்போது காணப்படுகின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வரலாற்ரேடு தொடர்புடைய நகர். சரித்திரப் பெருமைபெற்ற வியத்தகு நிகழ்ச்சி ஒன்றினை நம்பியாரூரர் இங்கு நிகழ்த்திஞர்.

சுந்தரர் காலத்துக்கு உங்கள் சிந்தனையைத் திருப்புகிறேன். சுந்தரர் திருப்புக்கொளியூர் வீதியில் செல்லும்போது எதிர் எதிரான இரு வீடுகளில் ஒன்றில் மங்கல ஒலியும், பிறிதொன்றில் அமங்கல ஒலியும் கேட்டு ஐயுற்று ஆண்டுள்ளாரை வினவிஞர். மங்கல ஒலி முழங்கும் வீட்டுச் சிறுவனுக்கு முந்நூலணி விழா நிகழ்கின்றதென்றும், அவனேடு ஒத்த வயதினஞய் இருந்த எதிர்வீட்டுச் சிறுவனை மூன்ருண்டுகளுக்கு முன் முதலை விழுங்கி விட்டதால் அவனை ஈன்ரேர் தம்

புதல்வனும் இருப்பின் அவனுக்குத் தாமும் உபநயனம் செய்வித்து மகிழலாமே என்ற ஏக்கத்தால் அழுகின் றனர் என்றும் அவண் இருந்தோர் அறிவித்தனர். அதற்குள் சுந்தரர் அங்கு எழுந்தருளியிருப்பதை அறிந்த அப்பெற்றோர்கள் தங்கள் துன்பத்தை முற்றும் மறந்து தெருவில் உற்று ஆரூரர் திருவடிகளை அகமிக மகிழ்ந்து வணங்கினர். சுந்தரர் இந்நிகழ்ச்சி பற்றி வினவிய போதும் அக்கதையை விவரிக்காமல் அவரது வருகைக்கு மகிழ்ந்தே வரவேற்றனர்.



" அவிநாசிப் பெருமானின் விமானம் "

சுந்தரர் அவர்களுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்டு அந்தக் குளக்கரைக்கு அழைத்துச் சென்று "எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெருமானையே" என்ற பதிகத்தைப் பாடியருளினார். நான்காம் திருப் பாட்டில் "கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச் சொல்லு காலனையே" என்று முடித்தவுடன் வறண் டிருந்த குளத்தில் நீர் நிரம்பியது. பிள்ளையை விழுங்கிய முதலை வந்தது. கவினழகு படைத்த அப்

பையனைக் கக்கியது. தன் வயிற்றினுள் பத்துமாத வளர்ச்சியோடு பெற்றெடுத்த தாய், மூன்றாண்டின் முழு வளர்ச்சியையும் முழுமுதற் கடவுளின் திறத்தால் முதலையின் வயிற்றிற்பெற்ற அப்பையனை ஆரத் தழுவினாள். பெற்றோர் இருவரும் திருவருள் திறத்தில் திளைத்து அவிநாசியப்பரை ஆரூரருடன் தொழுதனர். அப்பையனுக்கு மங்கல வாத்தியங்கள் முழங்க உபநயனம் செய்து வைத்தார் சுந்தரர்.

குளக்கரையில் சுந்தரருக்குத் தனிக் கோயில் ஒன்றுள்ளது. சுந்தரர் திருவுருவமும், அதன் முன் முதலை தான் உண்ட மதலையைக் கக்குகின்ற வடிவமும் காணப்படுகின்றன. மூவர் முதலிகள் செய்த அற்புதங்களுள் முதலை வாய்ப்பிள்ளையை அழைத்ததே அதியற்புதம் என்று சிவப்பிரகாசர் நால்வர் நான்மணி மாலையில் குறிப்பிடுகின்றார். பாட்டைப் பார்ப்போமா?

“ போதமுண்ட பிள்ளை என்பு பொருகண்மாது செய்ததோ
காதல்கொண்டு சொல்லின் மன்னர் கன்மிதப்ப உய்த்ததோ
வாய்திறந்து முதலை கக்க மகனை நீ அழைத்ததோ
யாது நம்பி யரிது நன் றெனக்கியம்ப வேண்டுமே ”

எலும்பைப் பெண்ணாகியதும், கடலில் கல் மிதக்க உய்த்ததும் ஆகிய அற்புதங்களுக்கு எலும்பும், கல்லும் ஆதாரமிருந்தன. வறண்ட குளத்தில் நீர் முதலில் வர, அந்நீரில் முன்பு வாழ்ந்த முதலை உயிர் பெற்றுத் தோன்ற, அதன் வயிற்றிலே மூன்றாண்டிற்கு முன் இறந்த மதலை உயிரோடிருந்தால் பெற்றிருக்கக் கூடிய வளர்ச்சியுடன் வெளிவந்தான். எனவே நம்பியாரூரர் செயல் மிக அரிது என எண்ணிய சிவப்பிரகாசர் அதனை மறைத்து நம்பியாரூரரிடமே வினவுகிறார்.



குளக்கரையில் அமைந்துள்ள
சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கோயில்

இப்பழம்பதி சமய குரவர்களில் தேவாரம் பாடிய மூவராலும், அருணகிரிநாதராலும் பாடப்பெற்றதாகும். சுந்தரர் ஒரு பதிகமே பாடியுள்ளதை முன்பே பார்த்தோம். மணிவாசகப் பெருமான் திருவாசகத்தில் ஆனந்த மாலையில் "நரியைக் குதிரைப் பரியாக்கி" என்ற பாட்டில் "அரிய பொருளே அவிநாசியப்பா! பாண்டி வெள்ளமே" என்று அழைக்கிருர். நாமும் கேட்கிறேம்; கரைகிறேம்; கண்ணீர் உகுக்கிறேம். நாவுக்கரசரும் திருத்தாண்டகத்தில் "அணவரியன் கண்டாய், அமலன் கண்டாய், அவிநாசி கண்டாய் அண்டத்தான் கண்டாய்"எனக் காண்கிருர்; நமக்கும் காட்டுகிருர். அருணகிரிநாதரும் "அவிநாசிப் பெருமாளே" என்றும் "புக்கொளியூருடையார் புகழ் தம்பிரானே" "கொங்கிற்ருெக்கா ரவிநாசியில்" என்றும் திருப்புகழில் ஆறிடங்களில் அவிநாசியைப் புகழ்ந்து பாடிப் பரவுவதைக் கண்ணுறுகிறேம்.

கோயிலின் முன் உயர்ந்த தீபத்தம்பம் உள்ளது. அதில் மீன் வாயிற் சிவலிங்கத்தையும், முதலை வாயிற் பிள்ளையையும், தாளம் கைக்கொண்ட சுந்தரரையும் பார்க்கிறோம். கோயிலுக்கு இராசகோபுரம் இல்லை. நுழை வாயிலின் முன்பு செல்வவிநாயகர் மேடையில் வடக்கு நோக்கி வீற்றிருக்கிறார். எல்லாவற்றையும் முடித்து வைக்கும் மூத்த பிள்ளையார் முன்பு தலையிற் குட்டிக்கொண்டு வணங்கி, நுழைவாயிலில் இருமருங்கும் இரு நடனவிநாயகரையும் கண்டு, உயரமான கோபுர வாசற்படியை அடைகிறோம். உயரத்தை அறியத் தலை நிமிர்ந்து பார்த்தால், நடை விட்டத்தின் நடுவில் உச்சிப் பிள்ளையார் ஓரடி உயரத்தில் மேற்கு நோக்கிக் காட்சியளிப்பதைப் பார்க்கலாம். "கணபதி பூசை கைமேல் பலன்" எனும் முதுமொழிக்கேற்ப இங்கு சாரம் கட்டி, மேலே சென்று, அபிடேகம் செய்து, பூசித்தால் விரைவில் பெருமழை பெய்வது அனுபவம் என்று கூறப்படுகிறது. உட்புறம் கோபுர வாயிலில் இறைவனை நோக்கியவாறு இடப்பக்கம் சுந்தரரும், வலப்பக்கம் வாதவூரரும் நிற்பதைக் காணலாம். முன் மண்டபத்தில் ஊர்த்துவ தாண்டவ நடராசர், ஆலங்காட்டுக் காளியம்மை முதலிய ஆறு பெரிய ஆறடி உயரமுள்ள திருவுருவங்கள் உள்ளன. மூன்று தெய்வ வடிவுடையவை.

உள் பிரகாரத்துள் சிறுசெய் குன்று போன்றுள்ள மேடைமேல் நிற்கும் குமரன் நம் கண்ணிற் படுகிறார். அவரை,

" இறவாமற் பிறவாமல் எனையாள் சற்குருவாகிப்
பிறவாகித்திரமான பெருவாழ்வைத் தருவாயே
குறமாதைப் புணர்வோனே குகனே சொற் குமரேசா
அறநாலைப் புகல்வோனே அவிநாசிப் பெருமாளே."

எனப் பாடி, வணங்கிக் கருவறைமுன் வருகிரேம். கருவறையில் உள்ள மூலவர் காலம் கடந்தவர். சுயம்பு மூர்த்தி. சத்யோஜாதப் பெருமான். ஞானப் பெருங் கருணை நாயகி பூசித்த இவரைத் திரேதாயுகத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் வெள்ளையானையும், துவாபர யுகத்தில் மூன்ருண்டுகள் மாரீசனின் தாய் தாடகையும், கலியுகத்தில் இருபத்தொரு மாதங்கள் நாக கன்னிகை களும் வழிபட்டு விரும்பிய வரம் பெற்றனராம். ஐந்து



அவிநாசிக் கருணம்பிகை அம்மன் கோயில்.

நாள் வழிபட்ட சங்க கன்னனும், ஒருநாள் வழிபட்ட தெய்வ ரம்பையும், ஒரு முகூர்த்தம் வழிபட்ட எக்ஞ குப்தனும் வீடுபேறு பெற்ருர்கள் என இத்தல புராணம் இயம்பும். வெளிப்பிரகாரத்தில் பெருங் கருணம்பிகை யின் கோயில் உள்ளது. இறைவியின் திருவுருவம் சுமார் மூன்றரையடி உயரம் இருக்கும். நின்ற திருக் கோலம். எழிலான திருவுருவம். உற்று நோக்கினுல் அவளிரு அருள் விழிகளிலே பெருங்கருணை பெருகு வதைக் காணலாம். இறைவி கோயிலின் வெளி

மண்டபத்தில் உள்ள சிறிய, அழகிய, சிறந்த வேலைப் பாடுடைய குறவன், குறத்தி, வேடுவன், வேடுவச்சி போன்ற ஆறு சிற்பங்கள் குறிப்பிடத்தக்கன.

காசியில் வாசி அவிநாசியல்லவா! ஆகையால் கால பைரவருக்கு இங்கு மகிமை அதிகம். சிவனடி



அவிநாசிக் கோயில் விதானம்

யார் தவறிச் செய்த குற்றங்களுக்கு யமனை ஏவாது பைரவரைக்கொண்டு தண்டனை கொடுத்துத் தீர்த் தலும், முடிவோர் காதில் பஞ்சாட்சரத்தை இறைவனே மொழிந்து சிவலோகம் அனுப்புவதும் இத்தலத்துச் சிறப்புக்களாக அறியப்படுகின்றன. இறைவனின் பக்

கத்திலேயே உட்பிரகாரத்தில் ஈசானிய திக்கில் கங்கைத் தீர்த்தத்தினருகே தெற்கு நோக்கி நான்கு கைகளுடனும் நாயுடனும் காலபைரவர் காட்சியளிக்கிருர். காரியம் கைகூடப் பெற்றவர்கள் வாரத்தில் இருமுறை வடைமாலை சாத்தி இவ்வரசித்தி மூர்த்தியை வணங்குகின்றனர்.

தமிழ் நாட்டிலுள்ள மிகப் பெரிய தேர்களில் அவிநாசித் தேரும் ஒன்று. ‘திருவாரூர்த் தேரழகு’ என்று திருவாரூர்த் தேரைச் சிறப்பாகக் கூறுவர். அந்தத் தேருக்கு நிகரானது அவிநாசியிலுள்ள இந்தத் தேர்தான். திருவாரூர்த் தேர் ஓடுவதில்லை. இந்தத் தேர் இன்றும் ஓடுகிறது. ஊர் மக்கள் ஒன்று கூடி இழுக்கின்றனர். பகலிலெல்லாம் வேலை செய்துவிட்டு இரவில் பத்து மணிக்கு வடம் பிடிக்கின்றனர். பக்கத்து ஊர் மக்கள் பலரும் பங்குபற்றும் பெருவிழா அவிநாசித் தேர்விழா. தேர் நிலைக்குவர பல நாள் பிடிக்கும்.

இவ்வூர்த் தலபுராணம் 1021 பாடல்களையும், 13 சருக்கங்களையும் உடையது. இளையான் கவிராயரால் இயற்றப்பெற்றது. கரும்புலவர் என்ற கருணைதாசர் செய்த கருணாகரமாலைக் கீர்த்தனைகள் உண்டு. செட்டிபாளையம் மகாவித்துவான் வாசுதேவ முதலியார் இயற்றிய கருணாம்பிகை சதகமும், கௌமார மடம் கந்தசாமி சுவாமிகளின் யமக அந்தாதியும், கோவைச் சிவக்கவிமணி சி. கே. சுப்ரமணிய முதலியார் பாடிய கருணாம்பிகை பிள்ளைத் தமிழும், கோவை கவியரசு நடேச கவுண்டரின் கீர்த்தனைகளும் குறிப்பிடத்தக்கன. 1153-ம் ஆண்டுக் குலோத்துங்க கொங்குச் சோழன் காலத்திலிருந்து 1695-ல் சிக்கதேவராய உடையார் காலம்வரை சுமார் நாற்பது கல்வெட்டுகளைச் சுற்றுப் புற மண்டபச் சுவர்களிலும் சந்நிதித் தூண்களிலும் காணலாம். இந்தியப் பேரரசின் பழம்பொருட்

பாதுகாப்பில் இத்திருக்கோயில் உள்ளது. பக்கத்தே பாடல் பெற்ற திருமுருகன் பூண்டியும் வைப்புத்தல மான சேவூரும் மொக்கணீசுரமும் அமைந்துள்ளன. "இதுவோ அவிநாசி இத்தலமோ......வாவா என் றழைத்த மண்" என்னும் பழம்பாடல் ஒன்று இவ்வூரின் பெருமை பற்றிச் சுருக்கமாய் எடுத்துரைக்கும்.

"புந்தி யுறைவாய் புக்கொளியூர் அவிநாசியே
நந்தி உனை வேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே."

என்று நாமும் அழுது அரற்றித் தொழுது துதித்து இவ்வவிநாசியப்பரிடமும் அருட்பெரும் கருணைச் செல்வியிடமும் வேண்டிக்கொண்டு விடைபெறு வோமாக!

கொள்ளேனெனினும் எழுத்தைந்தும் உள்கோதுயாதும்
தள்ளேனெனினு முனைச்சார்தவம் சார்ந்திலாரை
விள்ளேனெனினும் எனைநீ கைவிடேல் விடேல்காண்
நள்ளாறுடையாய் அவிநாசி நயந்துளானே.

(தவத்திரு சாந்தலிங்க அடிகளார் அருளிய
வைராக்கிய சதகம்)



# திருமுருகன் பூண்டி

சிவபூசை செய்வது ஆன்மாக்களது தவிர்க்க ஒண்ணுக்கடமை என்பதை உணர்த்த சோமசுந்தர பாண்டியனாய் வந்த இறைவனே மதுரையில் "இம்மையே நன்மை தருவார்" என்ற மூர்த்தியை நிறுவித் தம்மைத்தாமே வழிபட்டார். அதுபோல அம்மை காஞ்சியிலும், மயிலாப்பூரிலும், மயிலாடு துறையிலும் இறைவனைப் பூசித்துள்ளார். கணபதி, சிவ பூசனை புரிந்த தலம் திருச்செங்காட்டங் குடியிலுள்ள கணபதீச்சுரம். அதுபோல் முருகன் பூசித்த தலங்களுள் செந்தூரும், சேய்ஞ்ஞலூரும், திரு முருகன் பூண்டியும் முக்கியமானவை.

திருமுருகன் பூண்டியில் முருகன் பூசித்த இம் மூர்த்தியின் திருநாமம் முருகநாதர். (சத்யோஜாத மூர்த்தி) மேற்குத்திசை நோக்கி வீற்றிருக்கிறார். இறைவியின் பெயர் "முயங்குபூண் முலைவல்லி". வட மேற்றிசையிலுள்ள பிரம தீர்த்தத்தில் நீராடி இங்கு முருகநாதரை வழி பட்டால் பிரம்மஹத்தி, பைத்தியம், பில்லி, சூனியம் முதலிய அனைத்தும் நீங்குமாதலின் பல ஊர்களைச் சார்ந்த பைத்தியங்கள் இங்கு வந்து தங்கி முறைப்படி வழிபட்டு நலனடையக் காணலாம்.

இத்தலம் அவிநாசியிலிருந்து சுமார் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. கோவை—திருப்பூர்



திருமுருகன் பூண்டி— முருகநாதர் கோயில்

நேர் பாதையில் அவிநாசிக்கு அடுத்துள்ளது. ஊர் சிறியதே. சிற்பம் செதுக்குவதிலும், செப்புப் பாத்தி ரங்கள் செய்வதிலும் ஊர் மக்கள் பெயர் பெற்றவர் கள். மாதவி என்பது முல்லைக் கொடியில் ஒரு சாதி. "முல்லைத்தாது மணங்கமழ் முருகன்பூண்டி" என்று சுந்தரரும் தேவாரத்தில் குறித்தார். முருகநாதரை முதலில் வணங்கிப் பின்பு மாதவி வனேசுரரைப் போய்ப் பார்த்து வழிபடுவோமா ?

முருகநாதர் கோயில் மேற்குப் பார்த்துள்ளது. இங்கு வழிபட்ட அகத்தியரையும், மார்க்கண்டே யரையும், துருவாசரையும் உட்புறக் கற்சுவர்களில் காணலாம். அகத்தியர் வழிபட்ட கோயிகள் எல்லாம் மேற்குமுக மூர்த்தியை உடையவை என்றும், சத்யோ ஜாதமூர்த்தியைப் பூசிப்பவர்கள் வீரசைவர்கள் என்றும் கூறி அகத்தியரும்வீர சைவர் என்றும் மொழிவர் சிலர். இக்கருத்தை ஆராய்ச்சியாளரிடம் விட்டு விடுவோம். கோயிலின் உள்ளே புகுவோம்.

கொடிமரம் தாண்டியதும் கோயிலின் உள் வாயி லில் நமக்கு வலப்புறம் மூன்று திருஉருவங்கள் காணப் படுகின்றன. ஒன்று வில்லும் அம்பும் பிடித்த வேட்டு வக்கோலம். மற்றவற்றுள் ஒன்றில் பரவச நிலையில் நிற்கும் ஒருவர். அவரே காண்போருக்குப் பரிதாப நிலையில் நிற்கிறார், மற்றொன்றில். இம்மூன்று சிற்பங் களும் பழமை வாய்ந்தவையாய்த் தோன்றுகின்றன. இவற்றின் விளக்கம் அறிய உங்கள் சிந்தனையைச் சுந்தரர் காலத்திற்குக் கொண்டு செல்கிறேன்.

பொன் வண்ணத் தந்தாதியும், ஆதியுலாவும் பாடிய சேரமான் பெருமாள் நாயனார் சுந்தரரின் உயிர்த் தோழர். சுந்தரர் சேரநாட்டுக்கு வந்து திருவாரூர் திரும்பும் போது அவருக்குத் தக்க பரிசுப் பொருள்

களைக் கொடுத்து அனுப்பினார் சேரமான். இத்தலத்தின் வழியாக ஆரூரர் வருகையில், இறைவனது திருவிளையாட்டால் சிவகணங்கள் வேடராகச் சென்று அச் செல்வங்களைப் பறித்து வந்து சந்நிதி முன்பு வைத்தன. வேடுபறி நடந்த இடமான கூப்பிடு விநாயகர் கோயிலை ஒரு கல் தூரத்தில், கருவேலங் காட்டின் நடுவிற் பாறைமேல் இன்றும் காணலாம். பறி கொடுத்த ஆரூரர் அல்லலுடன் முருகநாதர் மருங்கு அணைந்து "எல்லை காப்பது ஒன்று இல்லையாகில் நீர் எத்துக்கு இங்கு இருந்தீர் எம்பிரானிரே" என உரிமையுடன் வினவினார். "கொடுகு வெஞ்சிலை" என்று தொடங்கும் திருப்பதிகத்தில். உடனே பரம்பொருள் அருளால் வேடுவர் பறித்தன அனைத்தும் சிவகணங்களால் திருவாயிலின் முன் குவிக்கப்பட்டன. பெற்ற ஆரூரர் மகிழ்வெய்தினார். பறிகொடுத்த சுந்தரரின் பரிதாப நிலையையும் திரும்பப் பெற்ற பின் அடைந்த பரவச நிலையையும் எதிரில் எக்களிப்புடன் நோக்கும் வேட்டுவர் தலைவனாய் வில் ஏந்தி வந்த வேலவன் தாதையையுமே இம்மண்டபத்தில் நாம் காண்கிறோம். கல்லிலே காணும் இவ்வரலாற்று நிகழ்ச்சியைக் கவிதையிலே காண விரும்பும் வாசகர் "சுந்தரர் - வேடுபறி" என்ற நூலைப் பார்க்கட்டும். நல்ல விளக்கம் கிட்டும்.

அடுத்து இருப்பது ஆறுமுகன் சந்நிதி. தெற்கு நோக்கிய சிறப்புடையது. ஆறுமுகமும், பன்னிரு கரங்களும் உடைய அம்மூர்த்தி அழகிய மயிலுடன் காட்சி அளிக்கிறார். கண்கண்ட தெய்வம். வேண்டுவார் வேண்டுவன அருளும் இவ்வேலன் நித்ய வரப்பிரசாதி. செந்தூரில் எப்படி சுப்ரமணியரின் மூலத்தானத்தில் அவர் பூசிக்கும் சிவலிங்கம் உள்ளதோ அப்படியே இங்கும் சிவலிங்கம் ஒன்று ஆறுமுகனின் கருவறை உள்ளே எதிர் மூலையில் இருக்கக் காணலாம்.

உட்பிரகாரத்துள் இருக்கும் சண்முக தீர்த்தம் முருகன் பூசனைக்காக வேலாயுதத்தால் தோண்டப்பட்டது. கோவிலுக்குப் பின்புறம் அக்கினி தீர்த்தமும் இடப் புறம் ஞான தீர்த்தமும் உண்டு. மூலத்தானச் சிவலிங்க மூர்த்திக்கு முருகநாதர் என்று பெயர். தினமும் நான்கு கால பூஜையும் மாசி மாதத்தில் பதினொருநாள் பிரமோற்சவமும் நடைபெறுகின்றன. மாசி மகத்தில் தேர்விழா. கொங்குநாட்டில் தேர்விழா மிகச்சிறப் புடையதல்லவா ? முயங்கு பூண் முலை நாயகி கோயில் இறைவனின் இடப்பாகத்தில் வெளிச்சுற்றில் அமைந் துள்ளது. இவ்வம்மைக்கு ஆவுடைநாயகி என்ற பெயரும் உண்டு.

பிரகாரத்தில் பைரவரின் சந்நிதி முன்னர் நாலரை அடி நீளமும் அகலமும் ஆழமுமான குழி யைக் காணலாம். சுந்தரரிடமிருந்து பறித்த பொருளைப் பாதுகாக்க இது பயன் பட்டதாம். சுற்றி வலம் வந்து கொடி மரத்தின் முன் பணிந்து, விழுந்து, வணங்கி, அமர்ந்து தியானம் செய்து நாம் பார்த்த வற்றை மனத்திற்கண்டு வழிபட்டு விடை பெறுகிறோம். சற்றே தூரத்தில் சாலையின் மறுபுறம் உள்ள கோவிலை அடைந்தால் மாதவி வனேசுரரைக் காணலாம். கிழக்குப் பார்த்த சந்நிதி. சிலமுற்ற கோவில். ராச கோபுரத்துக்குப் பதில் பெரிய நந்தி சுவாமியை நோக் கிப் படுத்திருக்கிறார். மாலாதரன் என்ற வேட்டுவ அரசனால் பூசிக்கப்பட்ட இம் மாதவி வனேசுரர் சுயம்புமூர்த்தி. நுழைவாயிலில் ஒரு முக முருகன் ஒய்யாரமாய் நிற்கிறார். உள்ளே மாதவி தீர்த்தம். இடப்பாகத்தில் மங்களநாயகி எழுந்தருளி யிருக்கிறார்.

இக்காலத்தில் இத்தனை பெரிய திருக்கோவில் களைக் கட்ட முடியாவிடினும், சிலமுற்ற திருக்கோயில் களைச் செப்பனிடவும் நம் காலத்தவரால் முடிய

வில்லையே என்பதை எண்ணிக் கண்ணீர்மல்கத் திரும்புகிறோம். செம்மை மனம் படைத்தவர்கள் இனியாவது செய்ய அவன் அருள் சுரக்கட்டும் !

"புதிதுறப் பணிகள் வேறு புரிவதின் பழையதொன்றை
விதியுளிப் புதுக்குவோர்க்கு மிக்க புண்ணியந்தான் எய்தும்"

என்றும்,

"மாதவர் மடங்களாதி வரதன் மந்திரங்களாதி
நாதமா லிங்கமாதி நளின புட்கரணியாதி
சேதமுற்றிடின் முன்போல் செய்பவர்க்குறு பலன்தான்
ஓதுமுன் செய்தோர் தம்மில் ஆயிரம் குணித மோங்கும்"

என்றும் "சிவபுண்ணியத் தெளிவு" என்ற நூல் செப்பும்.

திருமுருகன் பூண்டியில் மாமாங்கப் பிள்ளையார் கோவிலும், கரிவரதராஜப் பெருமாள் கோவிலும் தனித்தனியே உள்ளன. முருகநாதர் கோயில் கல்வெட்டில் நந்தாவனத்திற்கு நிலமும் விளக்கு எரிப்பதற்கு நிபந்தங்களும் அன்பர்கள் பலரால் அளிக்கப்பட்ட செய்தியைக் காண்கிறோம், 1893ம் ஆண்டுக் கல்வெட்டு அறிக்கையில் 571 முதல் 579 வரை எண் பெற்றனவாக அவை இடம் பெற்றுள்ளன. இவை குலோத்துங்க சோழன் காலத்தையும் வீர ராஜேந்திரன் காலத்தையும் சேர்ந்தவை.

இவ்வூர்த் தலபுராணம் பாடியவர் ஓராட்டுக் குப்பை செட்டிப்பாளையம் வாசுதேவ முதலியார். அது பதினொரு சருக்கங்களும், அறுநூற்றுப் பதினெட்டு விருத்தங்களும் கொண்டது. "அவசியம் முன்வேண்டிப் பலகாலும்" என்று தொடங்கி "சிவகுமர அன்பீண்டிற் பெயரானே, திருமுருகன் பூண்டிப் பெரு

மாளே'' என்று வரும் அருணகிரிநாதர் திருப்புகழும் இவ்வூருக்கு உண்டு.

கொங்குநாட்டுத் தல யாத்திரையின்போது பட்டினத்தார் இவ்வூரில் பாடிய பாட்டொன்று ஆராயத் தகுந்தது.

'' இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்ன
முருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
வழைத்தாலும் போகேனரனே யென்றேக
பிழைத்தாலும் போகே னினி.''

பட்டினத்துப் பிள்ளையார் வாய் பேசாவிரதம் கொண்டிருந்தார். பசிக்கு உணவுக்காகக் கைதட்டிக் கேட்ட போது மூர்க்கன் அடித்துவிட்டான். அப்போது அரனை நினைந்து அரற்றிப் பாடிய பாடலே மேற்கண்ட பாடல். இதுபற்றிக் கர்ணபரம்பரைக் கதை பல கூறுவர்.

தவத்திரு தண்டபாணி சுவாமிகள் வண்ணம் பாடுவதில் வல்லவர். ''வண்ணச் சரபம்'' என்று அழைக்கப் பெற்றவர். இவர் சிவனுக்கு இரு பதிகங்களும், இவ்வூர்ப் பெருமாளுக்கு ஒரு பதிகமும் பாடியுள்ளார். அப்பாடல்கள் எளிமையானவை; இனிமையானவை.

முருகனே வழிபாடாற்றி வணங்கிப் பேறுபெற்ற முழுமுதல் மூர்த்தியை இன்று நாமும் வணங்கிப் பயன் பெறுகிறோம். அம் முருகனையும் வழுத்தி வரம் பெறுகிறோம். திரும்பிவரும் வழியில் கூப்பிடு விநாயகரையும் கைகூப்பித் தொழுது விடைபெறுவோமாக!

# சேவூர்

சைவ சமயப் பரமாசாரிய மூர்த்திகள் நால்வரில் தலங்கள்தோறும் சென்று பாடியவர் மூவர். அவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்தி சுவாமிகள் ஆவர். இம்மூவரும் பரமனைத் தனிப்படப் பதிகம்பாடிப் பரவித் துதித்துள்ளனர். அவ்வாறு அவர்கள் பாடியருளிய தலங்கட்குப் பாடல்பெற்ற தலங்கள் என்று பெயர். பிற தலங்கட்கான பதிகங்களில் பெயர் வைத்துப் பாடிய தலங்கட்கு வைப்புத் தலங்கள் என்று பெயர். கொங்கு நாட்டில் வைப்புத் தலங்கட்குக் குறைவில்லை. சுந்தரர் திருவாரூரில் இருந்துகொண்டு, தான் சென்று வந்த தலங்களையெல்லாம் நினைந்து பாடுகிறார். கொங்கு நாட்டுத் தல யாத்திரையின்போது வணங்கிய தலங்களையும் அப்பாட்டில் அமைக்கின்றார். ஊர்த்தொகையுள் முதற் பாட்டு,

"காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே அழுந்தூர்அரசே கொழுநற்
[கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப்படுவாய் பனங்காட் டூரானே
மாட்டூ ரறவா மறவா துன்னைப் பாடப் பணியாயே!"

என்பது.

இதில் வரும் மாட்டூர் என்பது கொங்கு நாட்டிலுள்ள சேவூரைக் குறிப்பதாகக் கொள்ளலாம். "மாட்டூர்" என்பதும் "ரிஷபபுரி" என்பதும் இவ்வூரின் பழம் பெயர்கள். இறையனார் அகப்பொருள் உதாரணப்பாடல்களில் பாண்டிய மன்னன் ஒருவன் சேவூர் என்னும் இடத்தில் சேரமன்னனுடன் போர் செய்ததாக ஒரு குறிப்புக் காணப்படுகிறது. அக்குறிப்பு இச் சேவூரைப்பற்றியதாக இருக்கலாம். சேவூர் அவிநாசியிலிருந்து மொண்டிபாளையம், அன்னூர் செல்லும் பாதையில் எட்டு கிலோமீட்டரில் உள்ளது. கோவையிலிருந்து அவிநாசி வந்தும் வரலாம். தூரம் 43 கிலோ மீட்டர். அவிநாசி வராது அன்னூர் சென்று மொண்டிபாளையம் வழியாகவும் வரலாம். மொண்டிபாளையத்திற்கும் சேவூருக்கும் ஒன்பது கிலோ மீட்டர். பல்லடம் தாலூகாவின் பழைய தலைநகர்; அவிநாசியிலிருந்து செல்லும்போது முதன் முதலில் நாம் பார்ப்பது ஒரு பெரிய குளத்தை. அக்குளத்தின் பெயர் "செம்பியன் குளம்". செம்பியன் என்ற குறுநில மன்னனால் ஆளப்பட்ட இடம் ஆகையால் அவன் பெயர் இக் குளத்திற்கு வழங்கி வருகிறது. குளத்திற்குச் சற்றுத் தொலைவில் செம்பியம்மன் கோயிலும், செம்பிய நல்லூர்க் கிராமமும் உள்ளன. இக்குளத்துநீர் மருந்துத் தன்மை உடையது. நீரிழிவு நோயைத்தடுக்க வல்லதாம். மைசூர் மன்னரின் நீரிழிவு நோய்க்கு இந் நீரைப் பயன்படுத்தினராம். குளத்தின் மத்தியில் ஒரு கிணறு உண்டு. அதனுள் வைரம் பாய்ந்த பனைமரத்தாலான ஏணி பலநாள் உள்ளே இருந்திருக்கிறது. நீர் எடுக்க அந்த ஏணியைப் பயன்படுத்தியிருக்கின்றனர். இனிக் கரைக்கு வந்து சற்றுத் தூரத்திலுள்ள ஜெயங்கொண்ட விநாயகரிடம் வருகிறோம். காலம் கடந்த கணபதி ஐங்கரங்களுடன் நமக்குக் காட்சியளிக்கிறார். சரிதம் பல கண்டவர். ஏதும் அறியாதவர் போல் வீற்றிருக்கிறார். வணங்கிச் சுற்று முற்றும்

பார்த்தால் எதிரே ஒரு பாழடைந்த கோட்டைதெரியும். கோட்டையிருந்த இடமாதலால் அப்பகுதிக்குக் கோட்டை மேடு என்று பெயர் வழங்குகிறது. பக்கலில் உள்ள பத்திரகாளியம்மன் ஊர்த் தெய்வம். இந்தப் பத்திரகாளிக்குப் புனுகு சாத்திஞல் உடனே மழை பெய்யுமாம். இப்பகுதி மக்கள் மழை வேண்டுமெனில் இந்த முறையைக் கையாண்டு மழையைப் பெய்விக்கிருர்களாம். கோட்டை மேட்டில் அனுமந்தராயன் கோயிலும் இருக்கிறது. அனுமந்தராயன் கோயில் உள்ள இடத்தில் பெருமாள்கோயிலும் இருக்க வேண்டுமல்லவா? இருக்கிறது. ஊரின் ஓரத்தேயுள்ள நெடுஞ்சாலேப் பக்கத்தில் கோயில்கொண்டுள்ள கல்யாண வேங்கடரமணப் பெருமாள், சீதேவி, பூதேவி ஆகிய தாயார்களுடன் காட்சியளிக்கிருர். உற்சவருமுண்டு. சுதர்சனமூர்த்தி, சக்கரத்தாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார் ஆகியோரும் சிலாரூபத்தில் காட்சியளிக்கின்றனர். சோழர்கள் காலத்துக் கருப்பக்கிரகம். அதைச் சுற்றிலும் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அர்த்த மண்டபத்துள் ஒரு சுரங்கப் பாதையுள்ளது. அது அரன் கோயிலுக்கு அரச குடும்பத்தினரை அழைத்துச் செல்ல அமைக்கப்பட்டிருக்கும் போலும். இப்போது அடைபட்டுள்ளது. நாம் அச்சுரங்கப் பாதையை இன்று உபயோகிக்க முடியாது. ஆகையால் வந்த வழியே திரும்பி வலம் வந்து வெளி வருகிருேம். இருநூறு மீட்டர் தூரம் கடந்தால் இறைவன் கோயிலே அடையலாம். பழமையான கோயில், பாழடைந்த நிலேயில் உள்ளது. பராமரிக்கப்பட வேண்டிய இக்கோயில் பாராமுகமாகக் கிடக்கின்றது. இங்குள்ள இறைவன் திருநாமம் "வாலீச்சுரமுடையார்." 'வாலீச்சுரர்' எனவும் அழைக்கப்படுகிருர். கல்வெட்டுக்காட்டும் பெயர் கபாலீச்சுரமுடையார் என்பது. கோயிலின் முகப்பில் இராசகோபுரம் இல்லே. கருடகம்பம் உண்டு.

கருட கம்பத்திற்குச் சற்றுத்தூரத்தே ஒரு கிணறு உள்ளது. இதனை இத்தலத்தின் தீர்த்தம் என்பர். அதன் பக்கலில் மண்தட்டிய மேடொன்று காணப்படுகிறது. இவ்விடம் ஒரு காலத்தில் பொன் தேரும் வெள்ளித் தேரும் நின்ற தேர் நிலையமாயிருந்ததாம். கொடிமரமும் பெயர் கூற நிற்கிறது. நுழை வாயிலில் இடப்புறம் சூரியன் மேற்கு நோக்கியுள்ளான். காலபைரவர் சந்நிதியும் உண்டு. உள் நுழையலாம். மகாமண்டபத்துள் இரண்டடி சம சதுரக்கல் தளவரிசையிலிருந்து தூக்கியவாறு உள்ளது. பெருமாள் கோயிலிற் பார்த்தோமல்லவா? அச்சுரங்கத்தின் வெளிவாயில் கதவு இது. இச்சுரங்கப் பாதையுள் நுழைந்து போனவர்கள் இக்காலத்தில் இங்கில்லை.

மகாமண்டபத்துள் ஆடும் பரமன் வெகு அழகாகக் காட்சியளிக்கிறார். அந்த மூர்த்தியின் தலைக்குப் பின்புறம் ஒன்பது சடை!-கள் சுருண்டு காணப்பெறுகின்றன. சுவர்ப் பக்கலில் மொக்கணீச்சுரத்து சொக்கர், மீனாட்சி, விநாயகர் ஆகியோரின் உற்சவமூர்த்திகள் உள்ளனர். ''மொக்கணீச்சுரம்'' திருவாசகத்தில் இடம் பெற்றுள்ள திருத்தலம். "மொக்கணியருளிய முழுத்தழல்மேனி, சொக்கதாகக் காட்டிய தொன்மையும்'' என்று கீர்த்தித் திருவகவலில் மாணிக்கவாசகப் பெருமான் குறிப்பிடுகிறார். திருவாசகத்தில் இடம் பெற்றுள்ள இத்தலம் சேஊருக்கு அருகாமையில் உள்ள இந்த மொக்கணீச்சுரம்தான் என்பது துடிசைக்கிழாரின் துணிந்த முடிபாகும். மொக்கணீச்சுரத்து உற்சவமூர்த்திகள், அக்கோயில் பழுதுபட்டிருப்பதால் இங்கு எழுந்தருளியுள்ளனர்.

துவார பாலகர்களைச் சற்றுப் பார்ப்போமா? நாலரையடி உயரமுள்ள அத் துவாரபாலகர்களின் தலைகள் துண்டிக்கப்பட்டுள்ளன. முகமதியர்

காலப் படையெடுப்பின் பரிசு அது எனக் கூறப் படுகிறது. உடைபட்ட அவற்றை எடுத்துவிட்டுப் புதியவற்றை ஸ்தாபனம் செய்யவேண்டும். வடுப்பட் டவை வணங்கத்தகுந்தவையல்ல. பழமை என்ற கார ணத்தால் பழுதானவற்றை வணங்குவது முறையல்ல. சுற்றுப்பிரகாரத்தில் கன்னி விநாயகர், பஞ்சமூர்த்தி, தண்டபாணி ஆகியோர் காட்சியளிக்கின்றனர். "நாராலே தோல் நீராலே" என்ற திருப்புகழ் இவ் வூருக்கு உரியது என்பர். இவ்வூருக்கு 1276-77 ஆகிய இரு திருப்புகழ்ப் பாடல்கள் இருப்பதாய்க் கூறுகின் றனர். ஆறுமுக சுவாமி சந்நிதிக்கு அடுத்திருப்பது இறைவியின் சந்நிதி. அம்பிகையின் பெயர் அறப் பெரும் செல்வி. வடமொழியில் 'தர்ம சம்வர்த்தினி' என்று மொழிபெயர்த்துக் கூறுகின்றனர். கையில் தாம ரைப்பூவுடன் காட்சியளிக்கும் அம்பிகை கருணைமிகுந்த தெய்வம். சற்றுத்தூரத்திலுள்ள வேப்பமரத்தினடியில் ஆவுடையாருடன் கூடிய பெரிய சிவலிங்கம் ஒன்று காணப்படுகிறது. இது பழமையான திருவுருவம். ஏனோ கவனிப்பாரற்று மரத்தடியில் தவம் கிடக்கிறார். சேலூர்க்கோயில் மிகவும் பழமையானது. கிலமுற்றுள் ளது. புதுப்பிக்கப்படவேண்டும். கொங்கு நாட்டிலுள்ள பெருந் தனவந்தர்கள் இக்கோயிலைச் சீர்படுத்திச் சிவ புண்ணியத்தைச் சேகரிக்கலாம். இல்லை யெனில் கொங்கு நாட்டின் வைப்புத் தலங்களான ஏழூர், தோழூர் ஆகியவற்றிற்கு நேர்ந்த கதியே இதற்கும் நேரும்.



# மொண்டி பாளையம்

வைணவர்கட்குத் திருவரங்கமும், திருப்பதியும் மிகச்சிறந்த தலங்கள். திருவரங்கத்தைக் கோயி லென்றும் திருப்பதியைத் திருமலையென்றும் கூறிக் கொண்டாடுவர். இதேபோலச் சைவ சமயத்தில் கோயில் எனில் சிதம்பரத்தையும் திருமலை யென்றால் கயிலாயத்தையும் குறிக்கும். திருப்பதி உள்ளதாகிய உச்சிமலை வேங்கடாசலம் எனப்படும். அதன் கீழுள்ள ஏனைய ஆறு மலைகளும் சேஷாசலம், வேதாசலம் ரிஷபாசலம், அஞ்சனாசலம், கருடாசலம், நாராயணா சலம் எனப்படும். ஆதிசேடன் சுருண்டு படுத்திருக் கிறார் என்றும் ஒவ்வொரு வளையமும் ஒவ்வொரு மலையாகத் தோற்றமளிக்கிறதென்றும் புராணம் கூறும். கிருதக யுகத்தில் விருஷபாத்திரி என்றும் திரேதாயுகத்தில் அஞ்சனாசலம் என்றும் துவாபர யுகத்தில் சேஷாத்திரி என்றும் கலியுகத்தில் வெங்கடா சலம் என்றும் பெயர் பெற்றது திருப்பதி மலை. திரு வேங்கடத்தின் பெருமையை ஆழ்வார்கள் பாடியுள் ளனர். படியாய்க்கிடந்து பவளவாய் காணவும், அம் மலைமேலுள்ள சுனையில் மீனாய்ப் பிறக்கவும் விரும்பிப் பாடிய பாடல்களும் உண்டு.

“ ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி
வழுவிலா வடிமை செய்ய வேண்டும்நாம்
தெழிகுர லருவித் திருவேங்கடத்து
எழில் கொள் சோதி யெந்தை தந்தை தந்தைக்கே.”





மொண்டிபாளையம்—வெங்கடேசர் கோயில் முகப்பு உள்தோற்றம்—முன்தோற்றம்.

எனமொழிந்த குருகூர்ச் சடகோபன் எனும் நம்மாழ்வார், அம்மலையைத் தொழுவதால் வரும் பயனைப் பின்னுள்ள பாட்டால் விளக்குகிறுர்.

"குன்ற மேந்திக் குளிர்மழை காத்தவன்
அன்று ஞால மளந்த பிரான் பரன்
சென்று சேர்திரு வேங்கட மாமலை
ஒன்றுமே தொழ நம்வினை யோயுமே."

அக்காலத்தில், கொங்கு நாட்டுப் பகுதியில் வாழ்ந்த மக்களில் பலருக்கு ஏழுமலையானின் காட்சி கிடைக்க வாய்ப்பில்லாது இருந்தது. பவாநி யாற்றிற்குத் தெற்கே முப்பது கிலோ மீட்டர் தூரத்தில் ஏழு மேடுகள் உள்ளன. காரமடையைத் திருவரங்கமாகக் கொண்ட கொங்கு நாட்டு மக்கள் இவ்வேழு மேடுகளையும் திருப்பதியிலமைந்துள்ள ஏழு மலைகளாகக் கொண்டனர். ஏழு கரடுகட்கு அப்பால் அமைந்துள்ள அந்த இடம்தான் மொண்டிபாளையம் எனப்படும். ஏழுமலையானை எழுந்தருளச் செய்து கோயிலமைத்துள்ளனர். வடவேங்கடத்தானின் வண்ணத்தை இந்த மூர்த்தியிடம் கண்டு அவனிடம்


"தெற்கு நுழைவாயிலும் பிரகாரமும்"

பெற்ற வரங்களை இவனிடம் பெற்றுய்ந்திருக்கின்றனர். மேலும் ஏழு மலையானுக்குச் செலுத்தும் காணிக்கையை இவ்வெங்கடேசனுக்குச் செலுத்தி இன்புற்றிருக்கின்றனர். இவ்வெங்கடேசன் காலத்தாற் பிற்பட்டவர்; உருவாற் சிறியவர். எனினும் திருப்பதியாகிய ஏழுமலைகளில் கால் கடுக்க—முழங்கால் முறிய-ஏறித் தேடி வந்து தன்னைக் கும்பிட்டபேருக்கு வழங்கும் பயனை இங்கு வந்து சேவிக்கும் அடியவர்களுக்கு அருளுகிறார். ஊஞ்சல் மரங்கள் அதிகமாய் இருந்ததால் இப்பகுதிக்கு ஊஞ்சல் வனமென்று பெயர் ஏற்பட்டது. கொங்கு நாட்டில், ஒடுவங்கநாடு என்ற உட்பிரிவில் உள்ளது.



வெங்கடேசப் பெருமாள்
விண்ணகரத்தின் விமானத் தோற்றம்

இம் மொண்டிபாளையம், கோவை மாவட்டத்தில் அவிநாசி வட்டத்தில் அன்னூரிலிருந்து சுமார் பன்னிரு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கோவையிலிருந்து சேவூர் செல்லும் உந்தூர்திகளும் அவிநாசியிலிருந்து சேவூர் வழியாக மேட்டுப்பாளையம் செல்லும் உந்தூர்திகளும் இவ்வூர் வழியாகச் செல்கின்றன. கோவையிலிருந்து சத்தியமங்கலம் போகும் பாதையில் காரூர் சென்று பிரிந்து மூன்று கிலோ மீட்டர் தூரம் படந்தால் மொண்டிபாளையம் அடையலாம்.

இக்கோயிலைக் கொங்கு நாட்டு மக்களில் பல்வேறு குழுவினரும் வெவ்வேறு பெயர்களில் வழங்குகின்றனர். பழங்குடி மக்களான கொங்கு வேளாளர்கள் (கவுண்டர்கள்) "ராமர் கோயில்" என்றும், திருமாலையே வழிபடு கடவுளாகக் கொண்ட நாயக்கர்கள் "அலமேலுமங்கா குடி" என்றும், வைணவர்களுள் இருகலையினரும் "வெங்கடேசப் பெருமாள் விண்ணகரம்" என்றும், அந்தணர்கள் "ஸ்ரீனிவாசப் பெருமாள் கோவில்" என்றும் அழைக்கின்றனர். கோயிலின் உள்ளே செல்லலாமா?

மூலவர் சுயம்பு இலிங்கம் போலத் தோற்றம் அளிக்கிறார். நான்கு புறமும் பட்டையாகவும், மத்தியில் கூராகவும் காட்சி கொடுக்கும் இம்மூர்த்தியை முதன் முதலில் கண்டு வழிபட்டவர் அருகிலுள்ள ஆலத்தூர் கிராமத்து மேதர மெட்லார் குலத்துக் கொண்டம நாயக்கர் என்பவர். பிரகாரத்தில் தாயார் சந்நிதியுள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள தாயாருக்கு அலமேலுமங்கைத் தாயார் என்று பெயர். நான்கு கைகளுடன் காட்சியளிக்கிறார். 1933-ல் கும்பாபிடேகம் நடைபெற்றபொழுது இத்தாயார் சந்நிதி நிறுவப் பெற்றதாக அறிகிறோம். தாயார் சந்நிதிக்குப் பக்கத்தில் விநாயகர் சிலையொன்றுள்ளது. தும்பிச்சங்கை ஆழ்வார் என அழைக்கப்படுகிறார். அத்திருவுருவத்திற்குச் சிலபக்தர்கள் விபூதியும் இட்டுச்செல்கின்றனர். ஆண்டாளுக்கும் சுற்றுப் பிரகாரத்துள் தனி சந்நிதியுண்டு. சூடிக்கொடுத்த சுடர்க்கொடி காட்சியளிக்கிறாள் நின்ற கோலத்தில்; இரண்டு கைகள்; வலது கையில் பூவைத்திருக்கிறாள். தவிர ஆஞ்சநேயர், ஆழ்வார்கள், வேணுகோபாலர் சக்கரத்தாழ்வார் ஆகியோர் சந்நிதிகளும் பிரகாரத்திலேயே அமைந்துள்ளன. பரமபதவாசலின் பக்கலில் வைகுண்ட நாராயண மூர்த்தி லட்சுமியுடன் காட்சி அளித்துக்கொண்டு நிற்

கிருர். பரமபதவாசலின் பக்கலில் இருப்பது கல்யாண மண்டபம். இதைக் கோவிந்த நாயக்கன் பாளையம் நம்பூரார் வெங்கிடசாமி நாயுடு கட்டிக் கொடுத்துள்ளார். திருமங்கையாழ்வார் நாகப்பட்டினத்துப் புத்தர்சிலையைக் கொண்டு வந்து திருவரங்கத்து ஏழு மதில்களைக் கட்டியதையும், பசவேசர், மணிவாசகப் பெருமான் ஆகிய அமைச்சர்கள் அரசாங்கப் பணத்தை ஆலயம் கட்டச் செலவழித்ததையும் படித்ததுண்டு. கோயில் திருப்பணிக்காகச் செலவிடுவதுவும், யாகத்தில் ஆகுதியாய்க் கொடுப்பதுவும், இறைவனடியார்களுக்கு ஈவதுவும் முத்தி எனும் பயனுக்கு விதைக்கும் வித்தாகும். இவ்வகையில் பயனுள்ள காரியம் பல இக்கோயிலிற் செய்து பலன் பெற்றுள்ளவர்கள் பலரில் குறிப்பிடத்தக்கவர்கள் கோவை லட்சுமி மில்ஸ் உரிமையாளர்கள் ஆவார்கள்.

இக்கோயிலிலுள்ள பலிபீடம் சிறப்புடையது என்பது இப்பகுதி மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. பேய்பிசாசுகளை ஓட்டவல்லதாம். காத்து கறுப்பு என்று கூறப்படும் பேய் பிசாசு பிடித்தவர்களை இவண் கூட்டி வருகின்றனர். வரமறுக்கும்போது மயிரில் முடிச்சுப்போட்டு இழுத்து வருகின்றனர். பேய் பிடித்தவர்கள் பலிபீடத்தை வட்டமாக இரு கைவிரல்களாற் சுற்றிப் பற்றுகின்றனர். கைகள் சுற்றவேண்டுமாம். இல்லையெனில் கறுப்பு அகலவில்லை என அர்த்தமாம். இக்கோயிலைத் தேடிவந்து பலிபீடத்தை நாடிக் கைவைத்து நன்ருக ஆடிவிட்டால் அப்பேய் ஓடிவிடுமென்பது நம்பிக்கை. பேயாட்டக் காட்சி இக்கோயிலில் புரட்டாசி மாதம் மிக அதிகம். பில்லி சூனியத்தால் வருந்துபவர்களும் பெரும் நோயால் அவதிப்படுபவர்களும் இக்கோயிலில் ஒரு மண்டலம், அரை மண்டலம், கால் மண்டலம் என்று நோன்பு நோற்கின்றனர். இக்கோயிலில் பணி செய்யும் பண்டாரங்கள்

வெள்ளெருக்கின் மொட்டு, வேப்பங்கொழுந்து, எலு மிச்சை, திருத்துழாய், தூபக்கரி, சுவாமி மெழுகு ஆகிய வற்ருலான இலேகியம் ஒன்று செய்து நோய் தீர்வதற் காகக் கொடுக்கின்றனர்.

இக்கோயிலில் மூன்றுகால பூசை, முட்டாதுபாஞ்ச ராத்ர முறைப்படி நடைபெற்று வருகிறது. தென் கலையைச் சார்ந்த அர்ச்சகர்கள் மூவருண்டு. தை மாதத்தில் பத்து நாள் பிரம்மோற்சவம். கொடி ஏறிய எட்டாம் நாள் புனர்பூசத்தில் தேர்விழா. மறுநாள், இக்கோயில் தீர்த்தமான புண்ணிய புஷ்கர்ணியிலேயே தெப்ப உற்சவம் நடைபெறுகிறது. உற்சவத்திற்கான வாகனங்கள் பல உண்டு. அனுமந்த வாகனம் உறி யடி உற்சவத்தன்றும் குதிரைவாகனம் விஜய தசமி யன்றும் பெருமாளுக்குப் பத்தி உலாத்தப் பயன்படு கின்றன. பலருடைய கட்டளைகளால் மேலும் பல விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றன.

இக்கோயிலின் தனிச் சிறப்பு ஒன்று குறிப்பிடத் தக்கது. சேவார்த்திகள் யாராவது கருட சேவைசெய்ய எண்ணிஞல் மூன்று தேங்காய், பதினைந்து பழம், ஐந்து ரூபாய் காணிக்கை செலுத்திஞல் போதும்! உற்சவர் கருடன் மீதூர்ந்து காட்சியளித்து நான்கு வீதிகளையும் சுற்றி வருவார். இத்திருவீதி யுலாவாகிய பத்தி உலாத்தலை இப்பகுதி மக்கள் "மெரமனை" என்பர். புரட்டாசி மாதத்தில் இம்மெரமனை அதிக அளவு நடை பெறுகிறது. புரட்டாசி மூன்ரும் சனிக்கிழமை சமாரா தனை உண்டு. குழந்தைகட்கு முடியிறக்கல், காது குத்துதல் போன்ற சடங்குகளை இக்கோயிலிற் செய் கிருர்கள்.

இக்கோயிலில் ஆண்டுதோறும் நடக்கும் ஏகா தசிக் கட்டளை, ஸ்ரீராமநவமிக் கட்டளை, ஸ்ரீ கோகுலாஷ்

டமிக் கட்டளை ஆகியவை குறிப்பிடத்தக்கவை. "கட்டளை" என்ருல் என்ன? என்ற ஐயவினு எழுகிற தல்லவா. கட்டளை என்ற சொல்லுக்கு அளவு, விதி, தரம், முறைமை, கோயிற்றருமம் என்ற பல பொருள் உண்டு. மேலே கூறிய மூன்று கட்டளைகளும் அளவாய் நடக்கின்றன; விதிப்படி நடக்கின்றன; தரமாய் நடக்கின்றன; முறைப்படி நடக்கின்றன. இக்கோயிற் றருமம் செய்தவர்கள் எத்தனை புண்ணியவான்கள் என்று போற்ருதிருக்க முடியாது. இக்கோயிலைச்சுற்றி ஆறு பர்லாங் தூரத்திற்கு யாரும் குடியிருப்பதில்லை. கோயிற் பணியாளர்கள் 15 பேரின் குடும்பமே கோயிலருகிலுள்ளது. கோயிலின் புனிதத்தன்மைக் காக அவ்வாறிருக்கின்றனரோ என்ற ஐயப்பாடெழுகின்றதல்லவா! அரை மைல் தூரத்தில் மேல் புறம் ஐயப்பன் நாயக்கன் பாளையம்; வடபுறம் இரண்டு பர்லாங் தூரத்தில் சங்கம் பாளையம்; ஆறு பர்லாங் தூரத்தில் கீழ்புறம் ஆலத்தூர்; மூன்று பர்லாங் தூரம் தென்புறத்தில் வெங்கடாபுரம்; இரண்டு மூன்று பர்லாங் சுற்றளவில் எந்த ஊரும் கோயிலின் பக்கலில் இல்லை. இலங்கையில் அநுராதபுரம், கதிர்காமம் போன்ற இடங்களில் உள்ள கோயிலைச் சுற்றிலும் புனிதத் தன்மைக்காக வேறு தனிப்பட்ட கட்டிடங்கள் இருக்கக் கூடாதென இலங்கை அரசு சட்டம் கொண்டு வந்தது இவ்விடத்திற் கருதத்தக்கது. சிதம்பரத்தின் புனிதத் தன்மையை எண்ணிச் சேரமான் பெருமாள் நாயனுர் என்ற மலைநாட்டரசர் அங்குத் தங்கி வழிபட மறுத்து விட்டார்.

இனி இக்கோயில் ஏற்பட்ட விதத்தைத்தெரிந்து கொண்டால் இக்கோயில் பற்றிய முழு விவரமும் அறிந்தவர்களாவோம். கலியுக சகாப்தம் 4813-ம் ஆண்டு நந்தன வருடம் மொண்டி பாளையத்தில் தோன்றிய கொண்டம நாயக்கரை வெங்கடாசலபதி

யின் அவதாரமாகக் கொண்டாடுகின்றனர். ஆலத்தூருக்கு அருகில் அவர் குறிப்பிட்ட இடத்தில் மண்ணை அகழ்ந்து பார்த்ததில் சாளக்கிராமம், சங்கு, உத்தரணி, தாம்பிரக்கிண்ணம் ஆகியவை இருக்கக் கண்டனர். பின் வெங்கட்ரமணரையும் மூலத்தானத்தே பிரதிஷ்டை செய்தார். தனக்குக் கோயில் கட்ட இம்மொண்டிபாளையம் வெங்கடாசலபதி தன் அன்பர் கொண்டம நாயக்கருக்குப் பல துறைகளைக் காண்பித்தார். கொள்ளேகாலத்திலுள்ள காயல் பட்டினத்துப் புதையல், சத்தியமங்கலத்தார் திருப்பதியானுக்குக் கட்டி வைத்த காணிக்கை ஆகியவை இவர் கைக்கு வந்தன. இவர் காலத்துக்குப் பிறகு திருப்பணி செய்த காளப்பட்டி லட்சுமண நாயக்கருக்குத் தடாகத்தினர் ஐந்தாறு தலைமுறையாய்த் திருப்பதி வெங்கடாசலபதிக்குக் கட்டி வைத்த காணிக்கையைக் கொடுத்துத் திரும்பிப்பாராது சென்றதும் இந்த மொண்டிபாளையம் வெங்கடேசனின் திருவருளே. பாகவத சாரமாகிய சீநிவாசப்பெருமாள் மாலை முப்பது பாடல்களைத் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இயற்றியுள்ளார்கள். காலத்தாற் பிற்பட்ட கோயிலெனினும் மக்களின் கருத்தை நிறைவேற்றும் கண்கண்ட தெய்வம் எழுந்தருளி யிருப்பது. குணம் வேண்டித் தங்கள் குறைகளைக் கூறிப் போற்றுபவர் குறைகளைக்களையும் குணக்குன்று குடியிருப்பது. இடைவிடாது தன்னைக் கோரும் அன்பர் இதயத்தில் குடி கொண்டிருக்கும் ஏழுமலையான் இந்தக் 'குடி' (கோயிலில்) யில் கோயில் கொண்டு வேண்டுவார் வேண்டுவனவற்றை அருளும் வரப்பிரசாதியாகக் கலியுகக் கடவுளாகக் காட்சியளிக்கிறான்.

"பாடீரவன் நாமம் வீடே பெறலாமே
மேயான் வேங்கடங் காயா மலர்வண்ணன்."

(குருகூர் நம்மாழ்வார்.)

# கதிர்காமலை

" ஆறுமுகவனை நாறுமலர்கொடு
கூறுமடியவர் பேறுபெறுவரே"

வைதீக சமயங்கள் ஆறு. அவையாவன: சைவம், வைணவம், சாத்தம், காணபத்யம், கௌமாரம், சவுரம். சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டது சைவம். விஷ்ணுவை முழுமுதற் கடவுளாகக் கொண்டது வைணவம். சத்தியை முழுமுதற் கடவுளாகக்கொண்டது சாத்தம். கணபதியை முழுமுதற் கடவுளாகக் கொண்டது காணபத்யம். குமரனை முழுமுதற் கடவுளாகக் கொண்டது கௌமாரம். சூரியனை முழுமுதற் கடவுளாகக் கொண்டது சவுரம்.

" சூரியனே பிரமமெனச் சொல்லுவது ஒன்று
சுடர் மழுவான் தெய்வமெனத் துதிப்பது ஒன்று
வீரிய சத்தியைப் பொருளா மொழிவது ஒன்று
விட்டுணுவே தலைவனென விளம்பல் ஒன்று
சீரிய கணேசன் எனக் கூறல் ஒன்று
செவ்வேற்கைச் சேந்தன் எனச் செப்பல் ஒன்று
ஆரிய நூற்றலைவர் உணர் சமயபேதம்
ஆறுமெங்கள் கவுமாரத்து அணித்தாம் அன்றே"

என்று வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் கௌமார முறைமை என்ற நூலில் கூறுகிறார்.

கௌமாரத்தின் தலேவனுன முருகன் அழகன். என்றும் இளேயோன். கண்கண்ட தெய்வம். கருணேயின் வடிவம். 'முத்தேவரும் இறைவரு முறை முறை பணிய விருக்கும் முதற்றேவு.' சைவத்தின் தலேவனுன சிவபெருமானுக்கு ஐந்து முகங்கள் உண்டு. அவற்ருேடு அதோ முகமும் வெளிப்படுத்தி ஆறு திருமுகம் உடையவராகி, அம் முகங்களின் நெற்றிக் கண்களிலிருந்து தீப்பொறிகளே வெளிப்படுத்திஞர் சிவபெருமான். அத் தீப்பொறிகளிலிருந்து தோன்றியவன் ஆறுமுகன். இதைக் குமரகுருபரர்,

—"தேசுதிகழ்
பூங்கயிலே வெற்பில் புனேமலர்ப் பூங்கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—ஆங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்ருத விண்ணேர் முறைக்கிரங்கி
ஐந்துமுகத்தோடதோ முகமும்—தந்து
திருமுகங்களாருகிச் செந்தழற்கணுறும்
ஒருமுகமாய்த் தீப்பொறியாறுய்ப்ப"

—கந்தர் கலிவெண்பா.

என்று கூறுகிருர்.

"நெடும் பெருஞ்சிமயத்து நீலப் பைஞ்சுனே" என்று முருகாற்றுப்படையும் "நிவந்தோங்கு இமயத்து நீலப் பைஞ்சுனே" என்று பரிபாடலும் போற்றும் நீல நிறமானதும், தர்ப்பை வளர்ந்திருப்பதுமான சரவணப் பொய்கையில் (சரம்—நாணற்புல், வனம்—நீர்) வளர்ந் தருளிய பெம்மான் முருகனே,

" அங்கத்தில் ஆறுமுகத்தோடும் ஈராறு அத்தமொடும்
கமலத்தினிடத்திற்
சங்கரனே முருகேசன் எனச் சீர்தங்க இருந்திட
அண்டர்கள் கண்டார்."

எனச் சம்பந்த சரணாலய சுவாமிகள் கந்தபுராணச் சுருக்கத்தில் கூறுகிறார். குமாரன் என வேதங்களாலும் உபநிஷத்துக்களாலும் போற்றப்படும் இம்முருகன் குடிகொண்ட பதிகள் ஆறு. அவற்றை ஆறுபடை வீடுகள் என்பர். அவற்றுள் ஒன்றான குன்றுதோறாடல் என்பது எல்லாக் குன்றுகளையும் குறிக்கும். கொங்கு நாட்டில் குன்றுகளுக்குப் பஞ்சம் இல்லை. ஆதலால் குமரன் கோயில்களுக்கும் இக்கொங்கு நாட்டிற் குறைவில்லை. உங்களை நான் அழைத்துச் செல்ல விரும்புவது கதித்தமலைக்கு. கதித்தமலை கொங்கேழ் மலைகளுள் ஒன்று.

இது ஈரோட்டிலிருந்து 37 கிலோ மீட்டர் தூரத்திலும் கோவையிலிருந்து 63 கிலோ மீட்டர் தூரத்திலும் உள்ள ஊத்துக்குழி ரயில் நிலையத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. ஊத்துக்குழியின் ஊர் மத்தியில் கயிலாச நாதர்-பிருஹந் நாயகி கோயில் உள்ளது. சுற்று மதில்களுடன் கூடிய பெரிய கோயில் இது. கதித்தமலை சின்னஞ்சிறு குன்று. சிகரம் இரண்டுடையது. உயர்ந்த முடியில் குமரன் கோயிலும் பின்புறமுள்ள சிறிய முடியில் வள்ளி, தெய்வயானை கோயிலும் உள்ளன. இங்கு வீற்றிருக்கும் குமரனின் திருப்பெயர் கதிதாசலக் கடவுள் என்பது. மலை ஏறப் படியில்லை. மலைப் பாதை ஒற்றையடித் தடம். கல்லும் முள்ளும் உண்டு. கவனித்து ஏற வேண்டும்.

"கால்களாற் பயனென்—கறைக்கண்டன் உறைகோயில்
கோலக் கோபுரக் கோகரணஞ் சூழாக் கால்களாற்
பயனென்'"

என்ற நாவுக்கரசரின் அறிவுரையை நினைவு கூர்ந்து இன்னும் மேலே ஏறுகிறோம்.

ஒருவகையாக வந்துவிட்டோம். முதலில் காண்பது சுப்பராயர் சந்நிதி. புற்றிடம் கொண்டுள்ளார். பாம்பு போன்ற விஷ ஜந்துக்கள் தீண்டின் தீண்டப் பட்டவர்களை இவண் கொண்டுவந்து போட்டால் விடம் நீங்கப்பெறுவர். விண்ட செட்டியார் கூட்டத்திற்குக் குலதெய்வமாக இவர் விளங்குகிறார். அச்சமூகத்தினர் இவர் சந்நிதியில் வந்து திருமணம் புரிந்து கொள்கின்றனர். கதிதாசலக் கடவுள் கோயிலுக்குக் கீழே இடதுபுறம் இருப்பது இடும்பன் கோயில். அது மூன்று பகுதிகளை உடையது. முறையே சுப்பிரமணியரும் ஈசுவரனும், இடும்பனும் வீற்றிருக்கின்றனர். இடும்பன் கோயிலுக்குச் சற்று தூரத்திலுள்ள ஓர் சுனை இத்தலத்தின் தீர்த்தமாகும். குழந்தைவேல் புலவருக்காகக் கதிதாசலக் கடவுள் வேலூன்றிச் சுனையைத் தோற்றுவித்ததாக விளம்புகின்றனர். இடும்பனிடம் விடை பெற்று மேலேறுகிறோம். முதற் பிரகாரத்தில் நவவீரர், சண்டேசுரர், விநாயகர் ஆகியோர் வீற்றிருக்கின்றனர். உள் பிரகாரம் ஒன்றும் உண்டு. அர்த்த மண்டபம் சிறியதே. அடுத்துள்ள மூலத்தானத்தில் வீற்றிருக்கும் மூலவர் இருவர். ஒருவர் சுயம்புத் திருவுருவம். ஓரடி உயரம் உடையவர். அவரது வலப்பக்கம் நான்கடி உயரத்தில் கதித்த மலையாண்டவர் தண்டபாணிக் கோலத்தில் காட்சியளிக்கிறார். இரு புஜம். வலது கையில் தண்டு. இடது கையை இடுப்பில் ஊன்றியுள்ளார். இங்குள்ள வேல் மிகவும் அழகானது. வெற்றிவேலாயுத சுவாமி தேவஸ்தானம் என்றே இக்கோயில் அழைக்கப்படுகிறது. உற்சவ மூர்த்தியின் பெயர் குழந்தைக் குமரர். பிரம்மோற்சவம் தைத்திங்களில் நடைபெறுகிறது. தைப்பூசமும் சிறப்பானது. தை உத்தரத்தில் தேர். சூலதேவரும் இவண் எழுந்தருளியுள்ளார். இக் கோயிலில் காலை மாலை ஆகிய இரு வேளைகளிலும் பூசை. பத்து மணிக்குமேல்தான் காலைப்பூசை ஆகிறது. பக்தர்கள் தண்டபாணியைக்

காண அதுவரை படியில் தவமிருக்கவேண்டும். இக் கோயில் முறைக்காரர்கள் நான்கு சிவாசாரியர்கள். தினசரி பூசை, சம்பளம், படித்தரம் எல்லாம் சேர்த்து மாதம் ஏழு ரூபாய் பெறுகிறார்கள். மாசம் பத்துக்கூட அவர்களுக்கு இல்லை. இந்நிலை இன்னும் நம் கோயில் களில் நீடிக்குமானால் அடுத்த தலைமுறைக்கு அர்ச்சகர் களைத் தேடிப்பிடிக்க வேண்டிய நிலை ஏற்படும் என்ப தற்கு ஐயம் இல்லை. இவ்வாலயத்திற்கு ஒரு பிரபந்தம் உண்டு. தண் பாண்டி நாட்டு நெல்லை வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் இத்தலத்தைப்பற்றி வண்ணப் பதிகம் (பதின்மூன்று), முருகன் பாமாலை (ஒன்று), சிவன் பதிகம் (பன்னிரண்டு ஆக இருபத்தாறு பாடல்கள்) பாடியுள்ளார்கள்.

கதித்தாசலக் கடவுளைக் கண்குளிரக் கண்டு வணங்கி, வலம் வந்து, விழுந்து, தியானித்து, எழுந்து விடைபெற்றுப் பின்புறமுள்ள சிறு மலை முடிக்குப் போகிறோம். சுற்றுச்சுவர் அம்பிகை கோயிலை மறைத் துள்ளது. உள்ளே வள்ளியும் தெய்வயானையும் காட்சி அளிக்கின்றனர். இறங்கும்போது குமரகுருபரர் பாடிய முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில் ஒரு பாட்டை முணு முணுத்தது என் வாய்.

“ ஒழியாத புவனத்து உயிர்க்குயிரதாய் நிற்பது
ஒருதெய்வம் உண்டென எடுத்து உரையால் உணர்த்துவதை
ஒழிய, எவரெவர்கட்கும் ஊன்கண் உளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரம் கொடுப்பான் மெய்கண்ட தெய்வம்
இத்தெய்வ மல்லாற் புவியில் வேறில்லை என்றுணர்தியால்.”

செத்துப் பிறக்கும் மற்றைத் தெய்வங்களின் மணவாள னும் முருகனைக் குமரகுருபரர் முழுமுதற் கடவுள் என அறுதியிட்டு இப்பாட்டில் கூறுகின்றார் என்றேன் நான்.

உடன் வந்த தமிழ்ப் பேராசிரியர் உங்கள் தண்டபாணி சுவாமிகளும்,

“ஆறுமுகனே தெய்வம் அன்னோன் குருசாமி
வேறுதெய் வமெல்லாம் விருதாவே—நூறுதரம்
மெய்சொன்னேன் மெய்சொன்னேன் வேத முடிவிதுவே
பொய் சொன்னால் வாய் புழுத்துப் போம்.”

என்று கூறினாரே எனச் சுட்டிக்காட்டினார். திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் பாடிய,

“எல்லார்க்கும் மேலவன் நீயென்
றறிந்துன்னை ஏத்தி அன்பாய்ப்
பொல்லாக் கருமலந் தீர்ந்தான்
பொதியப் புகழ் முனிவன்
சொல்லாற்புனை தொங்கல் நக்கீரன்
சாத்தித் துனி கடந்தான்
நல்லார்க்கு நல்லவனே
சமராபுரி நாயகனே.”

என்ற பாட்டை இருவரும் பாடிக்கொண்டே இறங்கினோம். கருமலம் அறுக்க நாமும் கந்தனை—இக் கதிராசலக் கடவுளைக் கைகூப்பித் தொழுது வேண்டுவோமாக!

(வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் குருபரதத்துவம் என்ற நூலில் கொங்கு நாட்டுச் சருக்கம் என்ற பகுதியில் 19 முதல் 22 வரை கதித்தமலை பற்றிக் குறிப்பிட்டுள்ளதை நினைவு கூர்ந்தோம். அப்பகுதியை நீங்களும் படித்தின்புற வேண்டாமா? இதோ அப்பாடல்கள்.)

துப்பார்செந் தமிழ்பாடித் துதிப்பதற்குக் கதித்தமலை
எப்பால்உள் ளதுகொல்எனும் எண்ணமுடன் துயிலுற்றேன் 1

அன்றுகன வினிற்செவ்வேள் அணிச்சிலேவிக் கிரகவடி(வு)
ஒன்றுறவந்து உறுப்பசைய உரிமையொடு முத்தமிட்டு
*நன்றுகுறித் திட்டப்படி நடத்துவேன் எனச்சொன்ஞன்
இன்றுவரை முடிக்கவில்லை யான்செய்யுமா(று) என்ஞுளதே. 2

மற்றைநாள் ஏகிஅந்த மலேயில்உறும் குகன்பூண்ட
கற்றைநெடுங் கதிர்வேலின் கவின்கண்டு மிகமகிழ்ந்து
பற்றைவென்ற வாழ்வுறுவான் பதிகங்கள் சிலசொன்னேன்
ஒற்றைவினை யாடலும்அங்கு ஒற்றிலான் உளஞ்சோர்ந்து. 3

அடிவாரத் தினில்வந்தேன் அங்கமருஞ் சிவன்எந்தப்
படியேனும் எனக்குமொரு பதிகஞ்சொல் லெனக்கேட்டான். 4

(*உலகமக்களைக் கொலே புலே முதலான குற்றங்களி னின்றும் நீக்கி நன்னெறி வாழச்செய்வதற்கு உரிய திருவருள் சித்தியை வேண்டினர். அதற்கான அருளை முருகன் தனக்கு வழங்கவில்லையே என்ற ஏக்கம்.)



'மலரணி கொண்டை' என்று தொடங்கும் அருணகிரி நாதரின் பழநித் திருப்புகழில் "மங்கைக்கதித்த மாமலே யொடு சிலே குன்றிற்றரித்து" என்ற வரிகளுக்கு மங்கை—விஜய மங்கை; கதித்தமாமலே—ஊத்துக் குழிக்கு அடுத்துள்ள கதித்தமலே என்று தணிகைமணி உயர்திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் குறிப்பிடுகிருர்கள். செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 13, பக்கம் 237ல் கதித்தமலே பற்றிய செய்தி காணக் கிடக்கின்றது.

# சிவன் மலை

அகண்ட பாரதத்தில் இந்துக்களுக்கு இன்றியமையாத புண்ணிய நகரங்கள் ஏழு. அவற்றை சப்தபுரி என்பர். அவை: அயோத்தி, மதுரா, கயா, காசி, காஞ்சி, அவந்தி, உஜ்ஜெய்னி என்பன. தெய்வத் தமிழ் நாட்டில் தஞ்சாவூர்ப் பகுதியில் ஐயாறு உள்ளிட்ட சப்த ஸ்தானங்கள் உள்ளன. அது போன்று ஏழு மைல் இடைவெளியில் வெள்ளாற்றங் கரையில் புண்ணியத் துறைகள் ஏழு உண்டு.

"நீறு சேர்தரு நெற்றியர் மூவரு நெடிது
கூறுமேழ் பெருந்தலங்களைக் கொண்டது கொங்கு"

என்றபடி பாடல் பெற்ற ஏழு பழம்பதியைக்கொண்ட நாடு இக் கொங்கு நாடு. அதே போன்று கர்ண பரம்பரையாய் வழங்கும் கொங்கேழுமலைகளும் இங்குண்டு. அவை : சிவன்மலை, சென்னிமலை, அரனிமலை, பழநி மலை, வெள்ளி மலை, வட்டமலை, கதித்தமலை என்பன. அவற்றுள் ஒன்றான சிவன்மலைக்கு நேயர்களை அழைத்துச் செல்ல ஆசைப்படுகிறேன்.

கோயமுத்தூரிலிருந்து காங்கேயம் சென்றால், அங்கிருந்து திருப்பூர் செல்லும் பாதையில் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது இச் சிவன் மலை. சிவன்மலை சிறு குன்று. இதைச் சிவமலை என்றும், சேமலை என்றும் (சே - எருது) சேய்மலை

என்றும் செப்புவர். மலை வலம் வருதல் இப்பகுதி மக்களின் வழக்கம். பாதி வழியில் பரமேசுவரன் ஆலயம் ஒன்றுண்டு. அநுமார் இங்கு சிவனை வழி பட்டதால் அநுமார் சந்நிதியுமுண்டு. ஆனால் இவ் வாலயம் அநுமார் கோயிலென்றே அழைக்கப் படுகிறது. இங்குள்ள தாழியிலிருக்கும் பழைய நெய் தீராத நோய்களைத் தீர்க்கும் திறம் வாய்ந்தது. ஆகை யால் புதிய நெய் சம அளவு கொண்டு வந்து கொட்டி விட்டுப் பழைய நெய்யைப் பயபக்தியுடன் எடுத்துச் சென்று பயன்படுத்திப் பலனடைகின்றனர். சீர்காழி அம்பலவாணக் கவிராயர் பாடிய தலபுராணம் ஒன்றி தற்கு உண்டு.

மலை ஏறுவோமா! பத்துப் பதினைந்து படிகள் ஏறியதும் பாங்காய்க் காட்சி யளிப்பவர் பால விநாயகர். ஐந்துகரத்தனை, யானை முகத்தனை வழி பட்டு விடைபெற்று ஏறுகிறோம். சமீப காலத்தில் படித்திருப்பணி செய்யப் பெற்றுள்ளதால் ஏறுவதில் எள்ளளவும் சிரமமில்லை. இடையில் இடும்பனைக் கண்ணுறுகிறோம். இடையிடையே மண்டபங்களில் நின்று சிரம பரிகாரம் செய்து கொள்வதுடன், கடந்து வந்த தூரத்தைத் திரும்பி நின்று கணக்கிட்டுப் பார்த்து மலைத்து மகிழ்கிறோம். பின்பும் தொடர்ந்து மலை ஏறுகிறோம். பார்வையை எட்ட விட்டுப் பார்ப்பதால் விட்டுவந்த பாகத்தைக்கண்டு களிப்புறுவ துடன், காங்கேயத்தின் கவினழகைக் கண்கள் பருக வும் ஓர் வாய்ப் பேற்படுகிறது. ஒருவாறாக மலை உச் சிக்கு வந்து விட்டோம். அப்பாடா! தண்ணீர்க் குடம் கண்டதும் தாகம் எடுக்கிறது. தண்ணீர் கேட் டால் பன்னீர் போல் அளந்து கொடுத்துக் காசு கேட் கிறார் ஓர் தாடிவைத்த அன்பர்! என் செய்வது! கொடுத்து வாங்கிக் குடித்துத் தீர்த்தோம்.

கோயிலினுட் புகுகிறோம். கொடிமரம் காண்கிறோம். கொடி மரத்தின் பக்கத்தே பல பழைய வேல்கள் குத்தி நிறுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்றின் மேல் ஓர் அட்டை "சைக்கிளும், இளநீரும்" என எழுதப்பெற்றுத் தொங்குகிறது. விபரத்தை விளக்கமாய்க் கூறினர் அங்குள்ள மேலாளர். "இங்கு எழுந்தருளியுள்ள மூர்த்தி சிவாசலபதி என்ற சிவகுமாரன். இவர் ஓர் காரண கர்த்தர். எதிர் காலத்தைக் குறிப்பால் உணர்த்தும் குணர். நடக்கப்போகும் விபத்தை முற்கூட்டியே அறிவிப்பார் இம் முருகன்" என்றார். ஒரு சில உதாரணங்கள் கூற முடியுமா என வினா எழுந்தது.

தேசத் தந்தை மகாத்மா சுட்டுக் கொல்லப்படு முன்பாக சேலம் மாவட்டத்துக்காரர் கனவில் "எலும்பும் சாம்பலும் காவடியிற் கட்டிக்கொண்டுவா" எனப் பணித்தாராம் இவ் விறைவன். கொண்டுவந்த செய்தியையறிந்த கோவில் நிர்வாகத்தினர் கொடி மரத்தினடியிலிட அநுமதி மறுத்து விட்டதால் கொண்டு வந்தவரும் திரும்ப மறுத்து அங்கேயே இருந்தாராம். அன்றிரவு சாம்பவலசு பூசாரியின் கனவிற்றோன்றி பக்கத்திலுள்ள வில்வ மரத்தில் இட அனுமதிக்குமாறு இக் கந்தன் கட்டளை இட்டானும். அதே போன்று அமெரிக்க அதிபர் கென்னடி சுட்டுக் கொல்லப்படுமுன் ரிவால் வரும் குண்டும் கொண்டுவந்து வைக்கக் கட்டளை பிறந்ததாம். இராமநாதபுரம் தடியடிக்கு முன்பாகத் தடி கொண்டு வைக்கப் பணித்தாராம் இத் தண்டபாணிக் கடவுள். மேலும் உணவு தானியம் எதையேனும் கொண்டு வந்து வைக்குமாறு இக் குமரன் கட்டளையிட்டால் அப்பொருள் அந்த ஆண்டு அரிதாகி விடும் என அறிந்துகொள்ளலாம் என்றார். இந்த ஆண்டில் இளநீருக்கும் சைக்கிளுக்கும் பீடை(வறுமை) பிடித்ததென்பதை உணர்ந்து சுற்றுப் பிரகாரத்தைச்

சுற்றுகிறோம். முதலில் காண்பது தலவிருட்சம்; தொட்டி மரம். அருகிலுள்ள நஞ்சுண்டேசுவரரையும் பர்வதவர்த்தினியையும் நன்கு பார்த்து வணங்கி சந்நிதிக்கு வருகிறோம். நவ வீரர்கள் ஜுரகண்டேசுவரருக்கும் அம்பிகைக்கும் அடுத்து சந்நிதியின் இரு மருங்கிலும் நமக்கு எதிரில் எழுந்தருளியுள்ளனர்.

துவாரபாலகர்களின் காலடியில் சிம்மங்கள் நிற்கின்றன. பாலகர்களிடம் விடைபெற்று உட்புகுந்தால் சந்நிதியை அடையலாம். மகா மண்டபத்திலிருந்து அம் முருகனை வழிபடலாம். மூர்த்தியின் திரு நாமம் சிவாசலபதி என்பதை முன்பே அறிந்தோம். மூலத்தானத்தேயுள்ள மூலவர் மூன்றடி உயரமுடையவர். நல்ல அழகர்; நான்கு கைகள்; வள்ளி நாச்சியார் பக்கத்தே காட்சியளிக்கிறார். மால்மருகனின் மயிலின் தலை இடப்பாகம் உடைய கோயில்கள் தமிழ் நாட்டில் மிகச் சிலவே. ஆதலின் அவை சிறப்புடையவை. பக்கத்தேயுள்ள பட்டாலியூரில் வேட்டுவ அரசன் ஆளுகையிலிருந்த வள்ளியை இம்முருகன் சிறை எடுத்து வந்ததால் மூலத்தானத்தே அவ்வம்மை எழுந்தருளியுள்ளார் என்பது கர்ண பரம்பரைக் கதையாம். இவ்விறைவன் தன் செலவுக்கு வேண்டிய பொருளை உண்டியல் மூலமாய்த் தர்மகர்த்தாக்களிடம் கொடுப்பதை உதாரணத்துடன் சுட்டிக் காட்டினார் கோயில் மேலாளர்.

தேர் சக்கரம் செய்யப் பணமில்லாதிருந்தபோது உண்டியலில் சக்கரத்திற்கு அளவான சரியான தொகை கிடைத்ததென்றும் இவ்வாண்டு பிரமோற்சவ விழாவிற்குப் பணமில்லையே என எண்ணி ஏங்கி இருந்தபோது எதிர்பாரா உண்டியல் வரவு அதை ஈடு கட்டியதென்றும் மயிர்க்கூச்செரியும்படி கூறித் திகைக்க வைத்தார்.

இரு தேவிமார்—வள்ளியும் தெய்வயானையும் ஒருங்கே எழுந்தருளியுள்ள சிறு சந்நிதி இடப் பாகத்தே இருக்கிறது. இத் தேவிமார் சந்நிதிக்கும், திருக்குமரன் சந்நிதிக்கும் இடையில் சுரங்க அறை ஒன்றுள்ளது. அதில்தான் ஆதியில் இக் கோயிலை உருவாக்கிய பதினெண் சித்தர்களில் ஒருவரான— "நட்டகல்லை தெய்வமென்று நாலு புட்பம் சாத்தியே சுற்றிவந்து மொணமொணென்று சொல்லும் மந்திரம் ஏதடா நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளிருக்கையில் சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை யறியுமோ" என்று பாடிய சிவவாக்கிய சித்தர் தவமியற்றினர்.

இச்சிவாசல பதிக்குப் பாமாலை சூடிய பல புலவர்கள் உண்டு. அருணகிரிநாதர் நான்கு திருப்புகழ் மொழிந்துள்ளார். ஒன்றைப் பழனித்தலத்துப் பாட்டாய்ப் பதிப்பித்துள்ளதாய்க் கூறுவர். "குரம்பை மலசலம் வழு வளு நிணமொடு......செயங்கொடானை குக சிவமலை மருவிய பெருமாளே" என்றும் "கறுத்த குழலணி மலரணி பொங்கப் பதித்த சிலைநுதலணி திலதம் பொற்......சிலைக்குளானை குகசிவமலை கந்தப்பெருமாளே" என்றும் பாடுகின்றார். பக்கத்தேயுள்ள பட்டாலியூருக்கும் திருப்புகழ்ப் பாடல்கள் பல பாடியுள்ளார் அருணகிரிநாதர். கோவைக் கவியரசும் "திருவருள் தரவருக......சிவன்மலைவாழ் சிவசரவண முருக" என்று தொடங்கும் கீர்த்தனையும் "நல்ல சேனுபதியே—நீயேகதி நாயகனே உயிர்த்தாயகனே அருள்" என்ற பாட்டையும் இயற்றியுள்ளனர். அருள் வழங்கும் அவன் எதிரிலிருந்து மோகித்து அகங் குழைந்து முகமலர்ந்து மனமுருக மோகனத்திற்பாடி முருகனருள்பெற மேற்சொல்லப்பட்டவை நல்ல பாடல்கள் ஆகும்.

இக்கோயிலின் இன்றைய நிலைபற்றி ஒருசில வரிகள். அறுபத்தைந்து ஆண்டுகட்கு முன்புவந்த விளம்பி

ஆண்டு ஆவணித் திங்கள் 19-ம் நாள் வெள்ளிக் கிழமைதான் கும்பாபிடேகம் நடைபெற்றுள்ளது. சுற்றுப்புறத்தில் திருப்பணி சிறிது நடைபெற்று வருகிறது. "கோல நாடரும் புகழ்தரத் திகழ் கொங்கு நாட்டின"ரில் கூடிய சீக்கிரம் இக்குமரனுக்குக் கும்பாபிடேகம் செய்து குகனருளைப் பெறும் புண்ணியவான்கள் யார் யாரோ? காத்திருந்து பார்ப்போம்! பதினைந்து குடும்பத்து சிவாசாரியார்கள் ஆறு பாகம் முறை வைத்து ஐந்து காலப் பூசை நடத்திவருகின்றனர். தெய்வத்தானக் கட்டளைகளுடன் பழைய கோட்டை பட்டக்காரர் பூசையும், வேட்டுவபாளையம் பூசாரி கட்டளையும் நாளும் நடைபெறுகின்றன. தைப்பூசத்தில் பிரமோற்சவம். இச்சிவ குமரனுடன் எத்தனை நேரமிருப்பினும் நேரம் போவது தெரிவதில்லை.

"தூரந்தூரந் தூரமென்று சொல்லுவார்கள் சோம்பர்காள்
பாரும்விண்ணு மெங்குமாய்ப் பரந்தவிப் பராபரம்
ஊருநாடு காடுதேடி யுழன்றுதேடு மூமைகாள்
நேரதாக வும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே."

என்று இம்மலையில் சித்துக்கள் செய்த சித்தர் சிவவாக்கியர் பாடலுக்கொப்ப நம்முள்ளே உள்ள பரமனை நம்மால் அறிய முடியாததால் மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய் வழிபடின் வார்த்தை சொலச் சற்குரு வாய்க்கப்பெற்று அவர் மூலமாவது அறிந்து கொள்ளலாமே என்ற எண்ணத்தால் தலயாத்திரையை மேற்கொள்கிறோம். அடுத்துச் செல்லவேண்டிய சென்னிமலை அருகிலிருப்பினும் வண்டி வசதியை எண்ணி நேரத்தே இறங்க வேண்டுமென்ற நிர்ப்பந்தத்தால் இந் நிகரற்ற முருகனிடம் விடைபெறுவோமா! இச் சிவாசலபதி நம் எல்லோருக்கும் எல்லா நலனும் எய்த அருள் பாலிப்பானாக!

## திருவருள் தரவருக......(மோகன ராகம்)

பல்லவி

1. திருவருள் தரவருக—சிவன் மலைவாழ்
சிவசர வணமுருக (திருவருள்)

அநுபல்லவி

அருள்பொழி மலர்விழி ஆறிரண்டுடையாய்
அருண கிரணவொளி தவழும்வேற் படையாய் (திரு)

சரணம்

நீலக்கலாப மயில் வாகனமாட
நேரிழை வள்ளிதெய்வ யானையுங் கூட
சீல அடியார்குழுத் திருப்புகழ் பாட
சென்மவினைகள் எல்லாம் சிதைந்து நைந்தோடத்(திரு)

## நல்ல சேனுபதியே......(சண்முகப்பிரியா ராகம்)

பல்லவி

2. நல்ல சேனுபதியே—நீயே கதி
நாயகனே உயிர்த் தாயகனே அருள் (நல்ல)

அனுபல்லவி

மல்லலம் பொழிற்சிவன் மலைவளர் குகனே
மரகத நிறவுமை பெறுதவ மகனே (நல்ல)

சரணம்

ஆணவ மலமெனும் சூரனை வதைத்தாய்
அரிய மாயையாம் மலையினைச் சிதைத்தாய்
ஏண்மிகு தாரக வினையினை யொழித்தாய்
இன்ப மிகுந்திட மன்பதை அளித்தாய் (நல்ல)

# சென்னி மலை

கொங்கு ஏழ்மலைகளுள் இரண்டாவது மலையான சென்னிமலைக்குச் சென்று வழிபடப் போகிறோம். ஈரோட்டிலிருந்து ரயில் மார்க்கமாய் இருபது கிலோ மீட்டர் தூரத்திலுள்ள மூன்றாவது கடியான ஈங்கூரில் இறங்கி ரஸ்தாவில் தெற்கே ஆறு கிலோமீட்டர் சென்றால் சென்னிமலை ஊரை அடையலாம். ஈரோட்டிலிருந்து நேராக உந்து ஊர்திகளும் இவ்வூருக்கு உண்டு. கோவையிலிருந்து காங்கயம் வழியாகவும் சென்னிமலைக்கு வந்து சேரலாம். சென்னிமலையின் அடிவாரத்தில் ஊர் உள்ளது. ஊரின் பெயரும் சென்னிமலையே. பழநிமலையடிவாரத்தில் திருவாவினன்குடி அமைந்திருப்பது போல் இச்சிறுகிரியின் அடிவாரத்தில் சென்னிமலை எனும் ஊர் அமைந்துள்ளது. இச் சென்னிமலை நகர்ச் சிவன் கோயிலில் எழுந்தருளிய இறைவனைக் கைலாய நாதர் என்றும் இறைவியைப் பெரியநாயகி என்றும் அழைக்கின்றனர். சரவண முனிவருக்கு முதன் முதலில் காட்சி நல்கிய சிரகிரி வேலாயுதரும் இக்கோயிலில் எழுந்தருளியுள்ளார். மலைக்குச் செல்லலாமா? இம்மலைக்குச் சிரகிரி, சிகரகிரி, சென்னியங்கிரி, புட்பகிரி என்று பல பெயர்களுண்டு. பல மூலிகைகளை உடைய மலை. முனிவர்களும், சித்தர்களும், ஞானிகளும் வாழ்ந்த மலை. கொங்கில் மேல்கரைப் பூந்துறை நாட்டில் அமைந்துள்ளது இம்மலை.

ஆகையால் ஊரைச் சென்னிமலை நகர் என்றழைப் போமாக!

தொடர்ச்சியாய் அடுக்கடுக்காய் அமைந்து கொஞ்சம் கொஞ்சமாய் மலை உயர்ந்து போகிறது. சீரான படிகளை உடைய நேரான பாதையுண்டு. மலை



சென்னிமலை அடிவாரம் மலைப்படி ஆரம்பம்.

யடிவாரத்திற் காவற் கடவுளாக இடும்பன் காட்சியளிக்கிறார். பிற்காலத்தில் எழுந்தது இடும்பன்கோயில். மலைக்குச் செல்லும் வழியிலுள்ள முதல் விநாயகரின் திருநாமம் மலைவழி விநாயகர் என்பதாகும். மலைப் பாதையின் ஓரத்தே பச்சை விளக்கிட்டுள்ளனர். இரண்டு மூன்று தீர்த்தங்கள் இம்மலையில் உண்டு. அவை மாமங்க தீர்த்தமும் (மலையின் தென்மேற்குச் சரிவிலுள்ளது) கண்டு காணாச்சுனையும், சுப்பிரமணிய தீர்த்தமும் ஆகும். மலை ஏறும்போதே, ஆரம்பத்தில், படுபாதாளத்தில் வட பக்கத்தில் உள்ள சரவணப் பொய்கை, குமார தீர்த்தம் என வழங்கப்பெறும் சுப்பிரமணிய தீர்த்தக் குளத்தை எட்டிப்பார்த்துத்தான் ஏறுகிறோம். அதிலிருந்து குழாய்களின் மூலம் மலையுச்சி

வரை தண்ணீர்கொண்டு செல்லப்படுகிறது. நடு நடுவேயுள்ள மண்டபங்களின் ஓரத்தே குடிதண்ணீர்க் குழாய்கள் அமைக்கப்பட்டுள்ளன. அதனால் ஏறுவோர் தாகம் தீர்ந்து இளைப்பாறி மேலே நடக்கத் தெம்பு பெறலாம். மலை உச்சி கடல் மட்டத்திற்கு மேல் 1279-அடி உயரமல்லவா? அவ்வளவு சுலபமாக ஏற முடியுமா என்ன? ஓடியும், உட்கார்ந்தும், தண்ணீர் குடித்தும், வியர்வையை உதறியும், வேடிக்கை பார்த்தும், பெருமூச்செறிந்தும், மலையுச்சியை அடைந்து விடுகிறோம். நடந்து மலையேறினால் புண்ணியம் உண்டு என் பதில் பூரண நம்பிக்கை கொண்டவர்கள் உடலை வாட்டியும் வருத்தியும் நடந்தே மலைமுடியை அடைகின்றனர். நாகரீக மேம்பாடு உடைய செல்வச் சீமான்கள் சிரமமின்றி மலையுச்சியில் காரில் வந்து இறங்க மலைமேல் கோயில் வரை நல்ல சாலை ஒன்று உண்டு.

கோயில் முன்புறம் பரந்த வெளி. திறந்த அம்மைதானத்தே கருட கம்பமும் நிழல் கொடுக்க இரண்டொரு மரங்களும் நிற்கின்றன. ஓரத்தே நின்று கீழே உற்று நோக்கினால் சென்னிமலையின் பழைய ஊரையும் அதன் நடுவில் பரமன் கயிலாசநாதர் ஆலயத்தையும் காணலாம். விரிவாகி வளர்ந்துவரும் ஊரின் புறத்தே புதிய வீடுகளும், நவீன குடியிருப்புக்களும் நகரின் வளர்ச்சியை நமக்கு எடுத்தியம்பும். மலைமுகட்டின் ஓரத்தே சில மண்டபங்கள் மக்கள் தங்குவதற்காகக் கட்டிவிடப்பட்டுள்ளன.

கோபுர வாயில் கிழக்கு நோக்கியுள்ளது. பக்கத்திலிருக்கும் குழாயில் கைகால்களைச் சுத்தம் செய்து உட்புகலாமா? கொடிமரம் காண்கிறோம். விழுந்து கும்பிட்டு எழுந்து வலம் வருகிறோம். வரும்போது பிரகாரத்தினுள்ளேயே விசுவநாதர், விசாலாட்சி, ஆகியோரின் சந்நிதிகளையும் வணங்குகிறோம். மாடக்

கோவில் போன்று மேடையில் அமைந்துள்ளது மகா மண்டபம். உள்ளே செல்கிறோம். சிங்க ஊர்தி பக்கத்தில் நிற்க, துவார பாலகர்கள் ஒரு விரல் உயர்த்தி நமக்கு விடைகொடுக்கின்றனர். ஏன் ஆள்காட்டி விரலை மட்டும் உயர்த்தியும் மற்ற விரல்களைத் தாழ்த்தியும் காட்டுகிறார்? இக்கேள்வியை உடன்வந்த கோவை நகராட்சி உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர்கள் எழுப்பினார்கள். "ஒருவர் ஒருவராக உட் செல்லுங்கள்"



சென்னிமலை இடும்பன்

என கியூ வரிசைப்படுத்துகிறார் என்றார் நிர்மலாக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர். இல்லை, இல்லை, உள்ளிருக்கும் இறைவனே உயர்ந்த ஒரு தேவன் என்பதை

உள்ளே போகும் நமக்கு உணர்த்தி நிற்கின்றனர் எனத் தத்துவத்தை விளக்கிக் கூறினார்கள் கவியரசு. இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டுவது போன்ற தத்துவ விளக்கங்கள் நம் சிற்பங்களில் எத்தனை எத்தனையோ உண்டு. பொருள் பொதிந்துள்ளனவற்றைப் புரியும் ஆற்றலாவது இறைவன் நமக்குக் கொடுக்கட்டும் என வேண்டிக் காலை உள் வைக்கிறோம். நுழைவாயில்



சென்னிமலைக் கயிலாசநாதர் கோயில்.

விதானத்திலும், கருப்பக்கிரகத்தின் இடநிலை வாயிற் சுவரிலும் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. சந்நிதியில் நின்று சென்னி தாழ்த்தி வணங்குகிறோம். இவ்விறைவன் திருநாமம் சென்னிமலைநாதர் அல்லது சிரகிரித் தண்டாயுதபாணி என்பதாகும். அழகிய திருக்கோலம். உயரம் சுமார் நான்கடி இருக்கும். மனதைக் கவரும்படியாய்க் காட்சி அளிக்கிறார் பெருமான். அவர் சந்நிதிக்குப் பக்கத்திலேயே மார்க்கண்டேசுரரும்

இமயவல்லியும் எழுந்தருளியுள்ளனர். பேரூர்ச் சாந்த லிங்கர் இயற்றிய அவிரோத வுந்தியார் என்ற நூலுக்கு உரை எழுதிய சிதம்பர சுவாமிகள் ''திருப்பனுவல்'' என்ற நூலிலிருந்து சில பாடல்களைத் தக்கஇடங்களில் மேற்கோளாகக் காட்டுகிருர். அத்திருப்பனுவல் மேற் கோட் பாடல்கள் இரண்டில் சென்னிமலை மார்க்கண்ட இலிங்கம் இடம் பெறுகிறது. அவை :

"ஈன னேனுடற் கின்பத்துன் பங்கள்நீ
ஞான பூரண நல்கவு நானுனித்
தானி னைப்பதென் னேசென்னித் தண்கிரி
வானு ளோர்தொழும் மார்க்கண்ட லிங்கமே.

என்றும்

" இன்ப துன்ப மெனக்குநீ நல்கவு
மன்ப கன்றினி யல்லும் பகலுநான்
உன்பிர தாபமுணருத லோவினேன்
மன்ப ராபர மார்க்கண்ட லிங்கமே."

என்றும் வரும்.

''திருப்பனுவல்'' என்ற இந்நூலின் ஆசிரியர் யாரென்று தெரியவில்லை. நூலும் கிடைப்பதில்லை.

வள்ளி தெய்வயானை, இரு தேவிமார்க்கும் தனிக்கோயில் ஒன்று சென்னிமலை நாதர் கோயிலுக்குச் சற்று உயரே சுமார் 300-கஜ தூரத்தே அமைந்துள்ளது. பிரகாரம் உண்டு. வள்ளியும் தெய்வயானையும் மத்தியில் உள்ள சுயம்பு லிங்கத்தின் இருபுறமிருந்து காட்சியளிக்கின்றனர். அச்சுயம்புலிங்கத்தை அகத்தியர் என்கிருர்கள். அகத்தியரால் இது பிரதிட்டை செய்யப்பெற்றது என்றும் கூறுவர். இக் கோயில் மகா மண்டபத்துத்

தூண்களில் ஏழாம் நூற்றுண்டில் வெளித் திருப்பணி செய்த முத்து வசவய்யன், மைசூர் மன்னன் தேவராச உடையார், அவர் மனைவியார் ஆகியோரின் சிலைகள் காணப்படுகின்றன.

இன்னும் மேலே செல்கிறோம். ஒற்றையடிப் பாதை முட்புதர்களுக்கு நடுவே செல்கிறது. ''கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை'' என்று கூறி நடக்கிறோம். கொஞ்ச தூரத்தே குகை ஒன்றைக் கண்ணுறுகிறோம்.



சென்னிமலை உற்சவர் வள்ளி தெய்வயானையுடன்

இதில், ஆதியில், பிண்ணாக்குச் சித்தர் இருந்ததாய்க் கூறுகின்றனர். சரவண முனிவர் என்ற ஆதி சைவப் பிரமசாரியின் சமாதியையும் பக்கத்தில் காண்கிறோம். இது சன்யாசி குகை எனப்படும். தன்னாசி குகை என்று மருவி வழங்குகிறது. இச் சரவண முனிவர் சென்னிமலைத் தலபுராணம் எழுதியுள்ளார். இவர் பெயரால் ஒரு மடமும் ஊரின் நடுவே அமைந்

துள்ளது. சரவண முனிவர் திருவிருந்தபுரமெனும் பிடாரியூரிற் பிறந்தவர், பன்னிரண்டாம் நூற்றுண்டைச் சேர்ந்தவர். சென்னி மலைமீது முருகன் கோயிலும் அடிவாரத்திலமைந்துள்ள நகரில் கயிலாச நாதர் ஆலயமும் கட்டியவர். தேர் செய்து முதலில் விழா எடுத்தவர். இவற்றிற்கான அகச் சான்றுகள் தலபுராணத்தில் ஆங்காங்கே காணப் பெறுகின்றன. பழநிமலையடியிலுள்ள திருவாவினன் குடியிலும், சென்னி மலைமுடியிலும் திருமுருகன் காட்சியைக் காணும் பேறு பெற்றவர். இவர் காஞ்சி சென்று செப்பேடு கண்டுவந்த பின் தல புராணம் இயற்றினர். அது ஆறு மான்மியங்களைக் கொண்டது. இரு நூற்றேழு செய்யுட்களையு முடையது. இத்தலபுராணத் திற்குப் புலமை மிக்க—விரிவான—உரை செய்தவர் கொங்குப் புலவர் திரு. வே. ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர். சரவண முனிவருக்குப் பின் அவர் கட்டிய கோயிலை விரிவுபடுத்தித் திருப்பணி செய்தவர்கள் மைசூர் அரசன் தேவராச உடையாரின் கையாள் முத்து வசவய்யனும், செங்கத்துறைப் பூசாரியும், வேட்டுவ பாளையம் வேளாளத் தம்பிரானும் ஆவார்கள்.

சிலேடையாக வெண்பாப் பாடுவதில் புகழ்பெற்ற கவி காளமேகம் பாடியதாக ஒரு பாடல் இச் சென்னி மலை பற்றிக் காணக் கிடைக்கின்றது.

"சென்னிமலை வேலருக்குச் சேர்ந்த கொம்பு இரண்டுண்டு
கன்னிகுற வள்ளிக்குக்காலில்லை—முன்னமே
ஆட்டுக்குக் கொம்பில்லை ஆனைக்குக் காலில்லை
பாட்டுக்குள் ஆராய்ந்து பார்"

நாமும் இப் பாட்டை ஆராய்ந்து பார்ப்போமா? சென்னிமலையில் எழுந்தருளியிருக்கும் வேலவருக்கு இரண்டு கொம்புகள் உண்டாம். கன்னியாகிய வள்ளிக்குறத்திக்குக்கால் இல்லையாம். எப்பொழுதுமே ஆட்டுக்குக் கொம்பில்லையாம். ஆனைக்கும் காலில்லை

யாம் என்று காளமேகம் கூறிவிட்டு அது எப்படி என்று நம்ப முடியாமல் திகைக்கின்ற நம்மை "ஆராய்ந்து பார்" என்கிறார். ஆனை என்பதை யானை என்று எழுதினால் யகரத்தை யடுத்து ஓர் எழுத்து எழுது



செஞ்ஜிமலை துவாரபாலகர்

கிறோம் அல்லவா? அதற்குப் பெயர் "கால்" என்று தானே சொல்கிறோம். ஆகவே ஆனை என்று எழுதும் போது "கால்" போடவேண்டியதில்லை. இதுபோலவே இந்தப் பாட்டில் சொல்லப்படும் ஒவ்வொரு சொல்லை யும் எழுதுகின்ற முறையைத்தான் கவனிக்கவேண்டும். ஆடு என்று எழுதினால் கொம்பில்லை என்றார் புலவர். உண்மைதானே! மெய்யெழுத்தோடு எ, ஏ, ஒ, ஓ,

ஒள முதலிய உயிர் எழுத்துக்கள் சேர்ந்த உயிர்மெய் எழுத்தை எழுதிப் பாருங்கள். கெ, கே, கொ, கோ, கௌ இவற்றில்ககரத்திற்கு அடுத்து இருப்பது "கால்" முன்னால் இருப்பது கொம்பு. இந்தக் கொம்பு ஒற்றைக் கொம்போ, இரட்டைக் கொம்போ "ஆடு" எழுதும்போது தேவைப்படுகிறதா? இல்லையே! அதைத்தான் ஆட்டுக்குக் கொம்பில்லை என்று சொல்கிறார் புலவர்.

இவ்வாறே சென்னிமலை வேலவர், கன்னிகுற வள்ளி என்ற தொடர்களை ஆராய்ந்து பார்ப்போம். "சென்னிமலை" இதில் ஒற்றைக் கொம்பு உண்டு. "வேலவர்" இதில் இரட்டைக் கொம்பு உண்டு. ஆகவே "சென்னிமலை வேலவருக்கு" க்கொம்புகள் இரண்டு உள்ளன. "கன்னிகுறவள்ளி" என்பதில் ஒரு முறையேனும் "ா" (கால்) வரவில்லை. இப்பொழுது பாட்டு மிக எளிதாகத் தோன்றுகிறதல்லவா? சென்னிமலை வேலவர்க்குக் கொம்பு போன்ற மனைவியர் இருவர் உள்ளனர் என்று கொண்டாலும் சரிதான். வள்ளியும், தெய்வயானையும் அவர்களாவார்கள். வள்ளிக்குக் காலில்லை; காரணம் அது கொடி என்பார்கள்.

முருகனின் மெய்ப்புகழைத் திருப்புகழால் பாடியவர் அருணகிரிநாதர். அவருக்குச் சென்னிமலை வேலவர் படிக்காசு வழங்கியதாகக் கூறப்படுகின்றது. அதற்கான ஆதாரமும் உண்டு. சிற்றிலக்கிய வகைகளுள் "காதல்" என்பதும் ஒன்று. சென்னிமலை ஆண்டவர்மீது காதல் கொண்ட நிகழ்ச்சியாக அங்கண செட்டியார் என்ற புலவரொருவர் நூல் ஒன்றை அருமையாக இயற்றியுள்ளார். அதில்,

"நாட்டில் அருணகிரி நாதன் திருப்புகழ் சொல்
பாட்டின் மகிழ்ந்து படிக்கா சளித்தபிரான்

தாலமிகுஞ் சென்னிமலை தன்னில்வளர் கல்யாண
வாலசுப்ப ராயனென்று வாணர்புகழ் வாசலினன்."

என்ற வரிகள் காணப்படுகின்றன.

அருணகிரிநாதர் படிக்காசு பெற்ற விபரத்தை அப் புலவர் மறவாமல் அதில் குறித்துள்ளார். சென்னி



மலைக்கோயிலில் உள்ள மூர்த்தி

மலைக்குத் திருப்புகழ் இருக்கவேண்டும் அல்லவா? "சிரகிரி" என்ற தலம் பற்றிய திருப்புகழ்ப் பாடல்கள் இச் சென்னிமலை பற்றியவை எனலாம். திருச்சிராப் பள்ளியாகிய கிரி—சிரகிரி என்றும் கொண்டு அப் பாடல்களைச் சிராப்பள்ளிக்கும் உரியதாக்குவார்கள். இத்தலத்தின் அருகே உள்ள 'கன்னபுரம்' என்ற ஊருக்கும் அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியுள்ளார்.

சாமிநாதப் புலவர் இப் பிள்ளைப் பெருமானுக்குப் பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். அப் புலவர் பாடிய மற்றொரு நூல் சென்னிமலை யமகவந்தாதியாகும். எழுமாத்தூர், திரு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர், எழுதிய 'சென்னிமலை முருகன் புலவராற்றுப் படை' என்ற நூல் குறிப்புரையுடன் உள்ளது. இச் சென்னிமலை பற்றிய குறிப்புக்கள் காஞ்சிபுரத்துச் "செப்பேட்டில்" காணக் கிடைக்கின்றன. மேலும் திருப்பணுவல், சோழன் பூர்வ பட்டயம், மேழிவிளக்கம், கொங்கு மண்டல சதகம், பூந்துறைப் புராணம் ஆகியவற்றில் சென்னி மலையின் சிறப்புக்கள் இடம் பெற்றுள்ளன. அருணகிரியாருக்குப் படிக்காசு வழங்கிய சென்னிமலைப் பெருமானைப் படிக்காசுப் புலவர் பாடிய வண்ணப் பாக்கள் பல உண்டு. மடவளாகம் தேவராசய்யர் சிரகிரி வேலவன் சீக்கிரம் வர கந்தர் சஷ்டிக் கவசம் பாடியுள்ளார்.

இவ்வூர் கைத்தறி நெசவுத் தொழிலுக்குப் பெயர் பெற்றது. அத்தொழிலில் அகில இந்தியப் புகழ் பெற்றது. கொங்கு நாட்டிலுள்ள மக்கள் சென்னிமலை முருகனைத் தயிராலும், சிவமலை முருகனைப் பாலாலும், அபிடேகித்து அவனுடைய பரிபூரண அருளைப் பெறுகின்றனர். சென்னி மலையில் தயிர் புளிப்பதில்லை என்பது தலத்தின் சிறப்புக்களில் ஒன்று. இத்தலத்தின் விருட்சம் புளியமரம். இம் முருகன் முன்பாகக்கருங் கொடிகள் (காக்கைகள்) வாரா. வந்தால் கரிந்து போகும் எனத் தலபுராணம் கூறும். எங்கிருந்து எப்போது நினைக்கினும், அங்குவந்து அப்போதே அருள்புரியும் எழில்மிகு இக்குமரன் நம் எல்லோருக்கும் இன் அருள் பாலிப்பானாக!!

(பிளாக்குகள் உதவியவர் : கோவை போட்டோ கிராபிக் சொசைட்டியார்.)



செஞ்சேரி மலை

# செஞ்சேரிமலை

"ஆதியில் அரன் தனக்கு உபதேசம் புரிந்த கனி வாயன்-அசுரரை வென்ற சோதியன்-வடிவேற்காரத் தன்-நீதி திகழ் பெரியநாயகி புதல்வன் - அனைத்து உயிர்க்குள் நிறைந்தோன்-வேதமாதவர் பரவும் எழில் மந்திரகிரி அறுமுகன்" என்றும், "அவன் ஓராறு முகத்தன், உகந்த மயில் உடையான், உம்பர் போற் றும் ஈராறு கரத்தன், எமை அடிமை கொண்டான், எழிற் றூவாசத்தார் ஆரும் புயத்தான், அவுணர் கிளை தடிந்தான், சீர் ஆரும் பதத்தான் தென்சேரி கிரியான்" என்றும் இவ்வூர்த் தல புராண ஆசிரியர் அம்மையப்ப ரால் போற்றிப் புகழப்படுகிருர் இத்தென்சேரிகிரி அறு முகவன். மாண்புமிக்க இம் மூலத்தான அறுமுகமூர்த்தி யின் பெயர் மந்திராசல வேலாயுத மூர்த்தி. இவரை அருணகிரிநாதர் 'சிங்காரச் செம்பொன் மதிலலங் காரச் சந்திரகலை தவழ் தென்சேரிக் குன்றிலினி துறை பெருமாள், - 'அசுரர்களை வென்ருேடி அடியர் தொழத் தென்சேரி கிரியில் வளர் பெருமாள்' என அகங் குழைந்து அழைத்து மகிழ்கிருர். என்றும் இளையானை, இனியானை' இதயங்கவர் அழகனை அவ்வறுமுகனைக் காணச் செல்லலாமா?

'செஞ்சேரிமலை' என்று இன்று வழங்கப்பெறும் இவ்வூரின் பழமையான பெயர் தென்சேரி கிரி என்பது. பல்லடம்-உடுமலைப்பேட்டைப் பாதையில் சுமார் பதி

னெட்டு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. மலை சிறியதே. நில மட்டத்திற்கு மேல் 150 அடியுள்ள இக்குன்று கடல் மட்டத்திற்குமேல் 1356 அடி உயரத்தில் உள்ளது. மந்திரகிரி என இம்மலைக்கு மற்றொரு பெயரும் உண்டு. 'மந்' — நினைப்பவரை, 'திர' — காப்பாற்றும், கிரி—மலை என்று பொருள் கொள்வாருமுண்டு. 'ஊனமற்றிடப் பதவியும் கொடுப்பதால் உயர்ந்த, ஞானமேவு தென்சேரி கிரி மாமலையென நவில்வார்' என ஒரு பாடல் மலையைப்பற்றிக் கூறுகின்றது.

மலை அடிவாரத்தில் உள்ள ஊருக்கு மலைப்பாளையம் என்று பெயர். யாத்ரீகர்கள் தங்குவதற்குச் சில மடங்களும் உண்டு. அவற்றுள் திருநாவுக்கரசர் திருமடம் ஒன்று. அது நந்தவனம் வளர்த்துத் தண்ணீர்ப் பந்தல் வைத்துத் தொண்டு செய்கிறது. மலையடியில் சந்தன விநாயகரும் சற்று உயரத்தில் இடும்பனும் கோயில் கொண்டுள்ளனர். உச்சியில் கிழக்கு நோக்கியுள்ளது மந்திரகிரி வேலாயுத சுவாமி கோயில். வேலாயுதசாமியின் திருக்கோயிலுக்கு ஏறுவதற்கு வசதியாக மலைமேல் வெட்டப்பட்ட நல்ல படிகளும், இடதுபுறத்தில் கைப்பிடிச் சுவரும் உண்டு.

தெய்வத் தமிழகத்தில் உள்ள முருகன் தலங்களில் மூலத்தான மூர்த்தி ஆறுமுகங்களுடனும், அருகே இருமருங்கும் வள்ளிதெய்வானையுடனும், இடப்பாகம் தலையை வைத்து நிற்கும் மயிலுடனும் காட்சியளிப்பது மிகச் சில கோயில்களில் தான். அவற்றுள் இத்தலமும் ஒன்ருகும். இவ்வூர் வேலாயுதசாமி அவ்வற்புதக் காட்சியின் எழிலை நமக்கெல்லாம் எளிதில் நல்குகிருர். திருவுருவம் அடிமுதல் முடிவரை நாலடி இருக்கும். நல்ல அழகர். "மாறிவரு சேவற்பகையைத் திறல்சேர் பதாகை என மேவத் தனித்துயர்த்த மேலோன்" இவ்வூரில் "தன் பாரப் புய

சயிலம் பன்னிரண்டில்'' இடது பக்கம் முதற் கையில் சேவற் கொடிக்குப் பதிலாகச் செஞ்சேவலையே கொண்டுள்ளார். இவ்வருமையைக் கண்ணுற்ற அருணகிரிநாதர் ''திண்டாடச் சிந்து நிசிசரர் தொண்டாடக் கண்ட அமர்பொரு செஞ்சேவற் செங்கையுடைய சண்முக தேவே! சிங்காரச் செம்பொன் மதிளத லங்காரச் சந்த்ர கலைதவழ் தென்சேரிக் குன்றிலினிதுறை பெருமாளே'' என்றழைக்கிறார். கர்ப்பக் கிருகத்திற்கு அடுத்துள்ள அர்த்தமண்டபத்தில் ஆறுமுகனின் வலப்புறம் பிள்ளையாரும், 'பிரகநாயகியும்' இடப்பக்கம் 'கைலாசநாதரும்' எழுந்தருளியுள்ளனர்.

கோயிலின் வடபக்கத்திலுள்ள சயிலோதகம் என்ற ஞான தீர்த்தம் சுனை வடிவானது. அபிடேகத்திற்கும் மடைப்பள்ளிக்கும் இது பயன்படுகிறது. இறைவனுக்குப் பயன்படுவதும் இந்நீரே. இச்சுனை வற்றுவதில்லை. மதுரமான நீர். தினமும் இச்சுனையில் நீராடி ஒரு வேளை இறைவனின் பிரசாதத்தை உண்டு, மந்திர கிரியை வலம் வரும் பித்தர்கள் ஒரு மண்டல காலத்தில் பித்தம் தெளியப்பெறுவர். கோயிலின் சூழலில் பல தீர்த்தங்களும் குகைகளும் உள்ளன.

தல விருட்சம் கரு நொச்சி. இக் கருநொச்சித் தழை கொண்டருச்சிப்பது சிறப்புடையது. ஊர்மக்கள் தங்கள் எதிர்காலத்தின் நடப்புகளைத் தெரிந்து கொள்ள ஈராறு கரமுடைய இவ்விறைவரின் ஓரிரு திருக்கரங்களில் பூ வைத்துக் கணித்துச் செல்கின்றனர். ஐந்து நிமிடங்களுள் வலக்கரத்திலிருந்து பூ விழுமாயின் நினைத்த காரியம் வெற்றி என்றும், இடக் கரத்திலிருந்து விழின் நிறைவேறாது என்றும், காலம் கடந்தும் விழவில்லை எனில் காலதாமதம் ஆகும் என்றும் அறிந்து கொள்கின்றனர். இம் முறைக்குப் 'பூக் கேட்டல்' என்று பெயர்.

கருப்பக்கிருக வாசலின் இருபக்கமும் கல்வெட்டுக்களைக் காணலாம். பல இடங்களில் கல்வெட்டுக்களையே கண்ட கண்களுக்கு இங்கோர் புதுமை. மரத்தில் எழுத்துக்கள் செதுக்கப்பட்டிருப்பதைக் காண ஒரு வாய்ப்புண்டு. இதை மரவெட்டு என்றழைப்பர் போலும்! கோயில் முதற்கதவில் இதனைக் காணலாம். திருப்பணி நடந்து வருகிறது. பிரம்மோற்சவம் தைத் திங்களில் பத்துநாள் நடைபெறுகிறது. பூசத்தன்று தேர்த் திருவிழாவும் உண்டு; ஐப்பசியில் கந்தர் சஷ்டி விழாவும் கொண்டாடுகின்றனர். நாள்தோறும் நான்கு கால பூசை நடந்து வருகின்றது.

இத் தலத்திற்கு மேற்கே சுமார் ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் விண்டு மலை உள்ளது. அதைச் சக்தி வடிவாகக் கருதிச் சக்திகிரி என்றும் அழைப்பர். அம் மலையின்மேல் திருமால் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். சனிக்கிழமை தோறும் பக்தர்களுக்குச் சேவை சாதிக்கிறார்.

சூரபன்மனையும் அவனது கூட்டத்தாரையும் வென்று தேவர்களைக் காக்கும் பொருட்டுக் கந்தன் தோன்றினார். சக்திவேலுடன், பதினொரு உருத்திரர்களையும் பதினொரு ஆயுதங்களாகக் கொடுத்த பராசக்தி சூரனின் மாயா வாதத்திலிருந்து தன் மகனைக் காக்கத் திருவுளம் கொண்டு இறைவனிடம் தீட்சை மந்திர உபதேசம் செய்துவைக்க வேண்டுகிறார். இணையற்ற இறைவன் முருகனை நோக்கி "நீ செல்லும் வழியில் நமது அருளால் நாமே மலைவடிவாய் உள்ளோம். உன் அன்னையின் வடிவமாய்ச் சக்திகிரியும் அங்கு நிற்கும். அச் சிவகிரியிற் சென்று ஒரு தினம் சிவ சிந்தனையிற் றவம் செயின் மந்திரோபதேசம் செய் தருளுவோம்" என்று கூறினார். அதன்படியே அரிய தவம் இயற்றிய முருகன் செவியில் மூல

மந்திரத்தை மொழிந்து கடலைக் கடந்து சூரபதுமனைத் தடிந்து வருக எனக் கயிலைநாதன் கட்டளையிட்டது இம்மலையிலே தான். அதனால்தான் இம்மலை மந்திராசலம் என்ற பெயரைப் பெற்றது. அகத்தியரும் வாமதேவரும் ஆசிரமம் அமைத்து இம் முருகனை நினைந்து அருஞ்சாதனை புரிந்தது இம்மலை அடிவாரத்தில் தான். போகர் போன்ற சித்தர் சிலகாலம் யோக நிலையிலிருந்தது இம் மலையிலுள்ள குகைகளில் தான். பிரமன் வேதப் பொருளின் உண்மை உணராமல் தெரிந்ததாகச் சொன்ன பாவம் பொடிபட நோன்பியற்றியது இவ்விடத்திலே தான். திருப்பரங் குன்றத்தில் தெய்வயானையைத் திருமணம் முடித்துத் திரும்பும் காலை முருகன் தங்கியதும் இம்மலைமேலுள்ள திருக் கோயிலில் தான். இவை எல்லாம் தல புராணம் நமக்குத் தரும் செய்திகள்.

தவமலி தண் தமிழ் நாட்டில் தெய்வத் தலங்கள் பல உண்டு. பெரும்பாலானவற்றிற்குத் தல புராணங்களும் உள்ளன. இவற்றைப் பொய்க் கதைகள் எனத் தள்ளுவர் சிலர். அது முறை யன்று. தல புராணங்களில் கூறப்படும் செய்திகள் சில அத்தலத்தின் சூழலிற் சொல்லப்பட்டுவரும் ஐதீகங்களாகவும், சில சமய உண்மைகளை விளக்குவதற்கு எழுந்த உதாரணங்களாகவும், வேறு சில அவ்வப்பகுதிகளில் வாழ்வோர் தாம் வாழும் நாடு, ஊர் இவற்றின் மேல் வைத்துள்ள பற்றுக் காரணமாகக் கூறியனவாகவும், புனைந்துரைத்தனவாகவும் காணப்படுகின்றன. தல புராணங்களை அகச்சான்று, புறச்சான்றுகளால் நிறுவக்கூடிய வரலாற்று நூல்களாகக் கொள்ளக் கூடாது. பயனற்ற பொய்க்கதைகளாகவும் தள்ளக்கூடாது. இத் தென்சேரி கிரித்தலத்திற்குக் கருணீகர் மரபைச் சார்ந்த 'அம்மையப்பர்' எழுதின தல புராணம் ஒன்று உண்டு. அது பன்னிரண்டு சருக்கமும் 255 பாடல்களும் உடையது. அருணகிரி

நாதர் பாடிய "எங்கேனும் ஒருவர்........சென்டாடி அசுரர்களை ஒன்றுக அடியர்தொழு தென்சேரி கிரியில்வரு பெருமாளே" எனவும், "கொண்டாடிக் கொஞ்சும்......" எனவும் தொடங்கும் திருப்புகழ்ப் பாடல்கள் இரண்டு உண்டு. பழனிமலை உபாத்தியாயர் எழுதிய செஞ்சேரி மாலையும், உபாத்தியாயர் கோவிந்தசாமி ஆசாரியார் எழுதிய தென்சேரி கிரி நான்மணி மாலையும் இத் தலத்திற்கு உண்டு.

இத் தலத்தின் சிறப்பை ஒருங்கு சேர்த்து முடித்துக் கூறும் பாட்டைக் கூறி இக்கட்டுரையை முடிப்போமா?

"ஆனதினுல் தென்சேரித் தலமகிமை
தனைப்புகல்வோர் அன்பாய்க் கேட்போர்
மாநிலத்தில் கலிவினையும் பலவினையும்
தானகன்று மகிழ் குபேரன்
ஆனெனன வாழ்ந்திருந்திம் மைப் பயனடைந்து தேவர்
தபோதனர்கள் போற்ற
மேனிலைசேர் கந்தவெற்பிற் குகனடியாம் பதத்தினில்
வீற்றிருப்பர் மாதோ!"

(கலிவினை-கலிகாலத்தினுல் வரும் தீவினை. பலவினை-பிறவிக்குக் காரணமான இருள்சேர் இருவினை.)





ஈரோடு—தொண்டீச்சுரக் கோபுரமும், தொண்டர் நாயனரும்

# ஈரோடு

## 1. திருத்தொண்டீச்சுரம்

நாத்திகம் என்ற தடை ஒன்று செயல்படுவதில்லையானால் ஆத்திகம் செயல்படாது. ஆகையால் ஆத்திகத்தின் வளர்ச்சிக்கு நாத்திகம் இன்றியமையாதது. தேவையானதும் கூட.

ஈரோடு என்றதும் நாத்திகப் பிறப்பிடம்; நாத்திகப் பாசறை என்ற எண்ணம் சிலருக்கு உண்டாவது இயற்கையே. "ஆத்தமானார் அயலவர்கூடி நாத்திகம் பேசி நாத்தழும்பேறினர்" என மாணிக்க வாசகர் போற்றித் திருவகவலில் கூறுவதால் நாத்திகமும் பழமையானதென்பதையும் அறிகிறோம். ஆலகால நஞ்சு தோன்றியதும் அமுதம் வெளிப்பட்டது போன்று ஈரோட்டில் நாத்திகப் பாசறையின் நடுவே அருள் நெறி உருவாகித் தழைத்து ஓங்குகிறது. ஆலய வழிபாடு சிறப்புற நடைபெறுகின்றது. வழிபாட்டு வகையில் அவ்வூர் மக்களும் வணிகர்களும் குறிப்பாகப் பெண்களும் கொங்கு நாட்டிற்கே எடுத்துக்காட்டாய்த் திகழ்கிறார்கள்.

ஈரோடு "ஈரோடை" என்றும் வழங்கப்பெறுகிறது. பிச்சைக்காரன் பள்ளம் என்ற ஓடை

கண்டிராதவளத்தான் குளத்திலிருந்து வந்து, காளிங்கராயன் கால்வாயுடன் சேர்ந்து பின் காவிரியிற் கலக்கிறது. காளிங்கராயன் என்ற ஜமீன்தாரால் (702 ஆண்டுகளுக்கு முன்பு) வெட்டப்பட்டதால் காளிங்கராயன் கால்வாய் என்ற பெயர் பெற்றது. இக் காளிங்கராயன் கால்வாயினுடைய சரித்திரத்தை அறிந்து கொண்டால் கொங்கு நாட்டின் பிற்பட்ட காலச் சரித்திரத்தையே தெரிந்து கொள்ளலாம். மற்ருெரு புறத்தில் பெரும்பள்ளம் என்ற ஓடை இவ் வூருக்கு அணிசெய்து ஓடிக் காவிரியுடன் கலக்கிறது. பிச்சைக்காரன் ஓடை, பெரும்பள்ள ஓடை ஆகிய இரண்டு ஓடைகளுக்கும் நடுவே அமைந்துள்ளதால் இவ்வூரை ஈரோடை என்றும், இவ்வூரில் எழுந்தருளி யுள்ள இறைவனை ஈரோடையப்பர் என்றும் கூறுவர். ஆனுல் இக் கூற்றிற்குக் கல்வெட்டிலோ பழம் பட்டை யங்களிலோ ஆதாரம் இல்லை.

பழையாற்றில் ஈசுவரன் கோவில் கொண்டுள்ள இடத்திற்குப் பட்டீச்சுரம் எனப் பெயர் வழங்குவது போன்று ஈரோட்டுத் தொண்டநாயனுர் கோயிலுக்குத் தொண்டீச்சுரம் என்று நம் முன்னேர் பெயர் வழங்கி வந்துள்ளனர். இவண் எழுந்தருளியுள்ள மூர்த்தியின் உயரம் இரண்டடி இருக்கும். ஆவுடையாரும், பீடமும் ஒன்றரையடி. அதன் மீது அரையடி உயரத்தில் இறைவன் காட்சியளிக்கிருர். இப்பரமனைப் பல காலத் தில் நம் பழம் பரம்பரையினர் பல பெயர்களால் போற்றி வந்துள்ளனர். தொண்டீச்சுர நாயனுர்- தொண்டர் நாயனுர்- தொண்டியப்பர் என்ற பெயர்கள் அப் பழம் பெயர்களாகும். இப்போது ஈரோடையப்பர், ஈர ஓடையப்பர், ஆர்த்தர கபாலீசுவரர் எனவும் அழைக்கப் பெறுகிருர். ஈரோட்டில் எழுந்தருளியுள்ள தேவியின் பெயர் வாரணியம்மை. கரூர் முத்துக்கருப் பன் புலவர் பாடிய ஐயனுரப்பன் பள்ளு எனும் நூலில்



தொண்டியப்பர் கோயில் கற்றாணில்
காணப்படும் ஆலங்காட்டுக் காளியம்மை.



வாரணியம்மை - சாந்தம் தவழும் முகம்,
கருணை பொழியும் கண்கள்

வரும் "திறமையாகிய கோபுர வாசலும்—தேவி வாரணி நாதர் தம் கோயிலும்" என்ற தொடர்கள் இவண் குறிப்பிடத் தக்கவை. இறைவியின் பெயர்கூறி, அவள் நாதர் எனக் கூறுவதால் இந்த இறைவிக்கு அதிக ஏற்றம் கொடுக்கிறார் புலவர். சாந்தம் தவழும் முகம்; அதில் கருணை பொழியும் கண்கள்; அவற்றில் தயை யைக் காணுகிறோம்; தாயன்பைப் பெறுகிறோம். நான்கடி உயரமிருக்கிறாள். நான்கு கைகளை உடை யவள்; நல்ல அழகி; இவ்வம்மையை வடமொழியில் குஜமஸ்த் குஸமஸ்தன அம்பிகை என்கின்றனர். அதன் பொருள் தர்ப்பையாலான கச்சையையணிந்த அம்பிகை என்பதாகுமாம். இந்த அம்பிகையைப் பேரூர் சாந்தலிங்கர் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் இலக்கண நிறைகடலாய், அமைதியின் திருவுருவாய், ஒழுக்க சீலராய் விளங்கும் திரு. இர. வையாபுரியார் பதிகம் பாடிப் போற்றிப் பணிந்துள்ளார்.

இக்கோயில் பன்னிரண்டாம் நூற்றாண்டில் (கி. பி. 1146-ல்) கொங்குச்சோழன் கரிகாலன் இராசராச புரம் என்ற தாராபுரத்தைத் தலைநகராகக்கொண்டு அரசாண்டபோது கட்டப்பெற்றது. அதன் பிறகு பலமுறை திருப்பணியும், குடமுழுக்கும் நடைபெற் றிருக்கின்றன. 1927-ல் நாட்டுக்கோட்டை நகரத்தார் திருப்பணி செய்துள்ளனர். அண்மையில் 2-9-1960ல் இப்பொழுதுள்ள இராசகோபுரம் புதுப்பிக்கப்பெற் றுள்ளது. ஐந்து நிலைகளையுடையது. அதன்முன் கொங்கு நாட்டிற்கே உரித்தான கருடகம்பம் நிற்கின் றது. வேறெந்த நாட்டிலும் கோயிலின்முன்பு கருட கம்பம் இல்லை. பழங்காலத்தில் கோயில் இருக்கும் இடத்தைக் குறிப்பாக அறிவதற்கு இரவில் இதன் மீது விளக்கிட்டு வந்தனர். ஊர்ப் பொதுமக்களுக்கு அக்காலத்தில் நெருப்பும், இரவில் வெளிச்சமும் கொடுத்து வந்திருக்கிறது. இக்காலத்தே திருக் கார்த்

திகையன்று தீபம் வைப்பதற்குத்தான் இக் கருடகம்பம் பயன்படுகிறது. வெளிமண்டபம் 800 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பெற்றது. "தானம்சோமான் மகன் சதுரச் சேவை" என்ற கல்வெட்டு அதைத் தெளிவுபடுத்து கிறது. பேரம்பலமும், சிற்றம்பலமும், இந்த மண்டபத் துள்ளே அமைந்துள்ளன. பேரம்பலத்தின் கற்றூணில் காணும் ஆலங்காட்டுக் காளியம்மை சமீபகாலத் திருப் பணி. இருபதாம் நூற்றுண்டின் சிற்பக் கைவண்ணத் திற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும். சிற்றம்பலத்தின்



ஆடும் பரமனின் அழகுத் திருவுருவம்—
அருகில் அம்மை சிவகாமி.

நடுவில் நட்டம் பயின்றுடும் நாதனின் அழகுத் திருவுருவம் சிறியதே. ஆயினும் சிறப்பானது. அச் சிற்பம் புலியூர்ச் சிற்றம்பலநாதனின் அளவிற் பாதி இருக்கும். ஆடலரசின் அருகில் ஆனந்தக்கூத்தை

அமைதியுடன் கண்டுகளித்து நிற்கிருள் அம்மை சிவகாமி. சுற்றுப்பிரகாரத்தில் அறுபத்துமூன்று நாயன்மார் மண்டபம் உண்டு. அறுபத்துமூவரும் சிலாரூபத்தில் உள்ளனர். ஒவ்வொருவருக்கும் குலம், நட்சத்திரம், காலம், ஊர், பெயர் ஆகிய விவரங்களைத் தனித்தனியே எழுதியிருப்பது மக்கள் அறிந்து கொள்ள ஏதுவாகின்றது. இறைவன் இறைவியுடன் விடைமீதமர்ந்து அறுபத்துமூவர்க்கும் காட்சி கொடுப்பதை மக்கள் கண்டுகளிக்க வேண்டும். இதுவே திருவிழாவின் தத்துவம். அறுபத்துமூவருக்கும் உற்சவமூர்த்தி இல்லாததால் அக்காட்சி கிட்டவில்லையே என ஏங்கிய அன்பர்கள் உற்சவமூர்த்தங்கள் செய்வதில் முனைந்துள்ளனர். எதிரில் கல்லாலின் புடையமர்ந்து நான்மறையின் உட்பொருளைச் சொல்லாமற் சொல்லிய தட்சிணுமூர்த்தியின் உருவம் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் தன்மையுடன் காட்சி தருகிறது. பஞ்ச பூததலங்களின் சித்திரங்கள் அடுத்த பிரகாரச் சுவரில் அழகுற வரையப் பெற்றுள்ளன. அவற்றின்முன்பு பஞ்ச பூத இலிங்கங்கள் இருக்கின்றன. ஜ்ுரஹர ஈசுவரருக்கும் இங்கு இடம் உண்டு. அடுத்து, முருகன் வள்ளி, தெய்வயானையுடன் காட்சி யளித்து இதயங்கவர் கள்வனுய் இவண் எழுந்தருளியுள்ளான். சண்டேசுரர் சந்நிதியை அடுத்துள்ளது கபாலதீர்த்தம். இக் கபால தீர்த்தத்தில்தான் இறைவனுக்கு வேண்டிய தண்ணீர் எடுக்கப்படுகிறது. அண்ணுந்து நோக்கி விதானத்தை வணங்கியதும் நம் பார்வையானது சுற்றுச் சுவர்க்கல்லின்மீது படுகிறது. கற்கள் பழமையானவை. இவ்வூர் உறந்தையென அழைக்கப்பட்ட போதே கட்டப்பெற்றதல்லவா? இவ்வூருக்கு உறந்தை, மறந்தை, கபாலபுரி என்ற பல பெயர்களும் உண்டு. சோழர்கள் திருப்பணி செய்து பெயர் இட்ட

தால் உறந்தை என்றும், பிரமதேவன் தன்னை மறந்து தவஞ் செய்ததால் மறந்தை என்றும், இறைவன் பிரம மந்திரத்தை உபதேசிக்கும்போது அம்மன் கவனியா திருந்த காரணத்தால் இறைவி சாபம்பெற்று அது நீங்க மயில்வடிவாய் இவ்வூரில் பூசனை புரிந்ததால் மயிலை என்றும், ஈரமான தலை ஓட்டை உடைய சிவன் (ஆர்த்தர கபாலீசுவரர்) எழுந்தருளியுள்ள காரணத் தால் (ஆர்த்தர) கபாலபுரி என்றும் இவ்வூர் பல காரணப் பெயர்களைப் பெற்றது.

இவ்வூர்த் தலபுராணத்தில் வரும் சில நிகழ்ச்சி களைச் சற்றுப் பார்ப்போமா? பிரம்மாவின் தலையைக் காளி உடைத்தபோது, நான்கு பகுதிகளாய்ச் சிதறி, நான்கு இடங்களில் விழுந்ததென்றும், ஈர ஓடு விழுந்த இடம் ஈரோடென்றும், வெள்ளை ஓடு விழுந்த இடம் வெள்ளோடு என்றும், சிறிய ஓடு விழுந்த இடம் சித்தோடென்றும் பெரிய ஓடு விழுந்த இடம் பேரோடு என்றும் பெயர் பெற்றது என்பர். இலட்சுமி காந்தன் என்ற அரசன் 1500 ஆண்டுகட்கு முன்பு அருகிருந்த சூரன்பட்டியைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டான். அவ்வரண்மனைக்குப் பால் கொண்டு வந்த இடையர்கள் நாள்தோறும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தடுக்கி விழுவது வழக்கமாய் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதன் காரணத்தை ஆராய அரசன் அவ்விடத்தை அகழ்ந்து பார்த்தபோது மூர்த்தி வெளிப்பட்டதாய்ப் புராணம் கூறும்.

தேவலோகத்துப் பெருநல்லாள், சிறுநல்லாள் என்ற மாதர்இருவர் சாபந்தீர இவண் வந்து இவ்விறை வனை வழிபாடாற்றினர். இவர்களின் பக்திச் சிறப் பைப் பாராட்டித் தேவர்கள் பூமாரி பொழிந்தனர். சரவண முனிவர் இயற்றிய சென்னிமலைத் தல புராணத்தில் புட்பகிரி மான்மியத்தில் இவ்வரலாறு

விரிவாகக் காணப்படுகிறது. இந் நிகழ்ச்சி கொங்கு மண்டல சதகத்திலும் குறிப்பிடப்பெறுகிறது.

தாண்டவன் என்ற பெயருடைய முதலியார் ஒருவர் வாழ்ந்துவந்தார். கூலிக்கு நெசவு செய்து வாழ்க்கை நடத்திய கைக்கோளர். கோயில் வழிபாடே தன் குறிக்கோளாய்க் கொண்டவர். மாலைப்போதில் வீடு திரும்பும்போது வழிபாடாற்றச் சென்ற முதலியாரிடம் சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள எடுத்த அப் பழைய தொண்டுக் கிழவடிவுடன் இறைவன் இருமுழத் துண்டு வேண்டும் என்று இரந்தார். இளகிய மனமுடைய தாண்டவன் முதலியார் அடியவர்கட்குச் செய்யும் உதவி ஆண்டவனுக்குச் செய்யும் தொண்டு என எண்ணித் தான் கூலிவேலை செய்யும் முதலாளியிடம் நெசவுக் கூலியாக ஒரு துண்டு பெற்றுக்கொடுத்தார். மறுநாட் காலை கோயிலைத் திறந்த அர்ச்சகர் பரிவட்டம் புதிதாய் இருப்பதை உணர்ந்தார். பரிவட்டத்தின் அமைப்பைக் கொண்டு இது தாண்டவ முதலியார் நெய்தது எனத்தெரிந்து அனுமதியின்றி இரவில் கோயிற் கதவைத்திறந்து தானே பரிவட்டத்தைச் சாத்தியது குற்றம் எனக்கூறி முதலியாரை ஊரார் நையப்புடைத்தனர். அடிபட்ட பின்னரே அசரீரி தோன்றி உண்மையை வெளிப்படுத்திற்று. இந்த அசரீரி முன்பே தோன்றி முதலியார் அடி படாமல் தடுத்திருக்கலாமல்லவா ?

மதுரைமா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியின் மாற்றடி பட்டும்
நின்னைத் தொண்டன் என்னக் கொண்டனன்."

எனச் சிவப்பிரகாசர் நால்வர் நான்மணிமாலையில் மாணிக்கவாசகரைத் தொண்டனாகப்பெற இறைவன் பட்ட இன்னல்களைத் தொகுத்துக் கூறுகிறார். நாமே

அடிபடும்போது நம் அடியவர்களும் அடிபட்டு நம்மடி அடையட்டுமே என விட்டிருப்பானோ? இருக்காது! பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து அருளும் பரமனுயிற்றே. தங்கம் புடம்போட்டுச் சுடச் சுடத் தானே பொலிவு அதிகம் பெறுகிறது. அது போன்று அடியவர்களின் மாசு நீங்க மறக்கருணை புரிகிருன்போலும்! இந்நிகழ்ச்சியை திரு. செ. இராசுப் புலவர்,

"தாண்டவன் எனும் பெயரான்
தனி நாதனை வணங்கிவந்தான்
ஆண்டவன் ஆட்கொண்டார் இந்த
அன்பினை யார் பெறுவார்
நீண்ட நாள் வாழகில்லீர்
நெடுமாலொடு அயன்வணங்கும்
ஊன் தரும் உறந்தை நகர்
திருத் தொண்டைச்சுரத் தானே"

என ஈரோட்டுப் பதிகத்தில் குறிப்பிடுகிருர். இன்றும் முதலியார் சமூகத்தினர் இந்த இறைவன்மீது இணை யற்ற பக்தி செலுத்துகின்றனர்.

தண்ணுர் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டில் பெண்ணுளும் பாகன் தன் வலப்புறம் இறைவியை வைத்து அகத்தியருக்குத் திருமணக்கோலம் காட்டிய தாய்ப் புராணங்கள் கூறும். அதற்கேற்பப் பாண்டி நாட்டில் பல தலங்களில் அம்மையின் சந்நிதி இறைவ னுக்கு வலப்புறத்தில் இருப்பதை இன்றும் காணலாம். ஈரோட்டிலும் அகத்தியருக்குத் திருமணக் காட்சி நல்கியதாக ஐதீகம். ஆதலால் இவ்வூர் வாரணி யம்மையும் வலப்புறம் அமர்ந்துள்ளாள். கல்யாணப் பெண் கன்னியாகவே காட்சியளிக்கிருள்; பெண்ணை இடப்பாகத்தே கொண்ட பெருமான் அவளுக்கு வலப் பாகம் கொடுத்த இடங்களில் அன்னையின் அருளாட்சி

மேலோங்கி இருப்பதைக் காணுகிறோம். மதுரையில் மீனாட்சி ஆட்சி. திருநெல்வேலியில் காந்திமதி ஆட்சி. அந்தந்த ஊர்களிலும் பெண்களின் தீரமே மேலோங்கியிருக்கும். இந்த ஈரோட்டுப் பெண்களும் பல துறைகளில் ஆண்களைக் காட்டிலும் சிறப்புற்றுத் திகழ்கின்றனர். புலர்வதன்முன் கோயிலை அலகிடுதல், மெழுக்கிடுதல் ஆகியவற்றுடன் எல்லா வெள்ளிக் கிழமைகளிலும் இப்பெண்களே இறைவனின் பல்லக் கைப் பள்ளியறைக்குச் சுமந்து செல்கின்றனர். காரைக்கால் அம்மையார், மங்கையர்க்கரசியார் போன்ற பெண்ணடியார்கள் திருவிழாக்களையும் பிட்டுத் திருவிழாவையும் இம்மாதர்கள் தங்கள் சிறுவாட்டுத் திரவியம் (வீட்டுச் செலவில் சிறிது, சிறிதாய்ச் சேமித்த பணம்) கொண்டுசெய்து வருகிறார்கள். தினந்தோறும் காலை நேரம் அதிகமான பெண் பக்தர்கள் பூவைக்கொண்டு அரன் பொன்னடி தொழு கின்றனர். மாலை கட்டும் மக்களில் பலர் மகளிரே. ஆண்டுதோறும் சிவநேசச் செல்வியர் மாநாடும் நடத்துகின்றனர். வரவேற்பு, தலைமை, பேச்சு, நன்றி, வாழ்த்து, உபசரணை அத்தனையும் அவர்களே! நல்லவேளை ! பெண்கள் மாத்திரம்தான் கேட்க வேண்டுமென்று தடைவிதிக்கவில்லை ! ஆண்டவன் பெருமையை ஆண்களும் கேட்டு உய்யட்டும் என்ற பெருநோக்கால் அனுமதித்துள்ளனர் போலும்! இவற்றையெல்லாம் எண்ணும்போது இறைவி வாரணி யம்மை இடப்புறமில்லாது வலப்புறம் அமர்ந்ததனால் மெல்லியலார்கட்கு வந்த வல்லமை இது என்பதை நன்கறிய முடிகிறதல்லவா !

ஈரோட்டில் அருள்நெறித் திருக்கூட்டம் ஆற்றும் தொண்டு குறிப்பிடத்தக்கது. அருள்நெறித் திருப்பணி மன்றம், குழந்தை விடுதி, பயிற்சிப்பள்ளி, ஆரம்பப் பள்ளி ஆகிய நிலையங்களை நடத்தி வருகிறது. இத்

திருக்கூட்டம் வாரவழிபாடு, கூட்டுவழிபாடு, அறுபத்து மூவர் குருபூசை, கிருத்திகை வழிபாடு ஆகியவற்றை யும் இக்கோயிலில் தவருதுசெய்து வருகிறது. மார்கழி மாதத்தில் கல்வி நிலைய மாணவர்கள் அதிகாலையில் நடைபெறும் பூசனையில் ஆர்வத்துடன் கலந்துகொள் கின்றனர். திருமுறை விழாவும், திருவாசக விழாவும், சைவமாதர் மாநாடும் இருபத்தைந்து ஆண்டுகளாய் இந்த ஈரோட்டில் நடைபெற்று வருகின்றன.

தொண்டீச்சுரருக்கு சர்க்கார் மான்யம் வருடத் திற்கு ஈரோடு கிஸ்தியிலிருந்து ரூ. 1326ம் ஈரோட்டுப் பீளமேடு கிஸ்தியிலிருந்து ரூ. 700ம் வருமானம் வரு கிறது. இதை வைத்துக்கொண்டு தினப்படி இரு வேளை பூசனை புரிகின்றனர். உச்சிக்காலப் பூசை திரு அர்த்தநாரி முதலியாராலும் அர்த்தசாமப் பூசை திரு. இராமசாமி செட்டியாராலும் நடைபெற்று வரு கின்றன. ஆக நான்கு காலங்களில் பூசை நடந்து வருகிறது. பூசனை புரிவோர் பல நூற்றாண்டுகட்கு முந்திய பழைமையான பரம்பரையைச் சார்ந்த ஆலபாயன் கோத்திரத்தைச் சார்ந்த குருக்களாவர். இவர்கள் செய்யும் பூசனைமுறை காமிக ஆகம பூசை விதியைச் சார்ந்ததாகும். இருப்பினும், சிவப்பிரகாச ரின் "வேதமோதின் விழிநீர் பெருக்கி நெஞ்சநெக் குருகி நிற்பவர் காண்கிலேம்! திருவாசகமிங்கொரு காலோதிற் கருங்கல் மனமுங் கரைந்துகக் கண்கள் தொடுமணற்கேணியிற் சுரந்து நீர்பாய மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி யன்பராகுந ரன்றி மன்பதை யுலகின் மற்றைய ரிலரே" என்ற வாக்கிற்கு ஒப்பக் கனீரென்ற வெண்கலத் தொண்டையால் தமிழ் மறை ஓதிக் குருக்கள் ஆவாகனம் செய்கிருர். பூசனை புரிகிருர். அர்ச்சனை பண்ணுகிருர். இதயம் இளகு கிறது. எண்ணம் ஒருமிக்கிறது. கண்களில் நீர் பாய் கிறது. மெய்ம்மயிர் சிலிர்க்கிறது. இறைவனின் அருட்டன்மை நம்மை ஆட்கொள்கிறது.

ஈரோட்டு இறைவனைச் சூரியன் மாசி மாதம் 25, 26, 27-ந் தேதிகளில் தன் ஒளிக்கிரணங்களால் தொட்டுப் பூசனைபுரிகிருன். வைகாசி விசாகத்தில் இவ்விறைவனுக்குப் பெருவிழா. பத்து நாள் விழா எடுக்கின்றனர். அச்சு முறிந்ததால் தேர் ஓடவில்லை. கமலபுஷ்கர்ணி என்ற தீர்த்தக் குளம் தூர்ந்ததால் தெப்போற்சவம் நடக்கவில்லை. மூடிய தெப்பக்குளத்தின்மேல் ஒரு கல்யாண—வசந்த—மண்டபம் கட்ட முயற்சிகள் நடைபெறுகின்றன.

இத்தலத்தின் விருட்சம் வன்னி மரம். வெளிப் பிராகாரத்தில் உள்ளது. வன்னிமரத்தின்கீழ்ப் பழுது பட்ட பழைய வாரணியம்மை நிற்கிருள். உருவம்



திருத்தொண்டீசுவரர் கோவில் தலவிருட்சம்

சிதைந்தாலும் அதிலுள்ள அழகு சிதையவில்லை. சென்னை தொல் பொருள் ஆராய்ச்சி நிலையத்தின் அதிகாரி இதை எடுத்துச் சென்று சென்னைப் பழம் பொருள் பாதுகாப்பு நிலையத்துக்கு உடமையாக்க முயன்றார். முயற்சி கைகூடவில்லை. காரணம் இவ்வூர் மக்கள் பழமையைப் போற்றிக் காக்கும் பண்பாளர்கள். அவர்கள் வரலாற்றுச் சங்கம் அமைத்து ஈரோட்டைப் பற்றிய வரலாற்றை ஆராய்ந்து வருகின்றனர். கொங்குநாட்டுக் கலைக்கூடம் ஒன்றை ஈரோட்டில் அமைக்கக் கங்கணம் கட்டிக்கொண்டுள்ளனர். அரசலூர், கொளாநல்லி போன்ற சுற்று வட்டாரத்தில் பல பகுதிகளில் கவனிப்பாரற்றுக் கிடக்கும் எழுத்துப்பாறைகள், நடுகல் சிலைகள், பாடல் சாசனங்கள் எழுத்துத் தூண்கள் ஆகியவற்றை எடுத்து வந்து தஞ்சாவூர் சரசுவதி மகால் போன்று ஈரோட்டில் ஏற்படுத்த வேண்டுமென்பது அவர்களின் குறிக்கோள்.

ஈரோட்டில் கிடைக்கும் கல்வெட்டுக்கள் இருபது. அரசினர் எடுத்தது ஆறு. இவ்வூர்த் தமிழாசிரியர் புலவர் செ. இராசு எடுத்திருப்பது பதினொன்கு. அக் கல்வெட்டுக்களால் காணக்கிடப்பவை; கி. பி. 1340ல் உண்டான கல்வெட்டு ஹொய்சால மன்னன் மூன்றும் வீரவல்லாளதேவன் பூந்துறை நாட்டான் ஈரோட்டுத் திருத்தொண்டீசுரனுக்குத் திண்டல் இறையிலியாக அர்ச்சனை திருநாள் திருப்பணிக்காக மான்யம் கொடுத்த செய்தியையும் பூந்துறை நாட்டுச் சபை இங்குக் கூடிய செய்தியையும் கூறும். பதின்மூன்றும் நூற்றுண்டு ரவிகோதைக் காலத்துக் கல்வெட்டு பூவானிய நாட்டு ஆவணிப்பேரூரில் வெள்ளாளன் பிள்ளர்களில் விக்கிரம சோமையரையன் தன் மகன் விக்கன் சோமன் மாமணியாழ்வான் பற்றியது. கி. பி. 1579ம் ஆண்டு வெங்கடபதிராயன் வீரப்ப நாயக்கையன் நாயனூர் தொண்ட நாயனூர் கோவிலுக்-

கும் பள்ளிகொண்டருளிய பெருமாளுக்கும் சரிபாதி செலவிற்கு விட்ட இறையிலி பற்றிய கல்வெட்டொன்றும் உண்டு.

கி. பி. 1502-ல் வீரராயதேவக்க மாரக்க நாயக்கன் (அரசியல் அதிகாரி) 256 குழி கொண்ட இருமாநிலம் பூசைக்குத் தாரைமாநகர் பக்க முள்ளதைத் தாரை வார்த்துக் கொடுத்ததைக் குறிப்பிடுகிறது. இவை தவிர குன்றத்தூர், திருச்செங்கோடு, வெள்ளோடு கல்வெட்டுக்களில் ஈரோடு பற்றிய செய்திகள் காணக் கிடக்கின்றன.

ஈரோட்டில் இன்னொரு ஈசன் கோவில் ஊரின் மத்தியில் பழைய வைத்தியசாலைக்குப் பக்கத்தில் உள்ளது. போகும் பாதையைக்கூட வியாபாரக் கிடங்குகளாக்கிக் கோயிலை மறைத்துள்ளனர். மாலி, சுமாலி, மகிமாலி என்ற அசுரர்களால் (இராவணனின் முன்னோர்) நிறுவப்பட்டதென்று தலபுராணம் கூறும். இறைவன் பெயர் மகிமலீசுரர். இறைவி மங்களாம்பிகை. இராட்சசப் பிரதிஷ்டையாகையால் ஆறடி விட்டமுள்ள ஆவுடையாரில் மூன்றடி உயரமான லிங்கம் பெரிய அளவில் காணப்படுகிறது. துவார பாலகர்கள் பல்லவர்கள் காலத்தவை. இக்கோயில் கோபுர அமைப்புக்களும் பல்லவர்கள் காலத்திய அமைப்பே. இக்கோயிலில் ஒரு தூணில் சுந்தரர் தாடியுடன் பரவை சங்கிலியாருடன் காட்சியளிக்கிறார். சேரமான் கவரி வீசுகிறார். பக்கத்தே மெய்க்காவலன் வேலேந்தி நிற்கிறான். இக்கோயிலுக்குப் புலவர் திரு. தெய்வசிகாமணிக் கவுண்டவர் இயற்றிய பதிகம் ஒன்று உண்டு. அதில் ஒரு பாட்டு,

“மாலி என்பான் முதலாய மதித்தபெரும்
குலவரக்கர் மணியே நின்றன்
காலியினம் புரக்கின்ற கருமுகில்
வண்ணனும் காணுக்கம லத்தானை

மாலிமயம் தனில் பூசைசெய்து
வருவழிப்பூசை மகிழ்ந்து செய்தார்
சாலிநிறை ஈரோட்டின் மகிமாலி
ஈசன் எனச்சார்ந்தாய் நாமம்''

இனி இதை முடிக்குமுன்பாக இலக்கியத்தில் ஈரோட்டின் இடம்பற்றி சற்றுராய்வோமாக. இவ்வூர்த் தலபுராணம் ஏட்டுப் பிரதியாகவே இருக்கிறது. அச்சு வாகனம் ஏறவில்லை. கரூர் முத்துக்கருப்பன் புலவர் எழுதிச் சஞ்சீவி நடித்த ஈரோட்டு ஐயனாரப்பன் பள்ளும், வாலசுப்பக் கவிராயர் இயற்றிய கொங்குமண்டல சதகமும், கம்பநாதசுவாமி எழுதிய கொங்குமண்டல சதகமும் ஓலைச்சுவடியாகவே இன்னும் இருக்கின்றன. கார்மேகக்கவிஞர் பாடி அச்சேறியுள்ள கொங்குமண்டல சதகத்தில் ஈரோடு பற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. திரு. தி. அ. முத்துசாமிக்கோனார் 1917ல் எழுதிய கொங்கு என்ற நூலிலும் ஈரோட்டு வரலாறு காணப்படுகிறது. ஓலைச்சுவடிகளாய் உள்ள நூல்களைப் போற்றிப் பாதுகாத்து வருபவர் பழம்பெரும் புலவர் எழுமாத்தூர் திரு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் என்பவர். கொடைத்திறம் படைத்த மனமுடையோர் அவற்றைப் பெற்றுக் கொங்குநாட்டு மக்கள் பலரும் படித்துப் பயன்பெற அச்சுப்பொறியில் ஏற்றட்டும். அந் நூல்களைத் தமிழ்த்தாய்க்கு அணியாகச் சூட்டட்டும். அந்நாள் எந்நாளோ ?

“ ஐவழிந்து கண்மறைந்து செவிதூர்ந்து
உணர்வழிந்து ஆக்கைமாயும்
செவ்வியதில் பொருள்போகம் மனை மக்கள்
என உணர்வு செல்லா வண்ணம்
எவ்வுயிர்க்கும் தாயான வாரணி நீ
தொண்டசருடனுய் வந்து

உய்வகையான் எனதுநினை வெல்லாம்நின்
திருவடியிலுய்த்துக் காப்பாய்
(ஐ-கோழை, கபம்)

## வாழ்த்து

வாரணி அம்மையோடு வாழிதிருத் தொண்டசர்
சீரணி அன்பர்பெரும் சீர்வாழி தாரணியில்
வாழிஈ ரோடு நகர்வாழி வாழிசிவ நன்னெறிதான்
ஊழிதோ றூழி யுயர்ந்து

(பேரூர் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் இர. வையா புரியார் பாடிய வாரணியம்மை பதிகத்திலுள்ளவை.)





ஈரோடு பள்ளிகொண்டருளும் பெருமாள் கோயில் விதானம்.



பள்ளிகொண்டருளிய பெருமாள் கோயில்
கமலவல்லித் தாயார் சந்நிதி.

## 2. ஈரோடு கஸ்தூரி ரங்கப் பெருமாள்

கொங்கு நாடு இருபத்து நான்கு பிரிவுகளையுடையது. அவற்றுள் ஒன்று பூந்துறை நாடு. இப்பூந்துறை நாட்டைப்பற்றி ஐயனாரப்பன் பள்ளு கூறும் பாட்டு இதோ.

*" காடெல்லாம் சிறுநெல் விளையும்-கதிரவன்வந்து கமலங்கள் சேரும்*
*நாடெல்லாம் வெண் தரளங் கொழிக்கும்-நல்ல அல்லியில் வெண்மதி சேரும்*
*வீடெல்லாம் திருவின் விளையாடும் வேதகாவிய புராணங்கள் ஓதும்*
*பாடெல்லாம் பைந்தமிழதை ஆக்கும் பன்னு பூந்துறை நாடெங்கள் நாடே "*

இது கம்பன் பாட்டான "ஊரெல்லாம் பட்டி தொட்டி" என்பதற்குப் பதிலடி கொடுப்பது போன்று அமைந்துள்ளது அல்லவா? இப்பூந்துறை நாட்டு எல்லையை இன்னொரு பாட்டு நமக்கு விளக்குகிறது:

**" உன்னிய தெற்கில் காஞ்சி**
**உயர் நதி வடக்குவானி**
**பொன்னிமா நதியே கீழ்பால்**
**புதன்றிடும் மேற்குத் திக்கில்**
**சென்னிமா மலையே யாகும்**
**சிறந்த முப்பத்திரண்டூர்**
**மின்னும் மேல் கரையாய்க்**
**கொண்டு விளங்கு பூந்துறை நன்னாடே**

தனிப்பாடல் ஒன்றால் அந்த முப்பத்திரண்டு ஊர்களையும் அறிகிறோம். இதோ அப்பாட்டு:

*பூந்துறைசை வெள்ளோடு நசியனூர் எழுமாதை*
*புகழ்சேர் பிடாரி நகரம் பூங்கமழும் ஈங்கியூர்*
*பெருந்துறை சாத்தனூர் பொன்காள மங்கலம் அனம்*
*ஆய்ந்த தமிழ்கூறும் குழாநிலை கிழாம்பாடி*
*ஆண்மைகொள் மொடக்குறிச்சி அயமாநகர்*
*பழமங்கை குலவிளக்குக் காகம் அறச்சலூர்*
*விளக்கேத்தியும் வேந்தர் மகிழ் கஞ்சநகர்*
*சத்தியமங்கை மதுரம் மிக்க சேலூர் மங்கலம்*
*வீரநகர் ஈரோடு பேரோடு சித்தோடு*
*மிக்கான திண்டற் புதூர் சேர்ந்து மழை*
*பெய்திடும் இலவமலை திருவாச்சி திகழ்*
*பணைசை ஒடாநிலை தென்முருங்கைத்*
*தொழுவு முப்பத்திரண்டூர் சிறந்த பூந்துறைசை நாடே.*

வீரபாண்டியன் காலத்தில் 1285ல் வெட்டப்பட்ட கல்வெட்டில் ஈரோடான பூவேந்த சோழச் சதுர்வேதி மங்கலம் என்று இந்தப் பேரோடு குறிப்பிடப்படுகிறது. கொங்குநாட்டுக் கல்வெட்டுக்களில் காணப்படும் சேலம் ராசாச்சரிய சதுர்வேதி மங்கலம், பரன்சேர் கள்ளிச் சதுர்வேதி மங்கலம், உத்தம சோழச் சதுர்வேதி மங்கலம், கஞ்சப்பள்ளி சதுர்வேதி மங்கலம், குலத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலம் போன்ற பதினைந்து சதுர்வேத மங்கலங்களில் ஈரோடும் ஒன்றாகும். இதைச் சுற்றிலும் சந்திரமதி முதலியார் மடம் கி. பி. 1628ல் ஐந்தாவது ஆண்டு திருமலை நாயக்கன் அப்பாமுத்து வீரப்பன் ஞாபகமாகக் கட்டப்பெற்றது. சத்திரமும், குளமும் உண்டு. முத்து வீரப்பன் நாயக்கன் சத்திரம் இப்பொழுது வீரப்பன் சத்திரம் என மருவி வழங்கப்படுகிறது.

ஈரோட்டில் காலத்தால் மூத்த கல்வெட்டுக்கள் பல காணக்கிடக்கின்றன. கி. பி. 921ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றைப் பெருமாள் கோவிலில் காண்கிறோம். அதன்மூலம் மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மரான முதலாம் பராந்தக சோழன் காலத்தில் கட்டப்பெற்றது இக்கோயில் என்பதை அறிகிறோம். கல்வெட்டுப்படி இப்பெருமாள் வெண்ணெய்க்கூத்த நாயனார் என்றும், பள்ளிகொண்டருளும் பெருமாள் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறார். இக்கோயில் தலபுராணத்தைப் பார்ப்போமா? துருவாசமுனிவர் பாற்கடலில் பள்ளிகொண்ட பெருமாளைக் காணவரும்போது மது, கயிடவர் என்ற வாயில் காவலர்கள் அவரைத் தடுத்து நிறுத்தினர். பெருமாள்சேவைக்குக் குந்தகம் விளைத்ததால் முனிவர் கோபித்து அவர்களின் தலை வெடிக்குமாறு சாபமிட்டனர். வெடித்த தலைகள் வெள்ளோடாயும், சித்தோடாயும், பேரோடாயும் ஈரோடாயும் சிதறி விழுந்தன. விழுந்த இடங்களுக்கு அப்பெயர்கள் உண்டாயினதெனப் புராணம் கூறும்.

நாம் பெருமாளைச் சேவிக்கப் புறப்படலாமா? கோவில் நுழைவாயிலில் இராசகோபுரமில்லை; முகப்பில் திருமாலின் பள்ளிகொண்ட கோலத்தைப் பதுமைகளில் செய்து வைத்துள்ளனர். விண்ணகரத்தின் உள்ளே செல்லுமுன் ஒரு சுற்றுவலம் வரலாம். வெளிப்பிரகாரத்தின் ஆரம்பத்தில் நம்கண்ணிற்படுவது குத்துக்கல் ஒன்று. அதில் ஈ. வேங்கடாசல நாயக்கர் பெண்ஜாதி சின்னத்தாயம்மாள் (திரு.ஈ. வே. ராமசாமி நாயக்கரின் தாயார்) தன் சிறுவாட்டுத் திரவியத்தால் (வீட்டுச் செலவில் மிச்சம் பிடித்துச் சேமிக்கும் பணம்) கடப்பைக்கல் பாவிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அடுத்துள்ள திருவேங்கடமுடையான் சந்நிதியை வணங்குகிறோம். நிலைப்படியில் 'தயாகு சாத்தன் சேவித்த நினைவு'' எனப் பொறிக்கப்பட்டுள்ளது.



பெருமாள் பள்ளிகொண்ட கோலத்தையும் பத்து அவதாரங்களையும் பதுமைகளிற் காணலாம்.

தாயார் சந்நிதி பெருமாள்சந்நிதிக்குப் பின்புறம் அமைந்துள்ளது. இங்கே எழுந்தருளியுள்ள தாயாரின் திருநாமம் கமலவல்லித் தாயார். மூலவரும் உற்சவரும் அருகருகே எழுந்தருளியுள்ளனர். சதுர்ப்புஜம்; இருந்த கோலம்; நல்ல தோற்றம். சுற்றிலும் அமைதி குடிகொண்டிருப்பதால் நம் மனம் அம்மையிடம் லயிக்கிறது, அமைதியுறுகிறது. விடைபெற்றுச் சுற்றி வரும்போது விஸ்வக்சேனரையும், திருப்பாதங்களையும் கண்டு வணங்குகிறோம். ஆழ்வார்கள் எழுந்தருளிய மண்டபம் அருகிலுள்ளது. ஆஞ்சநேயர் சந்நிதியும் அடுத்துள்ளது. சுமார் நாலடி உயரமுள்ள ஆஞ்சநேயர் நல்ல குங்கிலியத்தால் அழகு செய்யப்பெற்றுள்ளார்.

ஆங்காங்கே கொண்டமல்லி அங்கய்ய நாயக்கர் குமாரர்சின்ன முராரி நாயக்கர் நூற்றைம்பது ஆண்டு கட்குமுன்பு உபயமாய்ச் செய்த திருப்பணியையும் லக்காபுரம் முத்துக்குமரக் கவுண்டர் உபயமாய்ச் செய்த முன்மண்டபத் திருப்பணியையும் காணலாம். கருவறையில் பள்ளிகொண்டு அருளும் பெருமாளைக் காணுமுன் வெளியே கருடாழ்வாரையும் உள்ளே ஆண்டாளையும் கண்டு வணங்கி உட்செல்லலாம். மூலத்தானத்தைச் சுற்றி உள்ளே உள்ள பிரகாரத்தில் வலம் வரும்போது கருவறைப் புறச் சுவர்களிற் பல கல்வெட்டுக்கள் நம் கண்களிற் படுகின்றன. படிப்பதற்கு எளியன. பார்த்த மாத்திரத்தில் புரிவன. "இராச கேசரி திரிபுவன சக்ரவர்த்தி வீரபாண்டிய தேவர்க்குப் பள்ளிகொண்டருளிய பெருமாள் கரிவரதராஜப் பெருமாள்..." (தொடர்ச்சி கீழே உள்ளது. மண்மேடிட்டிருப்பதால் காணப்படுவதில்லை) பக்கத்திலுள்ள மற்றொரு கல்வெட்டில் பூந்துறை நாட்டு முப்பத்திரண்டு ஊர்ப் பெயர்களும் காணப்படுகின்றன.

அர்த்த மண்டபத்துத்துச் சுவரில் புன்னைவனக் கிருஷ்ணன் மூன்று பசுக்களுடனும் ஒரு இடையனுடனும் நிற்பதைக் காணலாம். துவாரபாலகர்கள் வெளியே இல்லை. ஒருவேளை துருவாசர் சபித்தது போன்று சேவிக்கவரும் பக்தர்களில் யாராவது இனியும் சபித்துவிடக் கூடாதே என்றெண்ணிப் பெருமாளின் திருவடிகட்குப் பக்கத்தில் உள்ளனர் போலும். மூலவர் பள்ளிகொண்ட நிலை. "இருந்தானை, நின்றானைக் கிடந்தானை என் மனத்துள் வைத்தேனே" என்ற பாசுரத்தில் கண்டதுபோன்று இவ்வூரில் கிடந்த கோலம். பள்ளிகொண்ட பெருமாளுக்கு இன்று வழங்கும் பெயர் கஸ்தூரி ரங்கநாதர். அரங்கத்து இன்னமுதர் போன்றவர் இவரும். குழல் அழகர், வாயழகர், கண் அழகர், கொப்பூழ் அழகர். இவ் அழகர் சுமார் 14 அடி இருப்பார். ஆதிசேடன்மீது அறிதுயில் கொள்ளும் பெருமாளின் திருவடிகளில் ஜய, விஜய என்ற வாயிற் காப்பாளர்கள் மெய்க்காப்பாளர்களாக உள்ளனர். அவர்கள் உயரம் சுமார் ஆறடி. பாதத்தின் பக்கத்தே பூதேவியும், சிரசின் அருகே ஸ்ரீதேவியும் உள்ளனர். தலைமாட்டில் துருவாசர் உள்ளார். இடது கை அபயப் பிரதானமாக உள்ளது. அதன்மீது நான்முகன் (பிரமன்) உள்ளார். பெருமாளின் வலது கையில் கதாயுதம் உள்ளது. இப்பெருமாள் சுதையாலானவர். திருமஞ்சனமில்லை. ஆனிமாதந்தோறும் தைலக்காப்புச் சாத்துகின்றனர். திருமஞ்சனமெல்லாம் உற்சவர் கலியுக வரதராசப் பெருமாளுக்குத்தான். இக்கலியுக வரதன் மழை பொழியச் செய்து மக்களைக் காக்கும் மாண்புடையவர்.

" கலியுக வரதரே மழைதாராய் எங்கள்
கமல வல்லித் தாயே மழை தாராய்"

என்று பள்ளர்கள் பாடி ஆடி மழை வேண்டிப் பெற்றதாக ஈரோடு ஐயனாரப்பன் பள்ளு கூறும்.

நாடு செழிக்க, வளம் கொழிக்க நல்ல மழைபெய்யட்டும் என நாமும் வேண்டித் திரும்பும்போது அர்த்த மண்டபம் நிலைப் படிக்கட்டில் கல்வெட்டொன்று கண்ணிற் படுகின்றது. சுடுகாட்டுப் பாட்டம் (சுடு காட்டு வரி), மணவரி ஆண் தலை அரைக்காற் பொன் பெண் தலை அரைக்காற் பொன் இறையிலியாக வெண்ணெய்க் கூத்த நாயனுருக்கு எழுகரை திருவாய்ப்பாடி நாட்டவரும் கொடுக்க வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்போது யார் அவ்வாறு கொடுத்து வருகின்றனர்?

தில்லைக்கூத்தனும் தில்லைக் கோவிந்தராசப் பெருமாளும் சிதம்பரத்தில் அடுத்தடுத்தே இருந்து அன்பர்கட்குக் காட்சி அளிப்பது போன்று ஈரோட்டில் ஈசுவரனும் பெருமாளும் அடுத்தடுத்தே கோயில் கொண்டு அருள்பாலிக்கின்றனர். கி. பி. 1579ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று வீர வேங்கடபதிராயன் வீரப்ப நாயக்கய்யன், நாயனர் தொண்டர் நாயனர் கோயிலுக்கும், பள்ளி கொண்டருளிய பெருமாளுக்கும் சரிபாதி செலவு செய்ய இறையிலி கொடுத்ததாய்க் கூறும். சிவன் கோவிற் பிரம்மோற்சவத்தையொட்டி வைகாசி விசாகத்தில் இப்பெருமாளுக்கும் பெருவிழா - தேர்த் திருவிழா - நடைபெறுகிறது.

*"ஒன்றும் தெரியாத ஊமர்காள்! தென்னரங்கர்*
*இன்று திருத்தேரில் ஏறினர் - கின்று*
*வடம் பிடிக்க வாருங்கள் வைகுந்த நாட்டில்*
*இடம் பிடிக்க வேண்டும் எனின்"*

என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் தேரை இழுக்காத சோம்பேறிகளைப் பார்த்துப் பாடிக் கூவியழைத்தது போன்றழைக்க வேண்டாம். இவ்வூர் மக்கள் "எய்ப்பு என்னை வந்து நலியும்போது அங்கு ஏதும் நான் உன்னை நினைக்கமாட்டேன் அப்போதைக்

கிப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத்து அரவணைப் பள்ளியானே'' என்ற பக்த மணிகளின் பாரம்பரியத்தினர் அல்லவா! ஆகையால் தேர்த் திருவிழா வெகு சிறப்பாக நடைபெறுகிறது. இரு கோயில்களையும் ஒரே அறநிலையக் குழு கண்காணித்து வருகின்றது.

"மறம் திகழும் மனம் ஒழித்து, வஞ்சம் மாற்றி,
ஐம்புலன்கள் அடக்கி இடர்ப் பாரந் துன்பம்
துறந்து, இருமுப் பொழுதுஏத்தி ஏல்லை இல்லாத்
தொன் னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான
அறம் திகழும் மனத்தவர்தம் கதியைப் பொன்னி
அணி அரங்கத்து அரவணையுள் பள்ளி கொள்ளும்
நிறம்திகழும் மாயோனைக்கண்டு என் கண்கள்
நீர்மல்க என்று கொலோ நிற்கும் நாளே''

எனக் கொல்லி நகரத்துக் குலசேகராழ்வாரான மலைநாட்டரசர் அரங்கத்து அம்மானை மனமுருகிப் பாடுகிறார். இன்று நாம் இக்கஸ்தூரி ரங்கனைக் கண்டு நம் கண்களில் நீர்மல்க நிற்கின்றோம்! "அணி அரங்கத்து அரவணையில் பள்ளி கொள்ளும் நிறந் திகழும் மாயோனை'' இந்த ஈரோட்டிலேயே கண்டு வணங்கிக் களித்துக் கண்கள் பனிப்ப நிற்கிறோம்.

"உணர்வார் ஆர் உன் பெருமை ஊழிதோறு ஊழி
உணர்வார் ஆர் உன் உருவம் தன்னை - உணர்வார் ஆர்
விண்ணகத்தாய்; மண்ணகத்தாய் வேங்கடத்தாய்! நால்வேதப்
பண்ணகத்தாய் நீகிடந்த பால்

என்ற பொய்கையார் வாக்கை நம்வாய் முணு முணுக்கிறது.



பவாநி ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி



ஆற்றங்கரையிலிருந்து பவாநி ஆலயத்துள் நுழையும் வழி

# திருநணா (பவாநி)

ஆங்கிலேயர்கள் பாரதத்தை ஆட்சிபுரிந்த காலம். சுமார் நூருண்டுகளுக்கு முன்பு கோவை மாவட்டத் தண்டல் நாயகமாய் (ஜில்லாக் கலெக்டர்) இருந்தவர் ஒரு வெள்ளையர். பெயர் காரோ (Mr. W. Garo). வரி வசூலிப்பதற்காகவும், நேரடியாய் நிர்வாகத்தைக் காண்பதற்காகவும் பல ஊர் செல்வது அவர் வழக்கம். 1868ல் ஒரு நாள் பவாநி வந்தார். அமாவாசைக் கடுத்து வந்த இரவாகையால் காரிருள் வானைக் கவ்விக் கொண்டிருந்தது. மழை மேகமும் மூட்டமிட்டிருந்த தால் நட்சத்திர ஒளியும் இல்லை. ஆய்வாளர் விடுதி யிற்ருன் ஓய்வெடுப்பது அவர் வழக்கம். அன்றும் அவ் வாறே தங்கினுர். துரை துயில்வதற்குச் சென்று விட்டதைச் சேவகன் அறிவித்ததும் ஏவலாளர் அவ ரவர் இருப்பிடத்திற்கு ஏகினர். சேவகனும் படுக்கைக் குச்சென்று விட்டான். நடுநிசி. மின்னலுடன் நல்ல இடி. ஒரு சின்னஞ் சிறு பெண் குழந்தை ஓடோடி வந்து படுத்துறங்கிய காரோவை எழுப்பிற்று. எழுந்த காரோவின் கைகளைப் பிடித்து வெளியே வெகு வேகமாக இழுத்து வந்தது. மறுநிமிடம் இடியின் இரைச்சலுடன் ஒரு பேரிரைச்சல் காதைச் செவிடுபடுத்தியது. கலெக்டர் காரோ தங்கியிருந்த கட்டிடத்தின் கூரை கீழே குடைசாய்ந்தது. மயிரிழை யில் உயிர் தப்பிய காரோவால் நடப்பது கனவா நனவா என்று கண்டுகொள்ள முடியவில்லை. திகைப்

புற்றார். திரும்பிப் பார்த்தார். தன்னை எழுப்பிய சின்னஞ்சிறு பெண் குழந்தை மயில்போன்று வண்ணச் சீரடி எடுத்துவைத்து, அன்ன நடை பயின்று, ஒயிலாகப் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்து அன்புடன் கூப்பிட்டார். செவிசாய்க்கவில்லை. திரும்பவில்லை. தொடர்ந்து நடக்கிறாள். நன்றிசெலுத்துவதில் எடுத்துக்காட்டாய் விளங்கும் ஆங்கிலேயர் பரம்பரையில் வந்தவரல்லவா அவர். உயிர் காத்த அவ்வுத்தமப் பெண் பிள்ளைக்கு நன்றிக்கடன்செலுத்தப் பின்தொடர்ந்து நடக்கிறார்.

அவளை எட்டிப் பிடிப்பதற்குள் அச்சிறு குழந்தை பக்கத்தேயிருந்த கோயிலில் புகுந்து, அம்பாள் சந்நிதியில் நுழைந்து உள்ளே ஓடி மறைந்துவிட்டது. தேடி வந்த ஆங்கிலேயர் திரும்ப நேரிட்டது. எல்லா உலகையும் இரட்சித்தருளும் அன்னை வேதநாயகிதான் குழந்தை உருவில் வந்து தன் இன்னுயிரைக் காத்தாள் என்பதை உணர்ந்தார் காரோ. பிற மதத்தினர் கோயிலின் உட்புக என்றும் அனுமதிக்கப்படுவதில்லை என்பதை அவர் அறிந்தவராகையால் வெளியே தூரத்தில் நின்றுவது தன் நன்றிக் கடனைச் செலுத்த எண்ணினார். வெளி மதிலில் துவாரங்களிட்டு அதன் மூலம் அம்மையின் கர்ப்பக் கிரகத்தைத் தன் கண்களால் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்து நின்றார். அந்த அர்த்தராத்திரியில் அகிலாண்ட ஈசுவரி பள்ளியறையைவிட்டு வந்து உயிர் காத்ததன் நினைவை என்றும் பசுமையாக்க எண்ணிய காரோ பள்ளியறையில் வைப்பதற்குத் தந்தத்தால் ஊஞ்சல் ஒன்று செய்து காணிக்கையாக்கினார். இன்றும் அவ்வூஞ்சல் கடந்த காலத்தில் நடந்த நிகழ்ச்சியைச் சொல்லாமல் சொல்லி ஆடிக் கொண்டிருப்பதுடன், அந்தத் துரையின் பெயரையும் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. பத்தொன்பதாம் நூற்றுண்டில் நடந்த

நிகழ்ச்சி இது. அதற்கு முன்பு இப்பவானியின் முந்தைய வரலாற்றைச் சற்றுச் சிந்தனை செய்து பார்ப்போமா ?

இதிகாச காலங்களிலும் இப்பவானி இருந்ததை அறிகிறோம்; அக்காலத்தில் பூமியளந்த திருமால் பூசித்த வரலாற்றைப் பிற்காலத்தே வந்த சம்பந்தப் பிள்ளையின் "பூமி யளந்தானும் போற்ற மன்னி" என்ற திருவாக்கால் தெரிகிறோம். இங்கு எழுந் தருளிய காலங்கடந்த இவ்விறைவனை இன்று போன்று அன்றும் சங்கமேசுவரர் என்றும் இறைவியை வேதநாயகி என்றும் அழைத்திருக்கின்றனர். அமிர்த லிங்கேசுவரர் பற்றித் தலபுராணம் கூறும்போது பராசர முனிவர் வழிபட்டுப் பேறுபெற்றதும் பேசப் படுகிறது. வியாசர் இங்குப் பூசனை புரிந்ததன் பயனாக வேதங்களை வகுக்க வல்லமையைப் பெற்றார்.

குபேரனும் கும்பிட்டுப் பதவிபெற்ற பதியாகை யால் இவ்வூர் அளகை என்ற பெயர் பெற்றிருக்கிறது. பிரமன் இப்பவானிப் பரமனைப் பூசித்ததனால் சிருட் டித்தொழிலில் சிறப்புப்பெற்றான். விசுவாமித்திரர் இக்கூடலில் நீராடிச் சங்கமேசுவரரை வழிபட்டதன் பயனாய் வசிஷ்டர் வாயாலேயே பிரமரிஷி என்று அழைக்கப்பெற்றார். தருமசன் என்னும் பிராமணச் சிறுவன் மாலுதான ரிஷியின் கோபத்தால் கல்லானான். மேற்சொன்ன இவையெல்லாம் தலபுராணம் நமக்குத் தரும் செய்திகள். மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் பெயர் பெற்றது இத்தலம். தீங்கொன்றும் நண்ணாத் திருப்பதி ஆனதால் இதற்கு 'நணா' என்று பெயர். சிறப்பை உணர்த்தும் அடைமொழியாகிய 'திரு'வும் சேர்ந்து 'திரு நணா' என வழங்கப் பெற்றது. சம்பந்தர் காலத்திலும் இப்பெயரே வழங்கிவந்திருக் கிறது; திருநணா எனும் இப்பவானி ஈரோட்டிலிருந்து சுமார் 12 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

தலவிருட்சம் இலந்தை. பவாநிக் கூடலில் குளித்துக் கரையிலுள்ள சங்கமேசுவரரை வணங்கித் தலவிருட்சமான இலந்தையின் கனியைத் தின்று தந்துவர்த்தனச் சோழன் புத்திரப்பேறடைந்தான். இலந்தைக்கு வடமொழியில் வதரி என்று பெயர். அதனால் இத்தலம் 'வதரிகாசிரமம்' என்றும் பெயர் பெற்றது. மகாவிஷ்ணுவால் கொடுக்கப்பட்ட அமிர்தத்தைப் பராசர் குடத்திலிட்டு அமிர்தலிங்கேசுவரரைத் தாபித்தார். பின்பு அதை அகழ்ந்தெடுத்த இடத்திலிருந்து உண்டான நதிக்கு அமுத நதி என்று பெயருண்டாயிற்று. கட்புலனால் காண முடியாததால் "அந்தர்வாணி" என்ற பெயரும் அதற்கு உண்டு. அந்தர் வாணி என்ற அமுதநதி மானசீகமாய் ஓடி வந்து, பவாநி—காவிரியுடன் கூடும் இப்பவாநி கூடலில் கலப்பதாய்த் தலபுராணம் கூறுகிறது. வட இந்தியாவில் அலஹாபாத்திற்கு ஆறு கிலோமீட்டர் தூரத்தில் கங்கையும், யமுனையும் கலக்கிறது. சரசுவதி என்ற நதி மானசீகமாய் வந்து சேருவதையும் அவற்றின் பெருமையையும் ரிக்வேதம் எட்டாவது அஷ்டகம் விரிவாய்க் கூறும். மூன்று நதிகள் கூடுவதால் திரிவேணி சங்கமம் என்னும் பிரயாகை என்றும் பேசப்படுகிறது. இப்புண்ணிய நதிகளின் சங்கமத்தில் நீராடிய பலனைப் பவாநி கூடலில் நீராடிப் பெறுவதால் பவாநி கூடலைத் "தென் பிரயாகை" என்று அழைக்கின்றனர்.

"வாணி" என்பதுதான் இப்பவாநி ஆற்றின் பெயராகப் பண்டைத் தமிழ் நூல்களில் காணப்படுகிறது. பிற்காலத்தில் எப்படியோ பவாநியாயிற்று. இது பெருவாணியாகையினால் மேற்குத் தொடர்ச்சி மலையில் தோன்றும் ஒரு சிற்றாற்றிற்குச் சிறுவாணி என்ற பெயரும் வழங்கி வருகிறது. "முன்பு பவாநியானது பூவாணி என்று அழைக்கப் பெற்றிருக்கலாம்.

பின்பு அது பவாநி என மருவியிருக்கலாம்" என்பது தமிழ்ப் பேராசிரியர் ஒருவரின் ஆராய்ச்சி.

"கலைமேவு ஞானப்பிரகாசக் கடலாடி ஆசைக் கடலேறி" எனத் தொடங்கித் "திருவாணி கூடற் பெருமாளே" என முடியும் திருப்புகழ் இப்பவாநி கூடற் பெருமாளுக்கே உரியது என்பது ஆய்ந்து அறிந்தோரின் தேர்ந்து தெளிந்த முடிவு.

இப்புண்ணிய நதிக்கரையில் நின்று நாலா பக்கமும் திரும்பிப் பார்த்தால் சுற்றிலுள்ள ஊராட்சிக் கோட்டையான வேத மலை, மங்க மலை, திருச்செங் கோட்டு மலை, சங்க மலை, பதும மலை என்ற ஐந்து மலை களும் தெரியும். தூரத்தேயுள்ள உயர்ந்த மலைகளை யும், நம்பக்கத்தே இப்பவாநி கூடலில் பல ஆழ்ந்த மடுக்களையும் பார்க்கலாம். அவற்றுள் சூரிய தீர்த்தம். சாவித்திரி தீர்த்தம் ஆகியவை சிறப்புடையவை, மந்திரங்களில் காயத்ரீ மந்திரம் மிகச் சிறப்புடையது. "ஸாமங்களில் நான் ப்ருஹத் ஸாமம். சந்தஸ்களில் நான் காயத்ரி. மாதங்களில் நான் மார்கழி. பருவங் களில் மலர்சான்ற இளவேனில்" எனப் பகவத்கீதை யில் விபூதி யோகத்தின் முப்பத்தைந்தாம் சுலோகத் தில் பகவான் கூறுகிறார். எண்ணியதை எண்ணி யாங்கு கொடுக்கும் காயத்ரிப் பெயருடைய இம்மடு வில் முழுகியவர்கள் நினைத்ததைப் பெறுவர். இதற்கு ஒரு வரலாறும் உண்டு.

பழங்காலங்களில் கோவிற்பணி புரிந்த மகளிர்கள் வேசித் தொழிலும் புரிந்து வந்திருக்கின்றனர். "வரிக்கயலினிகரான விழிக்கடையிலிளையோரை மயக் கிடு மடவார்"களில் பிங்கலை என்ற விலைமாது ஒருத்தி வாழ்ந்தாள். அவளுக்குப் பரிசம் நூறு பொன். அதைக் கொண்டுவந்து முன்பணமாகக் கொட்டிவிடவேண்டும். "தளர்மினேரிடையால், உடையால், நடையழகினால்,

மொழியால், விழியால், மருள் சவலை நாயடியனாகி மிக வாடி மயங்கி''ய அனந்தனன் என்ற வணிகன் அவள் மீது மோகங்கொண்டான். ஒரு முறையாவது கூடி முயங்க வேண்டும் என்ற பேராசை. குறித்த பொன் கிடைக்காமையால் மற்றொரு பிறவியிலேனும் அம் மாதை மனைவியாயடையவேண்டும் என்று நினைத்துக் காயத்திரி மடுவில் வீழ்ந்தான். அவன் கருத்தை அடியோடு வெறுத்த பிங்கலை அடுத்த பிறப்பில் அவனுக்குத் தங்கையாகப் பிறக்கவேண்டும் என விரும்பி அம்மடுவில் நீராடி வந்தாள். தீர்த்தத்தில் மூழ்கியதன் பயனாய் மாறுபட்ட இருவர் கருத்தும் நிறைவேறும் வகையில் அவ்விருவரும் ஒரு மாடப் புறவிற்குக் குஞ்சுகளாய், அண்ணன் - தங்கையாய்ப் பிறந்தனர். இருவர் எண்ணமும் ஈடேறிற்று. பின்பு இருவரும் முத்தியை அடைந்தனர். காயத்திரி ஜலே சுரர் சந்நிதியும் காயத்திரி மடமும் மடுவின் அருகே உண்டு.

ஆற்றங்கரையில் நரசிம்மர், விசுவநாதர், விசாலாட்சி, சகஸ்ரலிங்கர், அமுதலிங்கர் ஆகிய மூர்த்திகள் வீற்றிருக்கின்றனர். குழந்தை இல்லாதவர்களும் வயிற்றுவலிக்காரர்களும் அமுதலிங்கரின் ஆவுடையாரிலிருந்து இலிங்கத்தைத் தனியே கையில் எடுத்துக் கொண்டு பலமுறை வலம் வந்து பழையபடியே வைத்துக் குறைதீர வேண்டி வணங்கிச் செல்கின்றனர்.

இராச கோபுரத்திற்கு அடுத்திருப்பது ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி. அதன் பக்கத்திலுள்ள மண்டபத்தின் மறுபுறம் அமைந்திருப்பது வேதநாயகி அம்மையின் சந்நிதி. வேண்டுவோர் வேண்டுவதே ஈயும் வித்தகி இவ்வேதநாயகி. இவள் சந்நிதிக்கு வந்து உண்மையன்புடன் பூசித்தவர்கள் வரம் பல பெற்று

வந்துள்ளனர். வேதநாயகியிடம் வேண்டியவர்கள் வெறுங்கையுடன் திரும்பியதில்லை. அம்மன் கோவிலில் இம்மடிகெட்டி முதலியார் கட்டிய மகாமண்டபத்தின் கற்றூண்கள் சிற்பக் கலைத்திறனைக் காட்டி நிற்கின்றன. சிற்பக் கலையின் அற்புதம் செப்பும் தரமன்று. கற்றூண் களில் இறைவியை நோக்கி நிற்கும் இருபெண்களின் எழிலைக் கண்ணாரக் கண்டு மகிழ வேண்டும். ஒன்றைச் சிரிக்கும் அழகி என்று கூறுவர். பெண்ணைப் படைக்கும் பிரமன் பெண்ணின் அங்க இலக்கணத்தை அறிந்துள் ளானோ இல்லையோ நாம் அறியோம். ஆனால் இச்சிலை யைச் செதுக்கிய சிற்பி இப்பெண்ணைப் படைக்க எல்லா இலட்சணங்களையும் அறிந்து, தெரிந்து, அளவாய் அமைத்திருப்பதைக் கண்டு அகமிக மகிழாதவர்கள் இருக்க முடியாது. கெட்டி முதலியார் ஆதிசைவர் ஒருவருக்குக் கைநிறையப் பொருள் கொடுப்பதையும் ஒரு தூணில் கவினழகுடன் அமைத்து நம்மைக் களிப் பில் ஆழ்த்திவிட்டான் அந்தச் சிற்பி.

> "நல்லார் ஒருவருக்குச் செய்த உபகாரம்
> கல்மேல் எழுத்துப்போல் காணுமே—அல்லாத
> ஈரமில்லா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
> நீர்மேல் எழுத்துக்கு நேர்"

என ஔவையார் பாடினார்.

கல்மேல் எழுத்தைப்படிக்கத் தெரிந்திருந்தால் தானே எழுத்தில் பொதிந்திருக்கும் கருத்தையறிய முடியும்? பார்த்த மாத்திரத்திலேயே நல்லார் ஒருவருக் குச் செய்த உபகாரத்தைக் கற்காதவர்களும் தெரிந்து கொள்ளச் செய்ய வேண்டும் என்று கற்றச்சன் கருதி யிருக்க வேண்டும். நல்லார் ஒருவரான ஆதிசைவ ருக்கு இம்மடி கெட்டி முதலியார் செய்த இவ்வுபகா ரத்தைக் கண்படைத்தோரெல்லோரும் நேருக்கு நேர் காணும்படி, கண்டுகொண்டே இருக்கும்படி அக்காட்சி

யில் களிப்படையும்படிக் கவினழகுடன் அக்கல்லில் சிற்பமாய்ச் செதுக்கிவிட்டான். படிக்கத் தெரியாப் பாமரனும் பார்த்த மாத்திரத்தில் கெட்டி முதலியார் செய்த உபகாரத்தை எண்ணி எண்ணிச் சிந்தைமகிழும்படி செய்துவிட்டான். எத்தனை எத்தனையோ தலைமுறை தலைமுறை காலமாக நின்று நித்தம் கெட்டி முதலியாரின் உபகாரத்தைக் கொட்டி முரசறைந்து கொண்டிருக்கிறது இச்சிற்பம். இதைவிடச் சிறந்த வழி வேறு என்னவாக இருக்க முடியும்? பல தூண்களில் உள்ள வேலைப்பாடுகளையும் பார்த்து மகிழலாம். இறைவனின் திருக்கோவிலை இன்றைய இருபதாம் நூற்றுண்டுச் சிற்பிகளைக்கொண்டு திருப்பணி செய்துள்ளனர். விநாயகர் வலம்புரி விநாயகர். ஜுரகரேசுவரர் சுவாமிக்கும் சுப்பிரமணியருக்கும் மத்தியில் உள்ளார்.

கல்வெட்டுக்கள் பல உண்டு. அவற்றில் தளவாய் தேவராயன் (1735—65), இம்மடி கெட்டி முதலியார், நாராயண கவுண்டன் ஆகியோரின் திருப்பணிபற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன. சித்திரைப் பௌர்ணமியில் பன்னிருநாள் பெருவிழா. ஞானசம்பந்த சுவாமிகள் இத்தலத்திற்கு பதிகம் ஒன்று பாடியுள்ளார்.

பந்தார் விரன் மடவாள்
  பாகமா நாகம்பூண் டேறதேறி
அந்தா ரரவணிந்தவம் மானிடம்
  போலு மந்தண் சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட
  வார்பொழிலில் வண்டுபாடச்
செந்தேன் றெளி யொளிரத்
  தேமாங் கனியுதிர்க்குந் திருநணாவே"

என்பது முதற்பாட்டு. திருநணாவின் செழிப்பைப் பல பாடல்களில் பாடுகிறார். இப்பதிகப்பாடல்கள் இயற்கை

யழகு ததும்பி நிற்கின்றன. மேலும் இந்நாதனை பிரம்மா, விஷ்ணு, மாவிரதியர் பூசித்த செய்திகளும் காணக் கிடக்கின்றன. இத்தலபுராணம் இயற்றியவர் வாசுதேவ முதலியார். முருகன் பூண்டித் தலபுராணம் பாடியவரும் இவரே. பாயிரம் முதல் சிவார்ச்சனைச் சருக்கம் முடியப் பதினெண் சருக்கங்களையுடையது. சுமார் ஆயிரம் பாடல்களாலானது. இன்றைய நிலையில் இங்குள்ள மக்கள் நெய்யும் பெரு நூலாலான விரிப்பு (ஜமுக்காளம்) அகில இந்தியப் புகழ் பெற்றது. தறி வேலைதான் மிகுதியாய்க் காணப்பெறுகிறது.

*"சொல்வித்தகத்தாலிறைவன் திருநணா வேத்து பாடல்*
*வல் வித்தகத்தான் மொழிவார் பழியிலர் இம்மண்ணின் மேலே"*

என ஞானசம்பந்தப் பிள்ளையார் பாடியபடி நாமும் அவர் பதிகம்பாடி இச்சங்கமேசுவரப் பரமனைப் பரவித் துதித்துப் பழியிலர் ஆகலாமே!





“ மூலவர் ” திருச்செங்கோட்டு அர்த்தநாரீசுவரர்.

# திருச்செங்கோடு

சோழநாடு, ஈழநாடு, பாண்டிப் பழநாடு, மலைநாடு கொங்குநாடு, நடுநாடு, தொண்டைநன்னாடு, துளுவ நாடு, வடநாடு என வரிசைப்படுத்தப்பட்டுள்ள ஒன்ப துள் நடுநாயகமாய்க் கொங்குநாடு விளங்குவது போல கொங்கில் பாடல்பெற்ற பழம்பதிகளான அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருநணா, கொடிமடச் செங்குன் றூர் என்ற திருச்செங்கோடு, வெஞ்சமாக்கூடல், திருப் பாண்டிக்கொடுமுடி, கருவூரானிலை என்ற ஏழனுள், திருச்செங்கோடு நடுநாயகமாய்த் திகழ்கிறது. இம்



திருச்செங்கோடு மலைத்தோற்றம்

மலைக்கு நாகமாமலை, இடபமலை, துர்க்கைமலை என்ற பல பெயர்கள் வழங்குகின்றன. தேவாரத்திலும் பெரிய புராணத்திலும் கொடிமாடச் செங்குன்றூர் என்ற பெயரே ஆளப்படுகிறது. இவ்வூரைப்பற்றி அருணகிரி நாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் இருபத்தேழு. அவற்றில் இதற்குச் செங்கோடு, உரகசிகரி, உரக வெற்பு, கட்செவி வெற்பு, காளகிரி, சர்ப்பகிரி, சர்ப்ப கேந்திரம், செங்குவடு, நாககிரி, நாகமலை, பணிமலை என்ற பெயர்களும் வழங்கப்பெறுவதைப் பார்க்கிறோம். மேல மாடவீதியிலிருந்து பார்த்தால் நாகம் போல் இம்மலை நமக்குக் காட்சியளிக்கிறது.

*"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு*
*மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்*
*சேலார் வயற்பொழில் செங்கோடனைச் சென்று கண்டு தொழ*
*நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான்முகனே"*

என்பது கந்தரலங்காரப் பாட்டு.

அருணகிரிநாதர் நாலாயிரம் கண்களால் பார்க்க விரும்பிய செங்கோட்டு நாதனை உங்கள் மனக்கண் முன் கொண்டுவந்து நிறுத்த ஆசைப்படுகிறேன்.

திருப்பரங்குன்றம் போல் சிவனாரின் சிறந்த தலமாகவும், செங்கோட்டு வேலர் என வழங்கும் அவரது மகனாரின் குன்றுதோறாடல்களில் ஒன்றாகவும் இம்மலை கருதப்படுகிறது.

இத்திருச்செங்கோடு சங்ககிரி துர்க்கம் ரயிலடியிலிருந்து பதினொரு கிலோமீட்டர் தூரத்திலும், ஈரோட்டிலிருந்து பதினெட்டு கிலோமீட்டர் தூரத்திலும், நாமக்கல்லிலிருந்து முப்பத்திரண்டு கிலோமீட்டர் தூரத்திலும் உள்ளது. செங்கோடு எனில் அழகிய செந்நிறமலை எனப் பொருள்படும். திரு என்பது தெய்வத் தன்மையைக் குறிக்கும் அடைமொழி. மலையின்

பெயரே அதன் அடிவாரத்தில் உள்ள ஊர்க்கும் பெயர். திருச்செங்கோட்டு ஊரின் நடுவில் கைலாசநாதர் ஆலயம் அமைந்துள்ளது. இக்கைலாசநாதரை "நல்ல



நிலத்தம்பிரான் கோயில் வெளித்தோற்றம்.

தம்பிரான்" என்றும் "நிலத் தம்பிரான்" என்றும், மலை மேல் உள்ள அர்த்தநாரீசுவரரை "மலைத்தம்பிரான்" என்றும் மக்கள் அழைக்கின்றனர். குழந்தையானந்த

தேசிகர் அகம்குழைந்து இந்த நிலத்தம்பிரானைப் பாடிய மாலையில் ஒரு மணியாகத் திகழும் பாட்டைப் பார்ப்போம்.

"நீதியின்பொருளே மாசிலாமணியே சித்தனே ஏழை
பங்காளா
ஆதியாம் பரனே பராபரம் பொருளே அகிலமும் பரவும்
நாயகனே
வேதமாறங்கத்துட் பொருளானே மெய்யனே மெய்யர்கள்
தேவே!
ஓதியமூவர்க்குகந்தருள் செங்குன்றூரில் வாழ் கைலை
நாயகனே"

இவ்விறைவனின் திருநாமம் கைலாசநாதர் என்பது எனக்கண்டோம். இறைவி ஸ்ரீ சுகந்தகுந்தளாம்பிகை; அழகு நாச்சியம்மை. கி. பி. 1660 முதல் கி பி. 1682 வரை ஆண்ட விசுவநாதச் சொக்கலிங்கர் இக்கோயிலையும் கோபுரத்தையும் கட்டியதாகக் கல்வெட்டு கூறும். இந்நிலத்தம்பிரான் கோயிலுக்கும், இடப்பக்கம் உள்ள ஈசுவரியின் தனிக்கோயிலுக்கும் நடுவில் சுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. கன்னி விநாயகர் பக்கத்திலுள்ள வன்னிமரம் இக்கோயிலின் தலவிருட்சம். கோயில் பெரியதே. இராச கோபுரத்துடன் கூடியது. உட்புறம் தென்பகுதிப் பிரகாரம் ஆரம்பப் பள்ளியாய்த் திகழ்ந்து கலைவளர்க்கும் கோயிலாயும் காட்சியளிக்கின்றது. மலைமேல் ஏறலாமா?

இங்கிருந்து அரை கிலோமீட்டர் தூரத்தில் மலையின் அடிவாரம் உள்ளது. அடிவாரத்தின் வலப் பக்கத்தில் குடிகொண்டுள்ளார் ஆறுமுக சுப்பிரமணியர். மலையடியிலிருந்து முடிபோய்ச் சேரும்வரை பல படிகளைக் கடந்தாக வேண்டும். ஏறும்போது கணக்கில்லாத குரங்கினங்கள் குறுக்கும் நெடுக்கும் ஓடி நம்மை

ஏறிட்டுப் பார்த்து எள்ளி நகையாடும். கையிலுள்ள தின்பண்டங்களைக் கண்டுவிட்டால் அச்சுறுத்தும். பல வீனர்களிடமிருந்து பறித்துச்சென்று உரித்துத் தின்னு வதையும் பார்க்கலாம். மலை ஏறும் போழ்து, இளைத்த உடல்களைத்துவிட்டால் இளைப்பாற அங்கங்கே மண்ட பங்கள் உண்டு. முதல் ஏற்றம் ஏறிச் சரிவில் இறங்கி யதும் அடுத்துள்ள பாறையில் வெட்டப்பட்டுள்ள படி களின் இருமருங்கும் பக்கத்துக்கொன்ருக இருபதடி உயரமான பாம்பின் உருவம் சிவலிங்கத்தை உடலில் தாங்கி ஐந்து தலையாலும் குடைபிடித்துக் கொண்டு இருப்பதுபோன்று செதுக்கப்பட்டுள்ளது. நமக்கு வலதுபுற மிருப்பது மிகப் பழமையானது என்பதை அதன் தேய்வினுல் தெரிந்து கொள்கிறேம். ஆதிசே டனுக்கும் வாயுவுக்கும் நிகழ்ந்த சண்டையில் ஆதிசேட னின் ஆயிரம் தலைகளில் ஒன்று மூடியிருந்த மகாமேரு வின் ஆயிரம் முடிகளில் ஒன்றுடன் பறிக்கப்பட்டு வீழ்ந்ததால் சிதறி உண்டான ஐந்து மலைகளில் ஒன்று இம்மலை என்பர். எப்பொழுதோ நடந்த நிகழ்ச்சியை எப்பொழுதும் நினைவுகூறும் முகத்தால், இம்மாதிரி சர்ப்பத் திருவுருவங்கள் ஆங்காங்கே செதுக்கப் பட்டிருக்கின்றன. மலைக்கோயிலில் நுழைவாயிலின் பக்கத்திலுள்ள மண்டபத்தில் இது போன்று பாம்புத் திருவுருவங்கள் மூன்று உள்ளன. அவற்றுள் இரண்டு பெண் பாம்புகள் நாக கன்னிகையர்.

உயர்ந்த மலைமேல் ஏறும்போது பல ஊற்றுக்கள் ஓடிவந்து பள்ளத்தில் தேங்கி நிற்பதைப் பார்க்கலாம். அவற்றைத் தீர்த்தம் என்கின்றனர். மொத்தம் பதி ஞறு எனத் தலபுராணம் பகரும். குறிப்பிடத்தக்கவை நாகதீர்த்தம், கணபதி தீர்த்தம், குமார தீர்த்தம், பைரவ தீர்த்தம் போன்றவை. பைரவ தீர்த்தத்தைக் கடந்ததும் மலைக்கோயிலின் கம்பீரமான ராஜகோபுரம் நம் கண்ணுக்குத் தென்படுகிறது. ஐந்து அடுக்குகளு

டனும் அதன் மேல் ஐந்து கலசங்களுடனும் காட்சி யளித்து விண் நிறைந்தவன் நம் விமலன் எனும் குறிப்பை உணர்த்தி நிற்கிறது.



மலைமேல் கோபுரவாயில்

கோபுரவாசலை விட்டிறங்கியதும் கிழக்கு நோக்கிய சந்நிதியுட் காட்சியளிப்பவர் செங்கோட்டு வேலவர். அவரது சந்நிதிக்கு முன்புள்ள மண்டபம் வேளாளக் கவுண்டர் மண்டபம் என்று அழைக்கப்படுகிறது. அங்குத் துவாரபாலகர்கள் நம்மை நிறுத்திப் பேசுவது போல் தோற்றமளிக்கின்றனர். நல்ல சிற்ப வேலைப் பாடுகள். அணிந்திருக்கும் மாலைகளுக்கும், மார்பிற்கும் அரைஞாணிற்கும் இடுப்பிற்கும் மத்தியில் ஊசிபோய் வரும் அளவுக்கு இடைவெளியுண்டு. எத்துணை நுணுக்கமான கலைத்திறன்! மண்டபத்தில் முதல்

எட்டுத் தூண்களிலும் அகோர வீரபத்திரர் உள்ளிட்ட எட்டுச் சிற்பத் திருவுருவங்கள் சுமார் மூன்றடி உயரத்தில் சிறப்புடன் காட்சியளிக்கின்றன. கோயிலைக் கட்டியவர் பரம்பரையைச் சார்ந்தவர்களின் உருவங்களும் உள்ளன. பேரூர்க் கனகசபை மண்டபத்தில் உள்ளவாறே பத்மவடிவ அமைப்பும் எட்டுக் கற் சங்கிலிகளும் இங்கும் மேற்கூறையில் இருக்கின்றன. தென்பகுதிக் கற்றூண்களில் பாங்காய்க் காட்சிதரும் குறவன் குறத்தி, வேடன் வேட்டுவச்சி ஆகியோரின் சிற்பங்கள் நமக்கு அவிநாசியிலுள்ள அம்மன்கோயில் முன் மண்டபத்தை ஞாபகப்படுத்துகின்றன. ஒவ்வொரு அங்கங்களையும் அணிகலன்களையும் உடைமைகளையும் அழகாக, ஒழுங்காக, அருமையாகக் கல்லில் வடித்து எடுத்திருக்கும் கவினழகைக் கண்டுகளிக்க வேண்டுமே ஒழிய எழுத்தால் இயம்ப இயலாது.

செங்கோட்டுவேலவர் உயரம் சுமார் மூன்றரை அடி. அழகிய திருவுருவம். காண்போர் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் காட்சி உடையார் இச் செவ்வேள்; வலக்கையில் வடிவேலுடன் நின்று வந்தோர் விரும்பும் வரமளிக்கிறார். வைத்தகண் வாங்காது பார்த்துக்கொண்டே இருக்கத் தூண்டும். "நாலாயிரம் கண்கள் படைத்திலனே அந்த நான்முகனே" என்று நாமும் நினைக்கின்றோம். அருணகிரிநாதர் மனத்திற்கு மிகவும் உகந்த கோயில், உயிருக்குயிரான தலம் என்று உரைத்தாலும் தவறில்லை. அப்படியில்லாவிட்டால் கந்தரலங்காரத்தில் எட்டுப் பாட்டுக்களாலும் இருபத்தேழு திருப்புகழ்ப் பாடல்களாலும் இச்செங்கோடனைப் பாடியும் ஆசை தீராது எத்தலத்தையும் குறிப்பிடாத மந்திர நூலான கந்தரனுபூதியில் கூகா எனத் தொடங்கும் பாட்டில் "நாகாசல வேலவா" என்று இத் தலத்தை மாத்திரம் குறித்திருக்கமாட்டார் அல்லவா?

இறைவனின் கண்களை உமாதேவியார் மூடி விளையாடிய காரணத்தால் உலகமே இருண்டு ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய தொழில்கள் நடைபெரு தொழிந்தன. அக்குற்றத்திற்குக் கழுவாயாக இறைவியை இறைவன் தவமியற்றப் பணித்தார். தவம் செய்யச் சிறந்த இடம் தமிழ்நாடு. ஆகையால் கச்சியிலும் திருவண்ணமலையிலும் கடுந்தவமியற்றிய அன்னை செங்கோடு அடைந்து தவத்தை நிறைவேற்றுகிருள். வேண்டுவார்க்கு வேண்டுவன அளிக்கும் விமலன் அம்மையைத் தனது இடது பாகத்தில் வைத்து அருள் செய்தார். அன்றுமுதல் அனைவருக்கும் அம்மையப்பராகக் காட்சியளித்துக்கொண்டு வருகிருர்.

பிருங்கி முனிவர் சிவனையன்றிப் பிற தெய்வத்தைத் தொழாதவர். வழிபாட்டிலும் சிவமே பெரிதென எண்ணிச் சக்தியைப் பிரித்துச் சிவத்தை மாத்திரம் வழிபாடாற்றி வந்தார். மகாளய அமாவாசையன்று இறைவன் ஏகைக பாகம் கொண்டு இருந்த வேளையில் கொள்கைப் பிடிப்பு உடைய அவர் வண்டு உருவம் எடுத்துச் சிவத்தை மட்டும் வலம் வந்தார். பாடம் கற்பிக்க எண்ணிய பராசக்தி பிருங்கி முனிவரிடமிருந்து சக்தியைப் பிரித்தெடுத்துவிட்டாள். பிறகு அம்மையப்பராய்ப் பிரிக்க முடியாமல் சிவமும் சக்தியும் இரண்டறக் கலந்த ஒரு நிலையில் காட்சி யளித்தார். உற்சவ அம்மையப்பர் திருவுருவமும் அதன் பக்கத்தில் உள்ள பிருங்கி முனிவரின் உருவமும் இதை நமக்கு ஞாபகப் படுத்துகின்றன. மூலத்தான மூர்த்தியைச் சில சித்தர்கள் நவபாஷாணச் சேர்க்கையால் அமைத்தனர் என்பர். சுயம்புத் திருமேனி என்று சொல்வாரும் உண்டு. மங்கை பங்கர் ஐந்தடி உயரமுள்ள அழகர். வேறு எந்த நாட்டிலும் எந்த ஊரிலும் இல்லாத திருவுருவம். மேற்கு நோக்கிய சந்நிதி. ஆண் உருவம் வலத்திலும், பெண் உருவம் இடத்திலும் அமைந்த ஓர்

அற்புதத் திருவுருவமாகத் தொன்மைக் கோலத்தில் அருள் சுரக்கிறார் இம்மாதொருபாகன். மணிவாசகப் பெருமான் திருவாசகத்தில் மங்கை பங்கனது தொன்மைக் கோலத்தை, எண்ணிக் 'குளிர்ந்து ஊத'க்கோத் தும்பியை அழைக்கின்றனர்.

*தோலும் துகிலும் குழையும் சுருள் தோடும்*
*பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்*
*சூலமும் தொக்கவளையும் உடைத்தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ*

என வேண்டி விடுக்கின்றார். இந்த மாதொரு பாகரை ஞானசம்பந்தர் "மலைமகள் கூறு உடையான்" "ஏலமர் குழலாள் ஒரு பாகம் அமர்ந்து" "பந்தணவும் விரலாள் ஒரு பாகம் அமர்ந்து" என்று பலவாறு குறிப்பிடுகிறார். மங்கை பங்கனைப் பூசித்துப் பேறடைந்த ஆதிகேசவப் பெருமாள் மலையைவிட்டு நீங்க மனமின்றி அங்கேயே வீற்றிருக்கத் திருவுளம்பற்றிக் கோயில் கொண்டுள்ளார். இவர் திருக்கோயில் கிழக்கு நோக்கி இறைவன் சந்நிதிக்கு இடப்பாகத்தில் அமைந்துள்ளது. திருவிழாக்கள் எல்லாம் ஒன்றாகவே நடைபெறுகின்றன. வைகாசியில் பெருந் திருவிழா. அம்மாத விசாகத்தில் தேர்விழா. முதல் மூன்று விழாக்கள் மலைமீதும் மற்றவை அடிவாரத்திலும் கொண்டாடப்படுகின்றன. உமை பங்கனைக் கந்தன், பிருங்கி, துர்க்கை, ஆதி சேடன் முதலியோர் பூசித்துப் பேறு பெற்றதாகத் தல புராணம் கூறும். தலவிருட்சம் இலுப்பை.

ஞானசம்பந்தப் பிள்ளையார் கொங்குநாட்டுத் தல யாத்திரையில் முதலில் இவ்வூரை வணங்கிச் சில ஊர்களுக்குச் சென்று திரும்பவும் வந்தபோது தன்னுடன் வந்த அரனடியார்களை நளிர்சுரம்பற்றி வருத்த "அவ்வினைக் கிவ்வினை" என்று தொடங்கித் "தீவினை வந்தெம்மைத் தீண்டப் பெறு திருநீலகண்டம்" என ஆணை

பதித்த திருநீலகண்டத் திருப்பதிகம்பாடி அந்நாடு முழுவதும் அப்பிணியைத் தீர்த்தார் என்பதைப் பெரிய புராணத்தால் அறிகிறோம். செயற்கரிய சமுதாயப் பணியை இறைவனின் திருவருட்டிறம் கொண்டு செய்த சம்பந்தரின் இத்திருப்பாடலை அவர் தங்கி யிருந்த மடத்தில் எழுந்தருளி யிருக்கும் சுரகண்டசுரர் திருமுன்பு ஓதி மூன்றும் நான்காம் முறைக் காய்ச்சல் காரர்களும் இன்றும் குணம் பெறுகின்றனர்.

இத்தலம் பற்றிய நூல்கள் பலவற்றுள் தென் காசிக் கவிராஜ பண்டிதர் இயற்றிய திருச்செங்கோட் டுப் புராணம், வண்ணச் சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் பாடிய பத்துப் பதிகங்கள் திருப்புகழ்ப்பாடல் கள் (மொத்தம் 139); வீமண்ணப் புலவர்எழுதிய அபி டேகமாலை, பிள்ளைத்தமிழ், கருணைகரமாலை, தி. அ. முத் துச்சாமிக் கோனார் எழுதிய ஒருபா ஒரு பஃது, இரட்டை மணிமாலை, மும்மணிக்கோவை சதாசிவப் பண்டிதர் எழுதிய திருப்பணிமாலை, சதகம் ஆகியவை குறிப்பிடத்தக்கன.

இத்தலத்தில் நிகழ்ந்த வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றுள் சிலவற்றை இங்கே குறிப்பிடுவோம். சித்தர் கல்லானைக்குக் கரும்பு கொடுத்துத் தின்னச் செய்தார் மதுரையில். அதுபோலக் கும்பகோணம் சிவப் பிரகாசர் இவ்வூரார் சிலரின் அழுக்காற்றினை அகற்ற,

*"வில்லார் பொதுச்சபையின் வித்தகா! நீயுமுனம்*
*கல்லானைக்கு இக்கு அருத்திக்காட்டிய உன்-வல்லாண்மை*
*கட்டுரையே யாகிலிந்தக் கல்லேறெழீ இக்கடலை*
*இட்ட இவர் முன்தினச் செய்யே"*

என்ற பாட்டைக் கூறியவுடன் எதிரேயிருந்த நந்தி எம்பெருமான் கல்வடிவத்திலிருந்து எழுந்தருளிக்

கடலையைத்தின்று காட்டியது இத்திருச்செங்கோட்டு மலையிலேதான்.

செந்தூரில் ஐந்துவயது ஊமைப்பிள்ளையான குமர குருபரர் வாய்திறந்து பேசியவாறே காடையாம்பட்டி ஐநூற்றுச் செட்டியார் மரபில்வந்த பாததூளிச் செட்டி யாரின் ஊமைப்பிள்ளையான அர்த்தநாரி வாய்திறந்து பேசியதும் இந்தச் செங்குன்றூரில்தான். மதுரையில் சோமசுந்தரக் கடவுள் பாணனுக்காக விறகு விற்கும் ஆளாய் வந்து வடநாட்டு ஏமநாதனை வெருட்டி ஓட்டினரல்லவா? அப்படியே செங்குன்றூர் குணசீலர் என்ற புலவருக்காக இச்செங்கோட்டு வேலர் மாடு மேய்க்கும் சிறுவனாக வந்து குணசீலரின் கடைமாணாக் கர் என்று தன்னைக் கூறிக்கொண்டார்.

*''சமரமுகத் திருச்செங்கோடு சர்ப்பசயிலமெனில்*
*அமரிற்படம் விரித்தாடாத தென்னே!'*

என்ற இரண்டாவதடிக்குமேல் எழுத முடியாது திண் டாடிக்கொண்டிருந்தார் பாண்டிப்புலவரேறு.

*''—அஃது ஆய்ந்திலையோ*
*நமரின் குறவள்ளிபங்கன் எழுகரை நாட்டுயர்ந்த*
*குமரன் திரு மால்மரு கன்மயில் வாகனம் கொத்தும் என்றே''*

எனப் பாட்டினை முடித்துப் பாண்டிப் புலவரேற்றைத் திரும்பிப் போகும்படிச் செய்தார் இம்முருகன். இது நிகழ்ந்தது இத்திருச்செங்கோட்டு மலையடிவாரத்தில்.

கோயிலைக் கொள்ளையிடவந்த வடநாட்டார் இரு வரின் புறக்கண்களைக் கெடுத்து அகக் கண்களைத் திறக் கச் செய்து அவர்களால் கொல்லப்பட்ட வீமணன், ஓவ ணன், இரங்கண்ணன் மூவரையும் எழுப்பி மக்களுக்குப் பேய், பில்லி, சூனியத்தால் வரும் பிணிகளைப் போக்கித்

தொண்டு செய்ய அவர்களைப் பணித்ததும் இம்மலையில் தான்.

மலையின்மேல் கோயிலுக்குக்கீழ்ப்பாகத்தில் உள்ள சிகரத்திற்குச் செல்லும்முன் பஞ்ச பாண்டவர்கள் தங்கியகுகை என்று சொல்லப்படும் பாறை இடுக்கு ஒன்று இருப்பதைப் பார்க்கலாம். அதன் பக்கத்திலிருப்பது மதுரநீர் உடைய குமரதீர்த்தம். அதன்மேல் செங்குத்தான, படிகள் இல்லாப் பாறைகளின் மீது ஏறி உச்சியைஅடைந்து பாண்டீசரைத் தரிசிக்கிறோம். அங்கு உள்ள மலடிக்கல்லை வலம் வந்தால் குழந்தை பிறக்கும் என்ற எண்ணத்தில் சிலர் சுற்றி வருகிறார்கள். சற்றே இடறினால் எலும்பையும் பொறுக்கக் கிடைக்காத அத்துணைப் படுபாதாளத்தில் விழ நேரிடும். இக் கோயிலில் கல்வெட்டுக்களுக்குக் குறைவில்லை. அவற்றுள் மூன்று கல்வெட்டுக்கள் சுப்பிரமணியர், பிள்ளையார் கோவில் பற்றியது. பரகேசரி வர்மன், முதலாம் இராசராசன், சுந்தர பாண்டியத் தேவர், மைசூர்கிருஷ்ண ராஜ உடையார் போன்ற மன்னர்கள் காலத்தவை அவை. அவற்றில் பெரும்பாலானவை கோயிற்குச் செய்த நிபந்தங்களையே குறிக்கின்றன. மேலும் ஒவ்வொரு விழாவையும் நடத்த ஒரு திருச்சபை இவ்வூரில் இருந்ததையும் அவற்றின் மூலம் அறிகின்றோம். இறங்கும்போது வெகு சுலபமாய் இறங்கலாம். யானையைப் போன்று ஏறும் போது இலகுவாய் ஏறி, இறங்கத் தடுமாறுபவரும் உண்டு. உடன் வந்த பேராசிரியர் ஓடிவரும் நீருடன் போட்டிபோட்டுக்கொண்டு இறங்குகிறார். வேகமாய் இறங்கினால் கால்கள் கெஞ்சும். கொஞ்சம் தடுமாறினாலும் ஒரு பல்கூட மிஞ்சாது. அடிவாரத்தை வந்தடைந்து நிமிர்ந்து பார்த்தால் வானத்திலிருந்து இழிந்து வந்தோமோ என்ற வியப்பு ஏற்படுகிறது. அத்துடன் விண்ணுலக இன்பத்தை விட்டுவந்த வேதனையும் தலைகாட்டுகிறது.





# பாண்டிக் கொடுமுடி

"நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க, இமைப் பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என்கிருர் திருவாசகத்தில் மாணிக்கவாசகப் பெருமான். 'செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே' எனப் பஞ்சாக்கரத் திருப் பதிகம் ஓதிய ஞானசம்பந்தப் பிள்ளையார், நல்லூரில் தமது திருமண நன்னுளில் கலந்து கொண்ட எல்லோ ருக்கும் முத்தி அளிக்கக் கருதி,

*"காத லாகிக் கசிந்து கண்ணீர் மல்கி*
*ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது*
*வேத நான்கினும் மெய்ப்பொருளாவது*
*நாத நாமம் நமச்சி வாயவே"*

என்று தொடங்கி நமச்சிவாயப் பதிகம் அருளுகிருர். "சிவாய நம என்று நீறணிந்தேன் தருவாய் சிவகதி நீ பாதிரிப்புலியூர் அரனே" என வேண்டிய அப்பர் சுவாமிகள் ஆழிமிசைக் கல் மிதக்கப் பாடியதும் நமச்சி வாயப் பதிகமே. அது

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே"

என ஆரம்பமாகிறது.

"சிவாய நம என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை" எனும் ஔவை வாக்காலும் 'பாடற்கினிய வாக்களிக்கும் பாலும் சோறும் பரிந்தளிக்கும்' என்ற பாட்டில் 'தேடற்கினிய சீரளிக்கும் சிவாய நம என்றிடு நீறே' என்னும் இராமலிங்க சுவாமிகளின் வாக்காலும் ஐந்தெழுத்தின் பெருமையை மேலும் உணர்கிரேம். கொடுமுடியைக் கும்பிடுவோர் அனைவரும் முடிவில் வீடுபேறு பெற வேண்டுமென்று கருதிய சுந்தரர் ஐந்தெழுத்து மந்திரத்தை ஒரு பதிகம் முழுவதும் வைத்துப் பாடி மகிழ்கிருர். 'இங்கிவர் தம்மை மறக்கவொண்ணு தென்றெழுந்த மெய்க்குறிப்பினில் எடுப்ப' என்றும், 'நண்ணிய அன்பினில் பிணிப்புற நவின்ருர் நமச்சி வாயத் திருப்பதிகம்' எனவும், கொடுமுடியில் நடந்த இந்நிகழ்ச்சியைப் பெரிய புராணத்தில் சொல் லோவியமாய் எழுதிக் காட்டுகிருர் சேக்கிழார் பெரு மான்.

சுந்தரத் தமிழில் சுந்தரர் பாடிய நமச்சிவாயப் பதிகத்தில் இதோ முதற்பாட்டு.

*"மற்றுப் பற்றெனக் கின்றி நின் திருப்பாத*
*மே மனம் பாவித்தேன்*
*பெற்றலும் பிறந் தேன் இனிப் பிறவாத*
*தன்மை வந் தெய்தினேன்*
*கற்றவர் தொழுதேத்துஞ் சீர்க்கறையூரிற்*
*பாண்டிக் கொடுமுடி*
*நற்ற வா உனை நான்ம றக்கினுஞ்*
*சொல்லு நா நமச்சிவாயவே"*

ஒவ்வொரு பாட்டின் கடைசியிலும் நற்றவா, நட்டவா, நாவலா, வல்லவா, நஞ்சணிகண்ட, சேடனே, விரும்பனே, நம்பனே, காரணா என்று பல பெயர்களில் இறைவனைச் சொற்றமிழால் பரிந்து அழைத்து "உனை நான் மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே" என்று முடிக்கிறார். இந்த நமச்சிவாயப் பதிகம் பாடப்பெற்ற பழம் பதியான பாண்டிக் கொடுமுடியில் வீற்றிருக்கும் நாதனை - சித்தரும் தேவரும் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு பத்தியினாற் பணிந்தேத்தும் பாண்டிக் கொடுமுடியாரைக் கண்டு, வணங்கி, வாழ்த்திப் பாடிப்பரவ உங்களை அழைத்துச் செல்லட்டுமா? இவ்வூர் கோவை மாவட்டத்தில் ஈரோடு - திருச்சி ரயில் பாதையில் ஈரோடிலிருந்து 39 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. உந்தூர்திகள் அடிக்கடி ஈரோடிலிருந்து செல்வதுண்டு. கங்கையிற் புனிதமாய காவிரி நல்லாள் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி ஓடி வருகிறாள். மேல்கரையில் அமைந்துள்ள கிழக்கு நோக்கிய இக்கோயிலின் சந்நிதிக்கு நேராகத் தானும் கிழக்கு நோக்கி ஓட ஆரம்பிக்கிறாள். கோவிலுக்கு எதிரில் காவிரிக் கரையில் கவினழகு படைத்த சக்தி விநாயகர் காட்சியளிக்கிறார்.

இக் கொடுமுடி கொங்கேழ் தலங்களில் ஒன்று. மூர்த்தி, தலம், தீர்த்தம், மூன்றாலும் சிறப்புடையது.

மூவர் முதலிகளால் பாடப்பெற்றது. மும்மூர்த்திகள் எழுந்தருளியுள்ள தலம். சுவாமி, திருமால், அம்மன் மூவருக்கும் தனித்தனியே மூன்று இராச கோபுரங்கள் மலையத்துவச பாண்டியனால் அமைக்கப்பெற்றுள்ளது மற்றுமொரு தனிச் சிறப்பாகும். மத்தியிலுள்ள கோபுரம் சற்றுச் சிறியது. வடக்கேயுள்ள முதற் கோபுர வாசல் வழியே உள் நுழைகிறோம். எங்கு முள்ளதுபோன்றிங்கும் சுவாமியைப் பார்த்து இடப் புறம் சந்திரனும் வலப்புறம் சூரியனும் உள்ளனர். இறைவனின் இரு கண்களாக இவ்விருவரும் திகழ் கின்றனர் என்பது வேதத்தின் சாரம். கொடி மரத் தின் முன் விழுந்து வணங்கி முன்மண்டபத்தில் எழுந் தருளியுள்ள அறக்கடவுளான நந்தியெம்பெருமானிடம் விடைபெற்று, விடையேறும் வித்தகனைக் காண உள்ளே செல்கிறோம்.

கொடுமுடி என்றால் பெரிய சிகரம் என்று பொருள். மகாதேவர் இங்கே மலைச் சிகர வடிவாய் எழுந்தருளியுள்ளார். மூல மூர்த்தி சுயம்புத் திருமேனி. கிழக்கு நோக்கியவர். ஒரு சாண் உயரம்தான் வெளியே தெரிகிறார். அகத்தியர் தழுவியதால் ஏற் பட்ட கைவிரல் தழும்பினை இவர்மேல் இன்றும் காண லாம். மலைக்கொழுந்தீசுவரர், மகுடேசுவரர், கொடு முடி நாதர், கொடுமுடி லிங்கர் என்று அழைக்கப் பெறுகிறார். இவ்விறைவனுக்குக் கல்வெட்டுக்கள் இட்டழைக்கும் இனிய பெயர்கள் திருப்பாண்டிக் கொடுமுடி மகாதேவர், ஆளுடை நாயனார் என்பன வாம். உட்பிரகாரத்தில் தென்புறம் அறுபத்து மூவரும் மேற்புரம் கன்னி மூலையில் காவிரி கண்ட விநாயகரும், உமா மகேஸ்வரரும், அகத்தியர் மணலால் அமைத்துப் பூசித்த அகத்தீசுவரரும், இடப்பாகம் தலையுடைய மயில்மீது இருபுறமும் வள்ளி தெய்வானை யுடன் காட்சியளிக்கும் ஆறுமுக சுப்பிரமணியரும்

சந்நிதி கொண்டிருக்கிறார்கள். வடபக்கம், ஆடிக் கொண்டிருக்கும் ஆடலரசு (நடராஜர்) காளிங்கராயன் கால்வாயில் பன்னிரண்டாம் மதகில் கண்டெடுக்கப் பட்டவர். காலங்கடந்த அம் மூர்த்திக்கு இணையாகப் பிற்காலத்தோரால் செய்துவைக்கப் பெற்றவர் அம்மன் சிவகாமசுந்தரி.

பாண்டி நாட்டில் உள்ள பலதலங்களில் இருப்பது போன்று இங்கும் இறைவனுக்குத் தெற்கில் இறைவி யின்சந்நிதி அமைந்துள்ளது. அம்மை சுமார் மூன்றடி உயரமுள்ளாள். நல்ல வடிவு. நான்கு கைகளையுடைய நாயகி. சௌந்தராம் பிகை, பண்மொழியாள், வடி வுடைநாயகி எனக் காரணப்பெயரிட்டு அழைக்கப்பெறு கிறாள். நாட்டுக் கோட்டை நகரத்தார் இவ்வம்மன் கோயிலைத் திருப்பணி செய்யத் தோண்டியபோது பிர காரத்தில் சில உலோகத் திருவுருவங்கள் கண்டு எடுக் கப்பட்டன. அவை திரிபுர சம்ஹார மூர்த்தி, சந்திர சேகரர், உமாமகேசுவரர், குஞ்சிததாண்டவர் (பரத் துவாஜருக்காகச் சித்திர நடனக்காட்சி கொடுத்த கோலம்) சோமாஸ் கந்தர் (இதில் கந்தன் பிற் சேர்க்கை) வீரபாகு, நால்வர், கண்ணப்பர் என்பன.

சுவாமி சந்நிதிக்கும், தேவி சந்நிதிக்கும் நடுவில் பின்புறத்தில் திருமால் வீரநாராயணப் பெருமாள் என்ற திருநாமத்தோடு கோயில் கொண்டுள்ளார். பள்ளிகொண்டிருக்கும் அப்பரந்தாமனின் திருவுருவம் பத்தடி இருக்கும். கருவறையின் உள்ளேயே பரிவார தேவதைகளாகப் பெருமாளின் இருபெரிய திருப்பாதம் முதல் ஆதிசேடனின் ஐந்து முடிவரை, ஆஞ்சநேயர், விபீஷணர், பரவாசுதேவர், கவேர முனிவர், பிரம்மா, நாரதர், ஸ்ரீதேவி, பூதேவி, கருடாழ்வார் ஆகியோர் சுற் றிலும் வீற்றிருக்கின்றனர். இன்று இவ்வீரநாராயணப் பெருமாளின் துவாரபாலகர்களாயுள்ளவர்களை மூன்று

நூற்றுண்டுகளுக்கு முன்பு மைசூரிலிருந்து ஸ்ரீரங்கத்திற்குக் காவிரி வழியாய்ப்படகு மூலம் கொண்டுசென்றனர். அப்போது இங்குள்ள கரையில் படகு கவிழ்ந்து விட்டபடியால் இவ்வூரியிலேயே எழுந்தருளியுள்ளனர். நமக்கெல்லாம் பெருமாளைச் சேவிக்க செய்ய அனுமதியளிப்பதுடன் அவர்கள் தங்களுடைய சரிதத்தையும் சொல்லாமற் சொல்லிக்கொண்டு நிற்கின்றனர். நல்ல வேலைப்பாடுகள். நாசூக்கானவை. சிற்றுளிபட்டுச் சீராயமைக்கப்பெற்ற சிலா மூர்த்தங்கள். துவாரபால மூர்த்திகளின் மேலுள்ள சிறப்பான அணிகலன்கள் மேலும் அழகுக்கு அழகு செய்கின்றன. வீரநாராயணர் கோயிலுக்கு வலப்புறமுள்ளது திருமங்கை நாச்சியார் சந்நிதி. இதற்குச் சற்றுத் தெற்கில் கோயிலின் கன்னி மூலையிலுள்ள ஆஞ்சநேயர் சந்நிதிக்கும் வடக்கே மத்தியிலுள்ளது தலவிருட்சமான வன்னிமரம். அது பிரம்மனின் அம்சமாம். அதனடியில் பிரம்மாவின் திருஉருவம் ஒன்றுள்ளது.

தினமும் ஐந்துகாலப் பூசை நடக்கும். மகுடேசுவரரையும் வடிவுடை நாயகியையும் ஆவணி, பங்குனி மாதங்களில் நான்கு நாட்கள் காலையில் சூரியன் தன் கதிர்க் கரங்களால் தொட்டு வழிபடுகிறுன். சூரிய பூசையென்று இதைச் சொல்லுவர்.

> *"தனைக்கணி மாமலர் கொண்டு தாடொழுவாரவர் தங்கள்*
> *வினைப்பகையாயின தீர்க்கும் விண்ணவர்......*
> *பாண்டிக்கொடு முடியார்*

என்கிறுர் ஞானசம்பந்தர். அப்பர் "பாண்டிக் கொடுமுடி நாதனைத் தொழ நம்வினை நாசமே" என உறுதிப்பாடுடன் கூறுகிறுர். அருணகிரியார் "இருவினைப் பிறவிக் கடல் மூழ்கி", "காந்தட் கரவளை சேர்ந்துற்றிடமத" என்ற இருதிருப்புகழ்ப் பாடல்களால் பாடிப் பாவுகிறுர்.

இவ்வூர் பற்றிய வரலாறு திருச்செங்கோடு தல புராணத்தை ஒட்டியது. ஆதிசேடனுக்கும், வாயுவுக்கும் ஏற்பட்ட போட்டியில் ஆதிசேடன் சுற்றிய மேருவின் ஆயிரம் சிகரத்தில் ஒரு சிகரம் அறுபட்டு வீழ்ந்த போது ஐந்து மணிகளாக உடைபட்டுச் சிதறியது. சிவப்பு மணி திருவண்ணுமலையாயும், மரகதம் ஈங்கோய் மலையாயும், மாணிக்கம் திருவாட்போக்கியாயும், நீலம் பொதிகை மலையாயும், வைரம் திருக்கொடுமுடியாயும் ஆயின என்று கூறும் இந்த ஊர்த் தலபுராணம். அப் புராணம் பன்னிரண்டு சருக்கங்களும் 819 பாடல்களுமுடையது; இத்தலத்து மகேசுவரரால் பாடப்பட்டுச் சிதைந்துபோனது போக எஞ்சியவை கோவை வித்துவான் கந்தசாமி முதலியாராலும் (சிவக்கவிமணி சி. கே. எஸ். ஸின் தந்தை) சாமக்குளம் வெங்கட் ரமணராலும் தொகுக்கப் பெற்றுள்ளன. திருக்கொடு முடி என்றலும் தீவினை கருக்கெடும் இது கைகண்ட யோகம்" என்றபடி அதைக் கையாண்ட கன்மாடனென்னும் வேதியனின் வயிற்றிலிருந்த கறை போய் உய்ந்தபடியால் கறையூர் எனவும் பெயர்பெற்றது. பாண்டி மன்னர்களால் பராமரிக்கப் பெற்று வந்ததால் பாண்டிக் கொடுமுடி என்றே போற்றப்பெற்றது. மலையத்துவச பாண்டியன் மகன் அங்கவருத்தனனின் குறைபட்ட பெருவிரல் அங்கம் வளரப் பெற்றதால் அங்கவருத்தனபுரம் எனவும் இவ்வூர் வழங்கும்.

இக்கோயிலில் கல்வெட்டுக்கள் எட்டுக்கும் அதிகமாக உள்ளன. அத்தனையும் இறையிலியாகக்கொடுக்கப் பட்டனவற்றைக் குறிப்பன. அவை கோமாறவர்மன் (கி. பி. 128) தேர்மாறவர்மன் (கி. பி. 710-765). சுந்தர பாண்டிய கேசரி (கி. பி. 1200-1250) ஆகியோரின் காலத்தவை. பாண்டிய மன்னர்கள் எட்டுக் கிராமங்களை மகுடலிங்கருக்குத் தேவதானம் விட்டு, எட்டுக் கிராமங்களை நாட்டுத் தலைவரின் ஆட்சிக்கு விட்டிருந்ததால்

நாடெட்டு தானமெட்டு என்று வழங்கியது. அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான நரசிங்க முனையரையரால் திருப்பணி செய்யப் பெற்றுள்ளதையும் அறியலாம்.

சித்திரையில் பெருவிழா (பிரமோற்சவம்); பத்தாம் நாள் விழா, தேரோட்டம். கார்த்திகை மாதக் கடைசிச் சோமவாரச் சங்காபிடேகமும், மார்க்கழித் திருவாதிரைத் திருமுழுக்கும் சிறப்புடையன. திருமங்கல நாண் நோன்பான மார்கழித் திருவாதிரையில் வீரநாராயணப் பெருமாள் தன் தங்கையான வடிவுடை நாயகியை ஊஞ்சலிலிட்டுப் பரிசுப்பொருள்கள் கொடுப்பது இன்றும் நடந்துவரும் ஓர் உற்சவமாகும். தீர்த்தமாய்த் தேவதீர்த்தமும், பிரம தீர்த்தமும், காவிரியும் திகழ்கின்றன. அகத்தியருடைய கமண்டல நீரைக் காக்கை உருக்கொண்டு கவிழ்த்தது மதகரி (விநாயகர்). அந்நிகழ்ச்சி இகழ்ந்த இக்காவிரியின் நடுவிலுள்ள "அகத்தியர் பாறையில்" என்று வரலாறு கூறுவர்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் சிறப்புற்று விளங்கும் இம்முதுநகர் வந்து நம் வினைகெட வணங்கி வாழ்த்தித் திரும்பும்போது திருநாவுக்கரசரின் இத் திருப்பாடலையும் வாய்விட்டு உரக்கப் பாடுவோமா ?

"சிட்டனைச் சிவனைச் செழுஞ் சோதியை
அட்ட மூர்த்தியை ஆல நிழலமர்
பட்டனைத் திருப் பாண்டிக் கொடுமுடி
நட்டனைத் தொழ நம் வினை நாசமே".



# கருவூர்த் திருவானிலை

புராணங்களில் ஆலங்காடு (வடவாரண்யம்), வஞ்சிமரக்காடு (வஞ்சுளாரண்யம்), இலந்தைக்காடு (பதரிகாரண்யம்), சண்பகக்காடு (ஷண்பகாரண்யம்), தவத்திற்குகந்ததெனத் தர்ப்பைச் சக்கரம் காட்டிய

காடு (நைமிசாரண்யம்), அரசமரக்காடு (பிப்பிலாரண்யம்) போன்ற காடுகளின் பெயர்கள் பல காணப்படுகின்றன. இக் கருவூர்ப்பகுதி வஞ்சிமரங்கள் அடர்ந்த காடாய் இருந்ததால் வஞ்சுளாரண்யம் என்று வழங்கப்பெற்றது. நகரமானபின் வஞ்சிமாநகரம் என்ற பெயர் வந்தது.

சிவத்தலங்கள் உள்ள ஊர்கள் சிலவற்றில் ஊரின் பெயரும் அங்குள்ள கோயிலின் பெயரும் வெவ்வேருக அழைக்கப்படுவது உண்டு. உதாரணமாகச் சாத்தமங்கைச் சிவன் கோயிலுக்கு அயவந்தி என்று பெயர். நெல்வாயில் முதல்வன் எழுந்தருளிய இடத்திற்கு அரத்துறை என்பது வழக்கம். திருவெண்ணெய் நல்லூர்ப்பித்தன் தளிக்குத் திருவருட்டுறை என்றும், திருநாவலூர்ப் பெம்மான் இடத்திற்குத் திருத்தொண்டீச்சரம் என்றும் குறிப்பிடப்பெறுகின்றது. திருநாறையூர்க் கங்காள தேவர் வதிவது சித்தீச்சுரத்தில். திருவாரூர் அரனூர் கோயிலைப் பூங்கோயில் என அழைப்பர். திரு ஆக்கூர்க் கோயிலைதான் தோன்றி மாடம் என்றுதான் கூறுகிருர்கள். அவைபோல இக் கருவூரில் உள்ள சிவன் கோயில் திருவானிலை என்று பெயர் வைத்துப் பேசப்படுகின்றது.

பிரமனுன அயனூர் அயர்ந்து துயில்கொண்டபோது காமதேனு இவ்வூர்ப் பரமனுன பசுபதி ஈசுவரரைப் பூசித்ததன் பயனுய்ச் சிருட்டித் தொழிலதனைச் செய்யும் திறம்பெற்றது எனத் தலபுராணம் கூறும். அதனுல் இது ஆனிலை என்ற காரணப் பெயரைப் பெற்றது. ஆதலால் அன்று இத்தலத்திற்குக் கருவூர், கற்பகபுரி என்ற பெயர்கள் உண்டாயின. ஆனுல் இன்று கருவூர் என்ற பெயர் சிதைந்துகரூர் என மாறிவிட்டது. கற்பகபுரி என்ற பெயர் மறைந்தே

போயிற்று. அமராவதிநதி என இக்காலத்தே சொல்லப்படும் ஆன்பொருனையின் பெருமையைச் சங்க நூல்களில் காணலாம். அத்துணைப் பழமையானது—செழிப்பானது—சிறப்புடையது. அந்நதியின் வட கரையில் அமைந்துள்ளது இக்கருவூர். இது (ஈரோடை) ஈரோடிலிருந்து 66 கிலோமீட்டர் தூரத்திலும் திருச்சியிலிருந்து 76 கிலோமீட்டர் தூரத்திலும் ஈரோட்டிற்கும் திருச்சிக்கும் இடையில் ரயில் பாதையால் இணைக்கப்பெற்று விளங்குவது. ரயிலடியிலிருந்து திருவானிலைக் கோயிலுக்குச் சுமார் இரண்டு கிலோமீட்டர் தூரம் இருக்கும்.

கோயிலின் முகப்பில் இராசகோபுரம் உள்ளது. ஏழு நிலைகளை உடையது. அதன் உச்சியில் ஏழு கலசங்கள் உள்ளன. கோபுரத்தின் எடுப்பான தோற்றமும் அது தாங்கி நிற்கும் எழிலான பதுமைகளும் கண்ணையும் கருத்தையும் கவருவன. சுற்றுப்புறச் சுவர்களில் கல்வெட்டுக்கள் பல நம் கண்ணிற் படுகின்றன. ஏழுநிலைக் கோபுரம் தாண்டினால் சிறிது தூரத்தில் மற்றொரு சிறு கோபுரம் தெரிகிறது. உட் கோபுரம் ஐந்து நிலைகளையுடையது. அழகானது. அதன் முகப்பில் முன் மண்டபம் ஒன்றும் உள்ளது. ராசகோபுரத்திற்கும் உள்கோபுரத்திற்கும் இடையில் வலதுபுறம் நூற்றுக்கால் மண்டபம் ஒன்றுண்டு. இதனைப் புகழ்ச் சோழர் மண்டபம் என்றழைக்கின்றனர். புகழ்ச்சோழர் அரசராய் விளங்கிய பிறகு அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராய்த் திகழும் பேறு பெற்ற பெருந்தகையாளர். உறையூரை முதலில் அரசிருக்கையாகக் கொண்டு செங்கோலோச்சியவர். அரசிறைபெற அவ்வப்போது கருவூர் வந்து தங்குவது வழக்கம். பெரியபுராணத்தில் காணப்படும் இவரது வரலாற்றைப் பார்ப்போமா?

சிவகாமியாண்டார் என்ற ஓர் அந்தணர் ஆனிலையப்பருக்கு மாலைகட்டிச் சாத்துவதற்காக வழக்கம்போல் குடலை நிறையப் பூவிட்டுத் தண்டில் தூக்கிக்கொண்டு கோயிலை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். ஆற்றிலே குளித்தபின் அவ்வழியே சென்று கொண்டிருந்த பட்டத்து யானை தன் மதச்செறுக்கால் அப்பூக் குடலையைப் பறித்து மலரைக் கீழே சிதறியது. தண்டு கொண்டடிக்க முயன்றார் அந்தணர். அடிபடாமல் யானையை விலக்கிச் சென்றனர் பாகரும் பரிக்கோற்காரர்களும். அந்தணர் தவறிக் கீழே விழுந்து 'சிவதா,' 'சிவதா' என்று புலம்பினார்; முறையிட்டார். இந்நிகழ்ச்சியை எறிபத்த நாயனார் கண்டார். தம் கையிலிருந்த மழுவால் யானையையும், பாகனையும், பரிக்கோற்காரர்களையும் வெட்டி வீழ்த்தினார். புகழ்ச் சோழருக்கு இச்செய்தி எட்டிற்று. சினந்து குதிரை மேலேறி யானையும் பாகர்களும் வெட்டுண்டு கிடந்த இடத்திற்குப் புறப்பட்டார். அதையறிந்து சேனையும் புறப்பட்டுப் பின்தொடர்ந்தது. பகைவர் யாரும் இலர். மழுவோடு எறிபத்தர் மாத்திரமே எதிரில் நிற்கக் கண்டார். யானையும் பாகரும் செய்த குற்றத்தை அவர் கூற அறிந்தார். அதன்பின் அரசன் "அங்கணர் அடியார் தம்மைச் செய்த இவ்வபராதத்துக்கு இங்கிது தன்னாற் போதாது என்னையும் கொல்ல வேண்டும்" என்று செங்கையால் உடைவாள் வாங்கிக் கொடுத்தனர். "என்னையும் கொல்லவேண்டும்" என்று கூறும் செம்மை மனம் படைத்த புகழ்ச்சோழர்க்குத் தீங்கு நினைத்தனனே எனத் தன்னைத்தானே நொந்து கொண்டது எறிபத்தரின் சீரிய உள்ளம். அரசன் கொடுத்த உடைவாளால் தன் கழுத்தை அரிந்து கொள்ள முயன்றார். அரசன் அவரைத் தடுத்தார். அசரீரி எழுந்தது. அது 'தொழுந்தகை அன்பில் மிக்கீர் உம் தொண்டினை மண்மேற் காட்டக் கூத்தர் அருளினால் இந்நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன"

என்றது. இறந்த யானை எழுந்தது. பாகர்களும் பரிக்கோற்காரர்களும் எழுந்தனர். குடலையிற் பூவும் நிறைந்தது. இந்நிகழ்ச்சியிலிருந்து புகழ்ச்சோழன் கரூரிலிருந்து அரசாண்டு வந்ததாய்த் தெரிகிறது. (எறிபத்த நாயனார் உற்சவம் பேரூர் அரசம்பலவாணர் கட்டளை நிதி—சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் நிறுவிய உதவிக்கட்டளை—யிலிருந்து இன்றும் மகாநவமியின் முந்திய நாளில் நடைபெற்று வருகிறது.)

இதற்குப் பின் திரைகொடுக்க மறுத்த அதிகனை அடக்கத் தன் தானைத் தலைவர்களை ஏவினார். அவர்களும் அரணை அழித்து வெற்றிகொண்டு ஊரைச் சூறையாடித் தலைக்குவியலையும், நிதிக் குவியலையும் கொண்டு வந்தனர். தலைக்குவியலின் நடுவே "புன் சடை" ஒன்றிருப்பதைப் புகழ்ச்சோழர் கண்டார். திருநீறும் கண்டிகையும். புன்சடையும் சிவ சின்னங்கள் ஆகும். அவற்றில் ஒன்றான புன்சடையைக் கண்டதும் அரனடியாருக்குத் தீங்கிழைத்துவிட்டதாக எண்ணித் துடித்தார். அக்கணமே அரச முடியைத் தன் மகன் தலையிற் சூட்டினார். புன்சடையுடைய தலையைப் பொற்றாலத்தில் வைத்துத் தம் தலையிற் றாங்கி எரிபுகுந்தார். சுந்தரமூர்த்தி நாயனார் இவர் பெருமையைப் "பொழிற் கருவூர்த் துஞ்சிய புகழ்ச் சோழர்க்கடியேன்" என்று திருத்தொண்டத் தொகையில் போற்றியுள்ளார். அத்தகைய பெருமையை உடையவர் பெயரால் அவர் வாழ்ந்த ஊரில் மண்டபம் எடுத்திருப்பது பாராட்டற்குரியது. அம்மண்டபத்தைக் கண்டதும் நம் சிந்தனை பழைய நிகழ்ச்சிகளை எண்ணத் தொடங்கியதில் வியப்பில்லையல்லவா!

இனி வலம்வந்து உட்செல்லலாம். தெற்குப் பிரகாரத்தில் கன்னி மூலையில் கிழக்கு நோக்கிக் காணப்

பெறுவது கருவூர்த்தேவரின் சந்நிதி. அதன் உட் சென்று வணங்குமுன் அவருடைய வரலாற்றை அறிந்து கொள்ள வேண்டும். கருவூர்த்தேவரைப் பதினெண் சித்தர்களில் ஒருவர் என்பாருமுண்டு. கருவூரிற்பிறந்த வர். அதனால் கருவூர்த்தேவர் என்றே அழைக்கப்பெற் றார். பன்னிரு திருமுறைகளில் ஒன்பதாவது திருமுறை யருளிய ஒன்பதின்மரில் நம்கருவூர்த் தேவரும் ஒருவர். பத்துஊர்கட்குப்பதிகங்களாகவே பாடியுள்ளார். மொத் தம் 150 பாடல்கள். அத்தனையும் மணியானவை.

அவற்றில் ஒன்றைமாத்திரம் பார்ப்போம். திரு முகத்தலையூர் இறைவனைப் பாடிய பதிக்கத்தில் முதற் பாட்டு. எளியபாட்டு. பொருளும் எளிதில் எல்லோருக் கும் புரியும்.

புவன 'நாயகனே அகவுயிர்க்கு அமுதே'
பூரணா ஆரணம் பொழியும்
பவளவாய் மணியே பணிசெய்வார்க்கு கிரங்கும்
பசுபதீ பன்னகா பரணா
அவனி ஞாயிறு போன்று அருள்புரிந்து அடியேன்
அகத்திலு முகத்தலை மூதூர்த்
தவள மாமணிப் பூங்கோயிலும் அமர்ந்தாய்
தனியனேன் தனிமை நீங்குற்தகே'

கருவூர்ப் புராணத்தில் கடைசியில் கருவூர்த்தேவர் கதிபெறு சருக்கம் என்ற ஒரு சருக்கம் உண்டு. நூற் றைம்பத்தேழு பாடல்களால் இவர் பெருமை அதில் பேசப்பெறுகின்றது. இவர் நல்ல சிவயோகி. சிறந்த சித்தர். சீவன்முத்தர். மெய்ஞ்ஞானி. "மெய்யன்பர் நாரியர்பால ருடேயிருப்பினும் மெய்ஞான வீட்டின்பம் மேவுவரே" என்பதற்கிணங்க இவர் மாதரை விட்டு விலகாது அவருடன் கூடி, ஆடி, மகிழும்போதிலும் சித்த நிலை திரியாது சிவயோகியாய் இருந்தலையுணரா இவ்

வூர் அந்தணர் இவரை இகழ்ந்துரைத்தனர். அவர்கள் உணர்ந்து உய்யும் பொருட்டுக் கண நேரத்தில் காலமல்லாத காலத்தில் கனமழை பெய்வித்தும், மழையின்றி ஆற்றைப் பெருக்கெடுத்து வரச்செய்தும் கோயிற் கதவத்தின் தாளைத்தானே திறக்கச்செய்தும் பல அற்புதங்களைச் செய்து அவ்விடத்தை விட்டகன்றார். பின் அவர் நெல்வேலிக்குவந்து சிவபெருமானை அழைத்த போது காலசந்தி பூசையானதால் ஏன் என்று கேளாதிருப்பக் கோபித்துச் சிவபெருமான் இவ்விடத்தில்இல்லையோ என்று வினவிவிட்டு மானூருக்குச் சென்றுவிட்டார். ஆவணி மூலநாளில் இறைவனே மானூர் வந்து காட்சி கொடுத்தருளினார். மானூர் வேதியரும் கருவூர்த் தேவரை நிந்தனை சொல்லக் கேட்டு அவ்வூரில் "வேதியர் இல்லாதொழிக" எனச் சபித்தார். அதன் பின் திருக்குருகூர் எனும் ஆழ்வார் திருநகரி, காந்தீசரம், திருச்செந்தூர் போன்ற பழம் பதிகளில் உறைந்தார். பொதிகைமலை இவர் சாதனைக்குப் பொருந்தியதாயும் உகந்ததாயும் இருந்தது. குருமுனிவன் போன்ற பழம்பெரும் முனிவர்களையும், சித்தர்களையும், ஜீவன்முத்தர்களையும், தெய்வத் திருவாளர்களையும் தன்னகத்தேயுடைய தண்பாண்டி நாட்டுப் பொதிகை கருவூர்த்தேவருக்குக் கனிவைக் கொடுத்தது. தஞ்சை இராஜராஜேச்சுரம் பெரிய கோயில் அட்டபந்தனக் கலவை ஒன்று சேரவில்லை; இவர் தன் திருவாய்த் தம்பலத்தை உமிழ்ந்து ஒன்றுசேரச் செய்தார். திருவரங்கம் வந்த போது விலைமாது ஒருத்தி வலிதிற் கைப்பற்றி வருந்தியழைக்க அவள் வீடு சென்றார். அரங்கத்தம்மானிடம் வேண்டிப்பெற்ற முத்தாரத்தை அவ்வேசிக்கு வீசிவந்தார். அதை நிரூபிக்க அரங்கநாதரே அசரீரியில் சாட்சி சொல்லவும் வைத்தார். கடைசி காலத்தில் கருவூரில் அந்தணர்கள் காழ்ப்பால் இவர் "வாமதந்திரப் பூசகர்" என நிந்தைமொழி கூறினர். இல்லை என்பதை நிரூபித்தபிறகு கருவூர்த்தேவர் பசுபதீசுவரருடன்

14

இரண்டறக்கலந்தருளினார். அவ் வருளாளர் இருந்தது இவ்விடம் என்பதை அறிந்ததும் மயிர்க்கூச்செரியவில்லையா? சந்நிதியை விட்டுவர மனமின்றி வெளிவருகிறோம். என் செய்வது? இனியும் பார்க்கவேண்டியவையும் பணிய வேண்டியவையும் நிறைய இருக்கின்றன அல்லவா?

வெளிப்பிரகாரத்தில் மேற்குப் பகுதியில் தல விருட்சமான வில்வமரம் நிற்கிறது. உள்ளே மூலத்தானமூர்த்தி சுயம்புத் திருமேனி. சுமார் இரண்டடி உயரம் இருப்பார். வடக்குப் பக்கம் சற்றே சாய்ந்திருக்கிறார். தாம் சாய்ந்து கருவூர்த் தேவருக்கு இடம் கொடுத்ததாய்க் கூறுவர். இந்த இறைவருக்குப் பசுபதீசுவரர் என்றும் கல்யாண பசுபதீசுவரர் என்றும் ஆனிலையப்பர் என்றும் ஆதிநாயகர் என்றும் பெயர். ஞானசம்பந்தப் பெருமான் இவரை “மெய்ப்பத்தர்சேர் கருவூருள் ஆனிலை அத்தர்” என்று அழைக்கிறார்.

காமதேனு நாள்தோறும் பாலைச் சொரிந்து வழிபட்டதாகவும் அதனால் பசுபதீசுவரர் என்ற திருநாமம் ஏற்பட்டதாயும் புராணம் கூறும். சுக்கிரன் மிருதசஞ்சீவி மந்திரம் உபதேசிக்கப்பெற்றது, இத்தலத்தில் தவஞ் செய்ததின் பலனாற்றான் எனத்தல புராணம் மேலும் கூறும். தேவர்களும், திக்குப் பாலர்களும் பூசித்துள்ளனர். விபண்டன் என்னும் வேடன் களவாடுவதற்காக அடியவர்போல் வேடம் பூண்டு மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் “மைபொதி விளக்கேயன்ன மனத்தினிற்கருப்பும் வைத்து” வந்தபோது கூட்டநெருக்கத்தில் அகப்பட்டு இறந்தான். சிறப்பான அந்நாளில் தன்னை வணங்கியதற்காக எம்பெருமான் விபண்டனுக்கு முத்தியளித்தருளினார். இப்பொழுது பங்குனிப் பிரமோற்சவம்தான் நடைபெறுகிறது. பதினொருநாள் பெருவிழா. மார்கழித் திருவா

திரை நாளில் அம்பலவருக்கு அபிடேகம் உண்டு. தினமும் ஐந்துகாலப் பூசை.

உட்பிரகாரத்தில் தெற்கு வரிசையில் அறுபத்து மூவர் எழுந்தருளியுள்ளனர். அவர்களில் எறிபத்த நாயனாருக்குத் தனிச்சந்நிதி உண்டு. இத்தலத்துக் குரிய நாயனாரல்லவா! மேற்கு வரிசையில் கன்னி விநாயகர், கஜலட்சுமி, அறுமுகவன், கரிய மல்லீசுவரர் காந்திமதியம்மை ஆகியோர் சிலாமூர்த்திகளாய் எழுந் தருளியுள்ளனர். வடக்குப் பிரகாரத்தில் பஞ்சலிங்க மூர்த்திகள் அம்பிகைகளுடன் அமர்ந்துள்ளனர். சண் டேசுவரர் கருப்பக் கிரகத்தின் சமீபமாய்ப் பிரகாரத் தில் உள்ளார். அம்மன் சந்நிதிக்குப் போகும் வழியும் வடக்குப் பிரகாரத்தில் இருக்கிறது. அதற்குச் சற்றுக் கீழ்ப்புறமாகக் கோயிலின் உட்புறமே தாடகை தீர்த் தம் அமைந்திருக்கிறது. கோவிலுக்குக் கொஞ்ச தூரத்தே ஓடும் ஆம்பிரநதியும் இத்தலத்தின் தீர்த்த மாகும்.

இனி அம்மன் சந்நிதிக்குச் செல்லலாமா? இறை விக்கு இங்கு இரு சந்நிதிகள் இருக்கின்றன. கிழக்கு நோக்கியுள்ள அம்பிகையை அலங்காரவல்லி என்றும் அவள் ஞானசக்தி வடிவானவள் என்றும் சொல்வர். தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ள அம்மையைச் சௌந்தரநாயகி என்றும், இவள் கிரியா சக்தி வடிவா னவள் என்றும் கூறுவர். உமையம்மையார் இறைவ னின் இடது பாகம் பெறத் தவமியற்றிய தலங்களில் இதுவும் ஒன்று. அப்போது அவ்வம்மையின் பெயர் அலங்காரவல்லி என்பது. ஆதியிலிருந்த இத்திரு வுருவம் சிறிதே பின்னப்படவும் வேறொன்றை அரசன் அமைக்க எண்ணி ஆவன செய்தான். ஆனால் இறைவி அரசன் கனவில் தோன்றி அலங்காரவல் லியை அப்புறப்படுத்த வேண்டாம் எனக் கட்டளையிட

அதனை எடுக்காது சௌந்தரவல்லிக்குத் தனிக் கோயில் எடுப்பித்தனன்.

இப் பசுபதீச்சுரத்தைப் பாடிப் பரவியவர்கள் பலருண்டு. முதன்மையானவர் ஞானசம்பந்தர். அவர் இந்தளப்பண்ணில் இசைத்துப் பாடிய பதிகத்தின் முதற்பாட்டைப் பார்ப்போம்.

"தொண்டெலா மலர் தூவி யேத்தநஞ்
சுண்ட லாருயிராய தன்மையார்
கண்டனூர் கருவூருளானிலை
அண்டனூர் அருளீயு மன்பரே"

அருணகிரிநாதர் அருளிய எட்டுத் திருப்புகழ்ப் பாடல்கள் இத்தலத்திற்குண்டு. அதிலொன்று.

"மதியால் வித்தகனாகி மனத்தாலுத்தமனாகிப்
பதிவாகிச் சிவஞான பரயோகத் தருள்வாயே
நிதியே நித்தியமே யென் நினைவேநற் பொருளாயோய்
கதியே சொற் பரவேளே கருவூரிற்பெருமாளே"

இத்தலத்துப் புராணம் இயற்றியவரின் பெயர் தெரியவில்லை. மலர்ப்பணி செய்த சிவகாமி யாண்டார் சரிதமும் அதனால் விளைந்த எறிபத்தர் சரிதமும் தன்னகத்தே உடையது. 21 சருக்கங்களும் 1129 பாடல்களும் காணப்படுன்றன. பதிப்பித்தவர் சிவக்கவிமணியின் தந்தை, கோயம்புத்தூர், வித்துவான் கந்தசுவாமி முதலியார் என்றறிகிறோம். கருவூரின் சுற்றுப்புறத்தையும் தெரிந்து கொள்ளவேண்டாமா? இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் சிறுமலையைக் குடைந்து உண்டாக்கிய குடை கோயில்தான் தான்தோன்றிப் பெருமாள் என்ற விஷ்ணு (திருமால்) கோயில். சற்றுத் தூரத்தே ஆம்பிர நதியும் மணிமுத்தா நதியும் காவிரி நதியும் கூடுகின்ற முக்கூடல் என்ற தலத்தில் மணியீசர் எழுந்தருளியுள்

ளார்; வடகிழக்கே சுமார் மூன்றுகிலோ மீட்டர் தூரத்தே வெண்ணெய்மலை என்ற வெண்மையான மலையொன்றுள்ளது. குன்றுதோறுடும் குமரன் இம்மலையிலும் கோயில் கொண்டுள்ளார். காமதேனு படைப்புத் தொழில் புரிந்தபோது உயிர் வர்க்கத்துக்கு உணவுக்காக வெண்ணெயை உருட்டி வைத்திருந்ததென்றும் பின் அது கல்லாய் மாறிக் கவினழகுடைய மலையாய்க் காட்சியளிக்கிறது என்றும் தல புராணம் கூறும்.

கடைசியாக இக்கருவூரின் கடந்தகாலச் சரித்திரத்தைப் புரட்டிப்பார்த்து இக்கட்டுரையை முடிப்போமா? பழங்காலமுதல் சோழர்களின் தலைநகர்களில் ஒன்றாய்த் திகழ்ந்திருந்த தென்பதைச் சூரசங்காரத்தின் பின் தெய்வயானையின் மணக்கோலம் காணத் திருப்பரங்குன்றத்திற்கு வரும்படி இந்திரன் இவ்வூரை அப்போது ஆண்ட முசுகுந்தச் சக்கரவர்த்திக்குக் கல்யாணத் திருமுகம் அனுப்பியதாய்க் கூறும் கந்தபுராணச் சரிதத்தால் அறிகிறோம். இக்கோயிலில் சுமார் பதினேழு கல்வெட்டுக்கள் உள்ளன. ஆறு கல்வெட்டுக்கள்படி எடுக்கப்பட்டுள்ளன. அவை 11, 12, 13ம் நூற்றாண்டில் வெட்டப்பட்டவை எனக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

" மன்னர் பெருமான் அநபாயன் வருந்தொல் மரபின்
முடிசூட்டுந்
தன்மை நிலவு பதிஐந்தின்ஒன்றாய் நீடுந்தகைத் தவ்வூர்"

என்ற சேக்கிழார் மொழிக் கொப்பச் சோழர்கள் முடிசூட்டிக்கொள்ளும் பழம்பதிகளான காவிரிப்பூம்பட்டினம், கருவூர், திருவாரூர், உறையூர், செய்ஞ்ஞலூர் ஆகிய ஐந்தினுள் ஒன்றாய் விளங்கிய இக்கருவூர் பற்றியும் இவ்வூர் மக்களின் உயர்ந்த நாகரீகம் பற்றியும் டாலமி என்னும் ஐரோப்பிய யாத்ரீகர் தம்குறிப்

பில் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே எழுதியுள்ளார். இவ்வூர் ரோமாபுரியுடன் வர்த்தகம் செய்துவந்த வரலாறும் நமக்குக்கிடைக்கிறது. ஆதாரமாகப் பூமியில் புதையுண்ட பழங்கால ரோமாபுரி நாணயங்களைத் தற்சமயம் இவ்வூர்ப் பகுதியில் நிலத்தைத் தோண்டும்போது கண்டெடுக்கின்றனர். இவ்வூருக்காகப் பாண்டிய, சேர, சோழர்கள் தமக்குள் போரிட்டுக் கொண்டதுண்டு. 1736 ல் சந்தாசாகிப் இதை முற்றுகையிட்டுத் தோற்றேடினன். 1760ல் இக்கருவூர் ஆங்கிலேயர் கைக்கு வந்தது. எட்டு ஆண்டுகளுக்குப்பின் ஹைதரலியிடம் போயிற்று. அதற்கப்புறம் அடிக்கடி கைமாறிய பின் 1799ம் ஆண்டு முதல் 1947 வரை ஆங்கிலேயரிடம் நிரந்தரமாயிருந்தது. கோயமுத்தூர் மாவட்டத்தில் ஒரு தாலுகாவாகத் திகழ்ந்த இக்கருவூர் பிற்காலத்தே திருச்சிராப்பள்ளி மாவட்டத்திற்கு மாற்றப்பட்டது.

கணக்கற்ற ஆண்டுகள் பல கடந்த பின்பும், மாட்சிமையுடன் ஆண்ட மன்னர்கள் பலர் மாண்ட பின்பும் அவர்கள் ஓச்சிய செங்கோல்கள் ஒழிந்தபின்பும், அவ்வரசர்கள் தங்களுக்காக அமைத்துக்கொண்ட அழகிய, பெரிய அரண்மனைகள், கோட்டை கொத்தளங்கள் அழிந்த பின்பும், அழியாது, மறையாது, திறம் குன்றாது, காலம் கடந்து, இன்னும் இங்கு நின்று நிலைத்திருப்பது பசுபதீச்சுவரரின் திருக்கருவூரானிலை கோயில் ஒன்றேதான். பெரியோர்கள் பலர் பாடிப் பரவிப் பல்வகைக் கூத்தும் ஆடிக் கும்பிட்ட இப்பெருங் கோயிலைக்கண்டு வணங்கும் பேறுபெற்றதால் "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என்று நாமே நம் நெஞ்சை வாழ்த்திக் கருவூரிலிருந்து விடைபெறுவோமாக



வெண்ணெய் மலையின் வடக்குப்புறத்திலுள்ள வெண்ணெய் போன்ற பாறைகள்



வெண்ணெய் மலையின் முன்புறத்தோற்றம்.

# வெண்ணெய் மலை

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் சிறந்த முருகனடியார்களில் ஒருவர். முருகனையே முழு முதற் கடவுளாகக் கொண்டவர். அவர் முருகன் புகழ்பாடியாத்த நூல்கள் எத்தனையெத்தனையோ உண்டு. அவற்றில் ஒன்று மயிலலங்காரம். அம்மயிலலங்காரத்தில் ஒரு பாட்டு.

“ மயில் ஆடுகளிறு ஆய பரிநீர்கள்,
அமரர் வீரம் மலிசேவல் வீறு
அயில் ஞானம் இருமாதர் செயல்
ஆசை இருதாள்கள் அரன் வேதன் நூல்
பயில் வீடு முகம் ஆறு
திசைதோள்கள் நெறி ஈடில் பரமான தேவு
பயில் வீடு மேனி முருகோன் என
நிசம் ஓர்தல் (அரிது) ஓரில் வினை தீருமே.

மேலுள்ள பாட்டைச் சில முறை படித்துப் பாருங்கள். பின்பு கீழுள்ள பதவுரையுடன் பொருத்திப் பாருங்கள். எளிதாய்ப் புரியும்; பொருளும் விளங்கும்.

களிறு—திருஞான வேழம். பரி—வாகனம். மயில் தாமத குணமும், ஆடு ராட்சத குணமும் யானை சத்துவ குணமும் ஆம். இவை முறையே நீலம் சிவப்பு, வெள்ளை நிறமுள்ளன. இம்மூன்று குணங்கட்கும் மேற்பட்டுக் குணாதீதனாக உள்ளவன் முருகன். நீர்—குணம், சேவல் வீரம் செறிந்த முருகனுடைய

வெற்றிச் சின்னமாகும். இது கொடி, வேல் ஞானமும், வள்ளி தெய்வானை என்ற இருவரும் கிரியை, இச்சை என்னும் சத்திகளுமாய் செயல்—கிரியை; ஆசை—இச்சை. அரன்—சிவபெருமான். அரன் கூறியது ஆகமம். பிரமன் கூறியது வேதம். இவ்விரண்டும் முருகன் திருவடிகளாம். ஆறுதிசை—ஆறு திருமுகம். பன்னிரு நெறிகளும் அவனது பன்னிரு தோள்கள். இத்தகைய முருகப்பெருமான் அதாவது பரப் பிரம்ம மென்ற அகண்ட வத்துவான முழுமுதற் கடவுள். அவன் அருளொளி வீசும் பெருமான் என்ற தத்துவக் கருத்தை யறிவது அரிது. அறிந்தால் அவர்கள் வினைகள் முழுதும் இல்லாதொழியும். நாமரூபமற்ற அகண்ட பொருளே, திருவுருவாகி, நாமெல்லாம் உய்யும் பொருட்டு, மேற்கண்ட அங்கங்களுடன் உருவெடுத்து விளங்கும் கருணையுள்ளவனுகிக் கார்த்திகேயன்—கந்தன்—கடம்பன்—அறுமுகவன்—செந்திலாதிபன் எனக் காட்சியளிக்கிருன். இப்பெருமானை விட வேறு ஒரு கடவுள் தனியே இல்லை. எல்லாக் கடவுளும் முருகன் வடிவுள் அடங்கும் என்பது கருத்து. இத்தகைய தன்னிகரில்லாத தெய்வம் குடிகொண்டிருக்கும் பழமையான கொங்கு நாட்டுக் குன்றுகளில் ஒன்றிற்கு உங்களை கூட்டிச் செல்லாமா?

கோவையிலிருந்து கரூர் செல்லவேண்டும். கரூர் ஈரோட்டிலிருந்து 66 கிலோமீட்டர் தூரத்திலும், திருச்சியிலிருந்து 76 கிலோ மீட்டர் தூரத்திலும் ஈரோட்டிற்கும் திருச்சிக்கும் இடையில் ரயில் பாதையால் இணைக்கப்பெற்றுள்ளது. இக் கரூரிலிருந்து மூன்று கிலோ மீட்டர் வடகிழக்கிலுள்ளது நாம் செல்ல இருக்கும் குமரன் குன்று. மலையானது சிறு பொற்றையே. பொற்றை எனினும் பொலிவு உடையது. வெண்மையான கற்களையும் பாறைகளையும் அங்கும் இங்குமாகக் காணலாம். இப்பாறைகள்

உச்சி வெய்யிலிலும் குளிர்ச்சியைத் தரும் வெண்ணெய் மலையாய் ஒரு காலத்தில் திகழ்ந்தன. இன்று வெண்மையான பாறைகளாய்க் காட்சியளிக்கின்றன. வெண்ணெய்த் தன்மை நீங்கினும் வெண்மைத் தன்மை நீங்கவில்லை. மூவரம்மானையில் வரும் ஒரு பாடலும் இவண் நினைக்கத் தக்கது.

"அட்ட திசை பரவும்
  ஆநிலையார் பசுபதியார்
பட்டிக் கடங்காப்
  பசுப்படைத்தா ரம்மானை
பட்டிக் கடங்காப்
  பசுப்படைத்தா ராமாயின்
கட்டிக் கறந்து கடைவ
  தெவ்வா றம்மானை
கடைந்தன்றோ வெண்ணெய் மலை
  கண்டது காணம்மானை"

பிரளய காலத்திற்குப்பின் பிரமன் தவமியற்றச் சென்றபோது காமதேனுவானது கருவூர், வஞ்சி வனத்து ஆதிலிங்க மூர்த்தியைத் தொழுது படைப்புத் தொழிலைச் செய்து வந்தது. அவ்வனத்துள் நிலைத்திருந்த கருக்களுக்கு உருக்கள் கொடுத்துப் படைத்த காரணத்தால் இவ்வனத்திற்குக் கருவூர் என்றும் ஆநிலை என்றும் பெயர் வந்தது. தன்னால் படைக்கப் பட்ட உயிர்களுக்காக வெண்ணெயை உண்டாக்கி அதை வெள்ளிமலை எனும்படிக் குவித்துப் பக்கத்தே தேனு தீர்த்தம் என்ற தீர்த்தத்தையும் உண்டு பண்ணியது. அதன் மூலம் காத்தல் தொழிலையும் புரிந்துவந்தது காமதேனு. அரியும் பிரமனும் தங்கள் தொழில்களை ஒப்புக்கொள்ளும்வரை இவ்வாறு செய்து வந்ததெனத் தல புராணம் கூறும். வானுலகு திரும்புங்கால் வற்ரு அருளுடை வள்ளலிடம்—

ஆநிலையப்பரிடம்—பசுபதி நாதரிடம் காமதேனு வெண்ணெயை உணவாக உயிர்கட்கு அளித்து வந்தேன். அதைப் பின்வரும் சந்ததியாரும் அறிந்து கொள்ளுமாறு ஒரு வெண்ணெய் மலையுண்டாக வேண்டும் என்று வேண்டிற்று. அதனால் தோன்றியதே இவ்வெண்ணெய் மலை. மலையைப்பார்த்து மலைத்து நின்றால் குமரனை எப்போது கும்பிடுவது? வாருங்கள் மலைமீது ஏறுவோம். அதிக உயரமில்லை. அதனால் ஏறுவதும் கடினமில்லை. நன்கு கட்டிய கருங்கற் படிகளின்மீது நடந்து உயரே செல்கிறோம். ஏறு மயில் ஏறும் ஆறுமுகன் இங்கு வேலின்றி மயிலின்றி விரும்பும் வள்ளி தெய்வானையுமின்றித் தன்னந்தனியே தண்டபாணிக் கோலத்தில் காட்சியளிக்கிறான். அவன் திருநாமம் பாலசுப்பிரமணியன். சுமார் நான்கடி உயரம். தேவர்கள் தை மாதத்தில் வந்து வெண்ணெய்மலை முருகனை வேண்டி வணங்கிச் செல்கின்றனரென்றும் கார்த்திகை மாதத்தில் வழிபடுவோர் சிறப்படைகின்றனரென்றும் சொல்லப்படுகிறது. இக்கோயிலைச் சூழ்ந்தவர்களைக் குறைகள் சூழாது. இம்மலையை நாடிவந்தவர்கட்கு நல்வினைப்பயன் தேடி வரும். கெட்ட வினைகள் விட்டோடும். கயிலையைச் சுற்றிய பலனைக் கைமேற் பெறுவர் எனத் தலபுராணம் குறிப்பிடும்.

இத்தண்டபாணியை வழிபட்டுப் பலனடைந்தோர் பலர் இருப்பினும் முக்கியமானவர்களையாவது தெரிந்துகொள்ள வேண்டாமா? எந்த முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு முருகனது திருமணத்தைக் காண இந்திரன் அழைப்பு விடுத்தானோ அந்த முசுகுந்தன் இவ்வெண்ணெய் மலைநாதனை வழிபட்டுப் பேறுபெற்றுள்ளான். தாடகை புத்திரப்பேறு அடைந்ததும் இக்குமரனைக் கும்பிட்டதனாலேதான். பிரமனும் இவ்வெண்ணெய் மலையானைப் பூசித்து வரம் பெற்றுள்ளான்



காமதேனு தோற்றுவித்த தேனினுமினிய தேனு தீர்த்தம்.

பகவன் என்ற காசி நகரத்து யோகிக்கு ஞானக் கண்ணுற் காணும்படிக் காட்சி நல்கிய நல்ல மூர்த்தி வெண்ணெய் மலை மூர்த்தியே. கருவூர்த் தேவரும் கோவிலுக்கு வடபால் குடிகையில் தங்கி யந்திரம் அமைத்து யோக சாதனம் செய்து வந்திருக்கிருர். புகழ்ச்சோழன் காலத்தில் இக்கோயில் பழுது பார்க்கப்பட்டுக் கருவூராருக்குச் சந்நிதியொன்றும் இக் கோயிலுள் எழுப்பப்பெற்றதாய்ச் சரிதம் நமக்குச் சொல்லும். இன்றும் கோயிலின் வடக்குப் பிரகாரத்தில் அச்சந்நிதியைக் காணலாம். சுற்றுப் பிரகாரத்துள் காசி விசுவநாதருக்கும் விசாலாட்சிக்கும் பிற்காலத்தே திருப்பணி செய்தவர்கள் சந்நிதியமைத்துள்ளனர்.

வெண்ணெய் மலையிலுள்ள தீர்த்தம் தேனு தீர்த்தம். திருக்கருவூர் ஆநிலைத் தலபுராணத்துள் வரும் தீர்த்தங்களில் இதுவும் ஒன்ருகும். புத்திரப் பேறு விரும்புவோர் இப்புனித தீர்த்தமாடிப் புண்ணிய முருகனை வேண்டிப் பெறுகின்றனர். வைதாரையும் வாழவைக்கும் வடிவேலன் வெண்ணெய் மலை வந்து வேண்டுவோர் வேண்டுவதை விரும்பியளிப்பதில் வியப்பொன்றும் இல்லையல்லவா?

தினமும் நாற்காலப் பூசை நடந்துவரும் இவ் விறைவனுக்குத் தைமாதத்தில் பத்து நாள் பிரம் மோற்சவம். அதிலும் தைப்பூசம் சிறப்பு நாள். கந்த சட்டி விரதமும் கொடிகட்டிக் கொண்டாடப்படுகிறது. ஆடிக் கிருத்திகைதோறும் இவ்விறைவன் மயில் மீதமர்ந்து நடக்க முடியாத பத்தர்களைக் கருவூர்வரை தேடிச் சென்று காட்சி கொடுத்து வருகிருர். உற்சவத் திற்கான உற்சவ மண்டபமுண்டு. அதுபோழ்து பக்தர்கள் தங்கப் பல இடங்கள் உண்டு. திருமடங் களும் உண்டு. இறைவனுக்குப் பூத்திருப்பணிக்கென நந்தவனமும் உண்டு.



"திருப்பணி செய்து நற்புகழீட்டிக் கொண்ட
திரு. முத்துக்கறுப்பன் செட்டியார் சிலை"

திருவருணை அருணகிரிநாதர் இப்பாலசுப்பிரமணியனைப் பாடிப் பரவியிருக்கிறார் என்பதை அவரது திருப்புகழால் அறியலாம். "பழைமை செப்பியழைத்திரமித்துடன்" என்று தொடங்கித் "தரள பொற்பணி கச்சுவிசுத்திரு, குழை திருத்தியருத்தி மிகுத்திடு திருவெண்ணெய்க் கிரியுற்றடியர்க்கருள் பெருமாளே" என முடிகிறது அத்திருப்புகழ். குடந்தைப் புலவர் குழந்தைவேற் பிள்ளையால் இயற்றப்பெற்ற தலபுராணம் ஒன்றுண்டு. கோவைக் கவியரசு நடேச கவுண்டரும் பாடியுள்ளார்.

நாட்டுக்கோட்டை நகரத்துச் செட்டியார்கள் மரபில் வந்த திரு. முத்துக்கறுப்பன் செட்டியார், அவர் மகன் திரு. திண்ணப்ப செட்டியார், அவர் மகன் திரு. சொக்கலிங்கம் செட்டியார் ஆகியோர் இக்கோயிலுக்கு வாழையடி வாழையாய்த் தொண்டு புரிந்து திருப்பணியாற்றிக் கும்பாபிடேகமும் செய்து வருவது குறிப்பிடத்தக்கது. இம் முத்துக்கறுப்பன் செட்டியாரின் சிலை முருகன் முன்னிலையில் கூப்பிய கரங்களுடன் தண்டபாணிக்குத் தண்டமிட்டபடிச் சந்நிதியின் தென்புறம் நின்ற வண்ணம் காட்சியளிக்கிறது. தெய்வத்தன்மை பொருந்திய மலைமீதுள்ள தெய்வத்தானம் கண்கவர் கருங்கற் கட்டிடத்தாலானது. சுத்தமாயுள்ளது. உள்ளே நுழையும்போதே நம்மையறியாது நல்ல மன அமைதியை இக்கோயில் தருகிறது. சுற்றுப்புறமும் சூழ்நிலையும் சந்தடியற்று இருப்பது புற அமைதியையும் கொடுக்கிறது. மன அமைதியுடன் கும்பிடும் நம் இதயத்தில் குமரன் குடியேறுகிறான்; குலவுகிறான்; கொஞ்சுகிறான்; அருள் புரிகிறான், ஆனந்தம் தருகிறான். வெண்ணெய் மலையைவிட்டு இறங்கி வந்தும் நம் உள்ளத்தை விட்டு அவன் இறங்குவதில்லை. வெண்ணெய் மலை கண்ணைவிட்டு மறையினும் அவன் உருவம் கண்டு அனலில் மெழு

கொள உருகிய நம் மனம் உறைவதில்லை. இத்தலத்தைப் பாடிய புலவர்களிருவரின் பாடல்களைப் பாடி விடைபெறுவோமா!

“கண்ணனெனுந் தான்றோன்றிக் கள்ளமா மன்றிருடி
உண்ணவந் தால்வெருட்டி ஓட்டவோ—வெண்ணெய் மலை
மேலேந்திய சீர் விசாகா முருகா நீ
கோலேந்தி நின்ற குறிப்பு”

“உன்னைக் குருவின் உடன் ஆவன் என்றன்றோ
வெண்ணெய் மலைமீது வீற்றிருந்தாய்—அண்ணல்
திருக்கருவூர் ஆனிலையார் சேயே எனக்கும்
உருக்கமிகு நெஞ்சம் உதவு”

(கோவை, கவியரசு கு. நடேச கவுண்டர் பாடியவை.)

“மங்குல் தோய் வெண்ணெய்
மலை தங்கிவளர் வேலவர்க்கும்
கங்குல் பகல் நீங்காது
தங்கையால் தொழுவார்க்கும்
மங்களம்—மங்களமே”.

(பாடியவர் குடந்தைப் புலவர் குழந்தைவேற் பிள்ளை.)



தான்தோன்றிமலை முகப்பு மண்டபமும், விதானமும்.

# தான்தோன்றி மலை

கொங்குநாட்டில் உள்ள பாடல் பெற்ற பழம்பதிகள் ஏழினுக்கும் சென்று வந்தோம். குன்றுதோறாடும் குமரன் கோயில்கள் சிலவற்றையும் கும்பிட்டு வந்தோம். இனி நாம் சென்று சேவிக்க இருப்பவை கொங்குநாட்டிலுள்ள விண்ணளந்த பெருமாளின் விண்ணகரங்கள்சில. தொல்காப்பியர் காலத்திற்கும் முற்பட்டே திருமாலின் வழிபாடு பழந்தமிழ் நாட்டில் இருந்து வந்திருக்கிறது.

அதன்பின் தோன்றிய பல இலக்கியங்களிலும் நெடியவனை-மாலவனை-சேயவனை-கரியவனைப் பற்றிக் கூறக் காண்கிறோம். பெருமாளுக்கு உரித்தான இடம் தொல்காப்பியச் சூத்திரத்தில் "மாயோன் மேய காடுறை உலகம்" எனக் கூறப்படும். ஏனோ அம்மாயோன் மருமகனுக்கு உரித்தான பல மலைகளிலும் கோயில் கொண்டுள்ளான். வடவேங்கடம் மலைக் கோயில்தான். அதுபோன்று கொங்குநாட்டில் உள்ள மலைக் கோயில் தான்தோன்றிமலை. வடவேங்கடத்துப் பெருமாளுக்கும் தான்தோன்றிப் பெருமாளுக்கும் பல வகைகளில் தொடர்பு காண்கிறோம். ஒற்றுமையும் பார்க்கிறோம்; இத்தான்றோன்றிமலை கரூருக்கு நான்கு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. மலைமேல் ஏறுமுன் வைணவத்தைப் பற்றிச் சற்று சிந்திப்போமா?

வைணவத்தைப்பற்றியும், வைணவர் வழங்கும் பரிபாஷையைப்பற்றியும் முதலில் தெரிந்துகொண்டால் நமது வழிபாடு சிறப்பாய் அமையும். விஷ்ணுவையே கடவுளாகக்கொண்டு வணங்குபவர்கள் வைஷ்ணவர்

கள். வைஷ்ணவக் கோயில்களுக்கு விண்ணகரங்கள் என்று பெயர். சைவ சமய குரவர்கள் நால்வர். அவர்களில் மூவர் பாடிய சிவதலங்கள் பாடல்பெற்ற தலங்கள் எனப்படும். அது போன்று பன்னிரு ஆழ்வார்கள் பாடிய விண்ணகரங்கள் மங்களாசாஸனம் பெற்றவை எனப்படும். மங்களாசாஸனம் பெற்றவை எழுபது கோயில்கள். வைப்புத் தலங்களும் சேர்த்து நூற்றெட்டு. இதனை,

ஈரிருப தாஞ்சோழம் ஈரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் றாமலைநா (டு) ஓரிரண்டாம் — சீர்நடுநா(டு)
ஆறோ(டு)ஈ ரெட்டுத் தொண்டை அவ்வடநா(டு) ஆறிரண்டு
கூறுதிரு நா(டு)ஒன்றா(க)க் கொள்.

என்ற பாட்டு விளக்கும்.

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி என்னும் நூலில் 98 கோயில்களைக் குறிப்பிடுகிறார். நம்மாழ்வார் அவதரித்த பழம் பாண்டி நாட்டில் தாமிரவருணி நதிக்கரையில் அமைந்துள்ள நவதிருப்பதிகள் சிறப்புடையவை. அவை ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, திருக்கோளூர், தென்திருப்பேரை, தொலைவில்லிமங்கலம் என்ற இரட்டைத் திருப்பதி, திருக்குளந்தை (பெருங்குளம்), புளியங்குடி, வரகுண மங்கை என்பன.

ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்கள் யார் யார் என்பதை அறிய இதோ ஒரு பாட்டு.

"பொய்கை பூதன் பேயார் பொன்மழிசைக் கோன்மாறன்
செய்ய மதுரகவி சேரர்பிரான்-வையகமென்
தொண்டர் பாதப்பொடி
பட்டர் பிரான் கோதைகட்டவிழ்தார் வாட் கலியன்

என்பது அப்பாடல். இதனுள் அமைந்துள்ள ஆழ்வார்களின் பெயர்கள் பொய்கையாழ்வார், பூதத்

தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், மதுரகவி யாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்பனவாகும். முதல் மூவரும் ஏனையோருக்குக் காலத்தால் முற்பட்டவர்கள். அதனால் முதலாழ்வார்கள் எனப்படுவார்கள். இம்மூவரும் தாயின் மணிவயிற்றிற் பிறவாதவர்கள். வைணவ குருபரம்பரைக்கு நால்வர் முதல்வர். அவர்கள் பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், சேனை முதலியார், நம்மாழ்வார். வைணவப் பெரியோர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஸ்ரீமத் நாதமுனிகள், யமுனைத் துறைவர் எனப்படும் ஆளவந்தார், இராமாநுசர், கூரத்தாழ்வார், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகியோர். வைணவம் சிறக்க விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப் பரப்பியவரும், இளையாழ்வார், எதிராசர், எம்பெருமானார், உடையவர் என்பது முதலான பத்துப் பெயர்களால் அழைக்கப் பெறுபவரும், சாதி, குலச் சழக்கொழித்து எம்பெருமானை வழிபடும் எல்லோரும் ஒரேகுலம் எனக் கூறிக் கடைப்பிடித்தவரும் இராமாநுசாசாரியராவார்.

வைணவ ஆகமங்களில் பல ரிஷிகளால் உபதேசிக்கப்பட்ட பாஞ்சராத்ராகமம் ஒன்று. ஒரு யாகத்தினிடையில் ஐந்து இரவுகளில் உபதேசிக்கப்பட்டது என்றும், ஐவர்களால் உலகிற்கு ஈயப்பட்டது என்றும் கூறுவர். மற்றொன்று விகனசர் என்பவரால் உபதேசிக்கப்பட்ட வைகானச ஆகமம். தோத்திரப் பாடல்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தம். வேதவியாசர் எழுதிய பதினெண் புராணங்களில் கருட, வராக, நாரதீய, வைணவ, பாகவத, வாமன புராணங்கள் விஷ்ணுவைப் பற்றியவை. வைணவ சமயத்தில் மூன்று உட்சமயங்கள் உண்டு. தேசத்தில் அவை கிருஷ்ண சைதன்யம், நிம்பார்க்க வைஷ்ணவம், வல்லபம் என வழங்கப்பெறுகின்றன.

வைணவத்தின் கிரியைகள் ஐந்து. அவை: நாமம், புண்டரம், தாபம், மந்திரம், அர்ச்சனம் (யாகம்). நாமம் ஒரு வகைத் திருமண்ணுலிடுவது. எல்லாம் முடிவில் மண்ணுய் விடும் என்பதை உணர்த்துவது. பரந்தாமனின் பாதாரவிந்தங்களைத் தவிர உயிர்கட்கு வேறு கதியில்லை என்பதற்கு அடையாளமாக இரு திருவடிகளைப் போன்று இதனை இடுகின்றார்கள். நாமம் இடுவதில், இருவகையுண்டு. வடகலை, தென்கலை என்பன அவை. வடமொழி வேதசாத்திரங்களுக்கு ஏற்றம் கொடுப்பவர் வடகலையார். தென்கலையார், ஆழ்வாராதியரின் திவ்யப் பிரபந்தத்திற்குப் பெருமை கொடுப்பவர்கள். நாம பேதத்திஞல் இவர்களை எளிதில் அறிந்து கொள்ளலாம். எப்போதும் எம்பெருமானின் திருமுன்பு ஒலிப்பது திவ்ய ப்ரபந்தங்களே.

இனி வைணவ சம்பிரதாய பரிபாஷைகளைக் கொஞ்சம் தெரிந்துகொள்ளலாமா!

தரிசனம்—சேவித்தல்
அபிஷேகம்—திருமஞ்சனம்
துளசி—திருத்துழாய்
நைவேத்யம்—அமுதுசெய்தல்
திருவீதி உலா—பத்தி உலாத்தல்
அலங்காரம்—சாத்துபடி
பாயசம்—திருக்கண்ணமுது
தயிர்சாதம்—ததியோதனம்
பத்தாம்நாள்—சாத்தும்முறை

ஊர்வலம் முடிந்த பின்செய்யும் உபசரணை-திருவந்திக் காப்பு.

திருமாலின் திருவடி தாங்கிய மகுடத்தைத் தலையில் பொருத்தல்—ஸ்ரீசடாரி சாதித்தல் என்றும்,

ஸ்ரீசடகோபம் சாதித்தல் என்றும் கூறுவர். உற்சவர் பக்கத்தில் உள்ள இறைவிகட்கு உபயநாச்சியார்கள் என்றும் தனியே உள்ள இறைவி கோயிலுக்குத் தாயார் சந்நிதி என்றும் கூறுவர். ஆனால் ஸ்ரீரங்கம் துலுக்கநாச்சியாருக்கும் காஞ்சிமலையாள நாச்சியாருக்கும் தனிச் சந்நிதி உண்டு. அது விதிவிலக்கு.

அதிக நேரமாகி விட்டதால் எதிர்பார்த்திருக்கும் பட்டாசாரியாருக்கு ஏமாற்றம் விளைவிக்காதபடி மலையேறலாமா?

மலை சிறு மலையே. ஏறுவதற்கு முப்புறமும் பாதையுண்டு. படிகளும் அதிகமில்லை. ஏறுவதில் சிரமம் தெரியாது. மாடம்போன்ற மலை. மலைமுகட்டிலே கோயில். கோயில் குடைகோயில். மூலவரும் பாறையோடு பாறையாகக் காட்சியளிக்கிறார். அம்மூலவரின் பெயர் கல்யாண வெங்கடரமண சுவாமி. வெம் எனில் பாபம். கடம் எனில் தகித்தல்: இந்த ரமணர் தன்னை யடைந்தாரின் பாபத்தை நீக்குபவர். பரமபதத்தைத் தருபவர். திருப்பதி மலையில் ஒருகூறு கரூரில் சிதறி விழுந்து தான்தோன்றி மலையாகக் காட்சியளிக்கிற தென்றும் கூறுவர்.

ஏழுமலையான் பெயர் வெங்கடரமண சுவாமி. இங்கு எழுந்தருளியுள்ள சுவாமியின் திருநாமமும் வெங்கடரமண சுவாமி; இரு திருஉருவங்களும் ஏழடி உயரமும் நான்கடி அகலமும் உள்ளன. ஏழுமலை வெங்கடேசப் பெருமாள் திருப்பதியில் உண்டியல் வசூலிப்பதற்கு ஒரு காரணம் கூறுவர். நாராயணவரத்து அரசன் ஆகாச ராஜன் மகள் பத்மாவதியை மணக்க வெங்கடேசப்பெருமாள் குபேரனிடம் கடன்பட்டாராம். வாங்கிய தொகையைத் திருப்பத் தம்பக்தர்களின் குறைகளைத் தீர்த்து உண்டியல் மூலம் வருமானத்தைப் பெறுவதாய்க் கூறுவர். திருப்பதி உண்டியலில் செலுத்

துவதாய்ப் பிரார்த்தனை செய்துவர்கள். காரியமுடிந்து விடில் இந்தத் தான்தோன்றி மலைக் கல்யாண வெங்கட ரமண சுவாமி உண்டியலில் காணிக்கை செலுத்துகின்றனர். கொங்கு நாட்டில் பிரார்த்தனைத் தலமாய் விளங்குகிறது. ஆகையால் உண்டியல் வருமானமே இக் கோயிலிலும் பிரதானம். இந்த வெங்கடரமணனை நெரூர் சதாசிவ பிரமேந்திரர் புரட்டாசி மூன்றும் சனிக் கிழமைகளில் பூசைசெய்து வந்திருக்கிறார். யந்திர தாபனம் செய்து ஆராதித்திருக்கிறார்.

சுஷர்மா என்ற ஏழை பிராமணருக்குத் திருப்பதி வெங்கடாசலபதியின் காட்சி கொடுக்க, தானே உண்டானதால் இதற்குத் தான்தோன்றிமலை என்ற பெயர் உண்டாயிற்று என்பர். புங்கணாசாரி என்பவர் சோழர்கள் காலத்தில் வாழ்ந்த சிற்பி. அவர் தம் மனைவி சொர்ணாம்பிகை. அவள் மகப் பேறில்லாது மனம் நலிவுற்றிருந்த வேளையில் ஏழுமலையானை வேண்டிக் கொண்டதால் பிறந்த பையனைக் கூட்டிக்கொண்டு திருப்பதி செல்லும் ஒரு கூட்டத்தைக் கண்டு தானும் பிரார்த்தித்துக் கொண்டாள்; கருத்திற்கொண்ட ஒரு சில தினங்களில் கருக்கொண்டாள். குண்டலாசாரி என்ற பெயர்பெற்ற ஜகந்நாதன் பிறந்தான். அவனுக்கு ஐந்து வயதானதும் பிரார்த்தனையைச் செலுத்த முடியவில்லையே எனச் சொர்ணாம்பிகை ஏழுமலையிருக்கும் தூரத்தை எண்ணித் துயருற்றாள். ஏங்கித்தவித்த தன் தாயாரின் எண்ணம் நிறைவேறக் குண்டலாசாரி இரவுகளில் வேலைசெய்து அடைந்த கோயில் எனவும் கதை கூறுவர்.

இம்மலை வராக புராணத்தில், 'சுயம்வெக்த வேங்கடகிரி'' எனக் குறிப்பிடப் பெற்ற மலை வரலாறும் கூறப்படுகிறது. சுஷர்மா என்ற பக்தனின் கதையும் அதில் காணப்படுகிறது. இக்கோயில் கரூரில் தெற்குவீதியில் உள்ளதும் முசுகுந்தச் சக்கரவர்த்தி

வினால் பிரதிஷ்டை செய்யப் பெற்றதும் குலசேகராழ்வாரால் மங்களாசாசனம் பெற்றதுமான அபயப் பிரதன அரங்கநாதர் கோயிலைச் சார்ந்தது.

தினப்படி மூலவருக்குத் திருமஞ்சனம் உண்டு. நாலுகாலப் பூசை. பிரமோற்சவம் புரட்டாசி மாதத்தில். திருவோணத்தில் தேர். மாசிமகத்திலும் தேர் விழா உண்டு. புரட்டாசி சனிக்கிழமைகளில் சிறப்பான பூசனையுண்டு. மூன்றும் சனிக்கிழமை மிக முக்கியமான நாள். திருமண வைபவம் இவண் அதிகம். உற்சவர் கல்யாண ஸ்ரீநிவாசப் பெருமாள்; தாயார் சந்நிதி மலைக்கோயிலுக்கு இல்லை. திருப்பதி சம்பிரதாயம்.

வைணவக் கோயிற் பூசை இருவகைப்படும். ஒன்றிற்கொன்று சிறிது பேதமுண்டு; பாஞ்சராத்ர சம்கிதைப்படிப் பூசை நடக்கும் கோயில்கள் மேல்கோட்டை, திருவரங்கம், காஞ்சி. வைகாசன ஆகமப்படி நடப்பவை ஸ்ரீ வில்லிபுத்தூர், வானமாமலை, திருப்பதி போன்ற கோயில்கள். இத் தான்தோன்றிமலையிலும் வைகாசன ஆகமத்தை ஒட்டிப் பூசைமுதலியன நடை பெற்று வருகின்றன.

மலையையொட்டிய மண்டபத்தில் ஆறடி உயரமான கருடாழ்வாரைப் பிரதிஷ்டை செய்துள்ளனர். ஆனால் அர்த்தமண்டபத்தையொட்டி மூலத்தான மலைப் பாறையிலேயே மூலவரின் இருபுறமும் துவார பாலகர்கள் செதுக்கப்பட்டுள்ளனர். சுமார் பன்னிரண்டடி உயரம். இருவரும் பார்ப்பதற்குக் கம்பீரமாய்க் காட்சியளிக்கின்றனர். மேலே அண்ணாந்து பார்த்தால், பாறையிலேயே செதுக்கப்பட்டுள்ள பதினான்கு கந்தர்வர்களைக் காணலாம். மலைமேலுள்ள விமானம் மூலவரின் சிலைக்கு நேர் உச்சியில் அமைந்துள்ளது. பல வகைகளில் திருப்பரங்குன்றத்துக்கோயிலை ஒத்துஇருக்

கிறது. இக்குடை கோயிலும், விதானமும் சிறியவை யாயினும் சிறப்பாயமைந்துள்ள தன்மை மனதைக் கவர்கிறது. வலது புறப்படி வழியிறக்கத்தில் அநுமார் சந்நிதியுள்ளது.

கல்யாண வெங்கடரமணரைக் கண்குளிரக் கண்டோம். கைகுவித்து வணங்கினோம். இறங்கி வருகையில் நம்மையறியாது பேயாழ்வார் பாடிய,

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமுங் கண்டேன் — செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங் கங்கைக்கண்டேன்
என் ஆழி வண்ணன்பால் இன்று'

என்ற பாட்டை வாய் முணுமுணுக்கிறது. அதன் பொருளை நாமும் கண்டுகொண்டோம்.

# வெஞ்சமாக்கூடல்

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம் முதல் குருவுமாய்த் தவத்தினிலுணர்த்த விட்டு
அந்நிய மின்மையின்அரன் கழல் செலுமே"

என்பது சிவஞான போதம், எட்டாம் சூத்திரம். இறைவனே குருவாக வந்து, பாசம் நீக்கி, உண்மை உணர்த்தித் தன்கழல் தந்தருளுகிருன். இக்குருவை யடையும் வழியை "மூர்த்தி தலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்று பராபரக் கண்ணியில் திட்டவட்டமாகச் சுட்டிக்காட்டுகிருர் தாயுமான சுவாமிகள். நம் பழம் பாரதநாட்டில் கங்கை, காவிரி, பொருநை போன்ற புண்ணிய நதிகள் எத்தனை எத்தனையோ உண்டு. மானசரோவர், சரவணப் பொய்கை, பொற்ரு மரைக்குளம் போன்ற புண்ணிய நீர் நிலைகள் நிறைய உண்டு. பாடல் பெற்ற கோயில்களுக்கும் பஞ்சமில்லை. மங்களாசாசனம் பெற்ற விண்ணகரங்களுக்கும் அள வில்லை. புண்ணியத் தீர்த்தங்களில் நீராடி ஆங்காங் குள்ள கோயில்களை வழிபட்டால் சற்குரு வாய்க்கப் பெற்றுப் பெரும்பேறு பெறலாம். வாசகர்களுடன் மானசீகமாய்த் தீர்த்தமாடப் போகும்நதி வேகாநதி தீர்த்தம். கண்டு வணங்கப் போகும் சிவத்தலம்விகிர் தேசுவரர் சந்நிதி. இவை வெஞ்சமாக்கூடலில் உள்ளன.

தாம்பிரபரணியின் உபநதியான சிற்ருறு குற்ரு லத்தில் மலையின் மடுவில் விழுந்து உண்டாக்குவது



விகிர்தேசுவரர் கோயிலின் முன்புறத் தோற்றம்! காணுவோர் கண்களைக் குளமாக்கும்-
பார்ப்போர் மனம் பதைபதைக்கச் செய்யும் பாடல் பெற்ற தலத்தின் பாழ்பட்ட நிலை

பொங்குமாங்கடல். அமராவதியின் கிளைநதி சிற்றாறு. அது அமராவதியுடன் கூடும் துறையில் உண்டான ஊரின் பெயர் வெஞ்சமாக் கூடல். இச்சிற்றாற்றைக் குடவன் ஆறு என்றும் குழகன் ஆறு என்றும் கூறுவர். வடக்கு நோக்கி ஓடும் இச்சிற்றாற்றின் பழைய சிறப்பைச் சுந்தரர் இவ்வூர்ப் பதிகத்தில் ஆறுபாட்டில் அழகாகக் கூறுகிறார். பதிகமுதற்பாட்டு இதோ:—

“எறிக்குங் கதிர்வே யுதிர் முத்தமொடு
ஏலமில வங்கந் தக்கோலமிஞ்சி
செறிக்கும் புனலுட் பெய்துகொண்டு மண்டித்
திளைத்தெற்று சிற்றாறதன் கீழ்க்கரைமேல்
முறிக்கும் தழைமா முடப்புன்னை ஞாழல்
குருக்கத் திகண்மேற் குயில் கூவலரு
வெறிக்கும் கலைமா வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியேனையும் வேண்டுதியே”

இக்காலத்தே மூங்கிலில் விளைந்த முதிர் முத்துக்களையும், ஏலம், இலவங்கம், தக்கோலம் (வால்மிளகு) இஞ்சிபோன்ற பொருட்களையும் இந்த ஆறுகொண்டு வராவிடினும் தண்ணீரையாவது கொண்டு வருகிறதே! “நதியின் பிழையன்று நறும் புனலின்மை” என்று விதியின்மீது பழிபோடவேண்டாம். ஓடிவரும் நீர் தெளிந்தது. குளிர்ந்தது. குளிப்பதற்கு ஏற்றது; குடிப்பதற்கு உகந்தது. இந்த அழகிய ஆற்றையடுத்து இதன் கிழக்குக்கரைமேல் அமைந்துள்ளது வெஞ்சமாக்கூடல் கோயில். வெஞ்சமாக்கூடலூர் என்றும் கோவிலூர் என்றும், இப்பகுதி மக்கள் இந்த ஊரை அழைக்கின்றனர். இவ்வூரையடையக் கருவூரிலிருந்து அரவக்குரிச்சி நோக்கிப் போகும் சாலையில் எட்டுமைல் சென்றதும் சீத்தப்பட்டி அல்லது ஆறுரோடுப் பிரிவில் பிரிந்து மண்சாலையில் எட்டுகிலோ மீட்டர் செல்லவேண்டும். ஆற்றில் வெள்ளம் இல்லையெனில் அரவக்குரிச்சி



கருப்பக்கிரகத்தின் புறச்சுவரில் காணும் கல்வெட்டுத் தோற்றம். இதுபோன்று இன்னும் பல கல்வெட்டுக்களும் இங்கு உண்டு.

நெடுஞ்சாலையில் கருவூரிலிருந்து பத்துமைல் சென்று ஒந்தாம்பட்டி என்ற ஊரில் திரும்பி நாலு கிலோமீட்டர் கடந்து ஆற்றைத் தாண்டியும் அடையலாம். வழி சற்று மோசமானதுதான்.

இவ்வூரில் எழுந்தருளியுள்ள இறைவனின் திருப்பெயர் விகிர்தேசுவரர். சிவலிங்கத் திருவுருவம், வைப்புலிங்கம். சுந்தரர் தன் பதிகத்தில் கடைசியாக "வெஞ்சமாக்கூடல் விகிர்தா அடியேனையும் வேண்டுதியே" என்றுதான் விரும்பியருள்கிறார். சுந்தரர் மொழிப்படி இறைவியின் பெயர் பண்ணேர் மொழியாள். விகிர்தேசுவரி, மதுர சுபாஷிணி என்றும் அழைக்கப்பெறுகிறாள். பிரபாவலையுடன் சுமார் மூன்றடித் திருவுருவம் நான்கு கைகளுடன். நல்ல எடுப்பான எழில் உருவம். அம்மன் சந்நிதி தனிக்கோயிலாய் இறைவனுக்கு இடதுகைப் பக்கம் அமைந்துள்ளது.

திருக்கோயில் மிகவும் சீர்கெட்ட நிலையில் சிலமாகி இருக்கிறது. மதிற்சுவர்கள் இடிந்த நிலை. மண்டபங்களும் பாழடைந்த திசை. சுற்றுப்பிரகாரம் முழுவதும் முட்புதர். ஊரே மண்மேடிட்டுப் போனதால் கோயில் பள்ளத்தில் உள்ளது. ஆறேழு படிகள் கீழிறங்கித்தான் கோயில் முகப்பை அடைய வேண்டும். கிழக்குப் பார்த்த சந்நிதி. இராச கோபுரமில்லை. விநாயகர், கொடிமரம், பலிபீடம், நந்தி ஆகியவர்களைத் தாண்டித்தான் உள்ளே செல்ல வேண்டும். உட்சுற்றுப் பிரகாரத்தில் சிதைந்த சிலைகளையும், மூர்த்திகளையும் வைத்துள்ளனர். கவனிப்பாரற்ற நிலைகண்டு கண்ணீர் வடிக்க வேண்டும். ஒரே கல்லில் பீடமும், மயிலும், மயிலேறும் ஆறுமுக மாணிக்கமும் சிலையாக வடிக்கப் பெற்றுள்ள சிறப்பை எழுத்தால் எழுத இயலாது.



அம்மன் கோவிலின் முன்புறத் தோற்றம் எதிரில் இருப்பது நந்தி மண்டபம்—பலிபீடம்



விகிர்தேசுவரர் கோயில் விதானத்தோற்றம்
விதானம் மட்டும் சமீபத்தில் செப்பனிடப்
பெற்றது.

இறைவனின் கருவறைப் புறச்சுவர் முழுவதும் கல்வெட்டுக்கள் காணக்கிடக்கின்றன. அரசாங்கத்தால் எடுக்கப்பெற்று வெளியான 1905ம் ஆண்டு கல்வெட்டறிக்கையில் 143—150 வரை இவ்வூர்க் கல்வெட்டுக்கள் இடம்பெற்றுள்ளன. ஜெயகேசரிக் கல்வெட்டில் திருவெஞ்சமாக்கூடல் ஊரையே இறைவர்க்கு அளிக்கப்பட்ட செய்தி கிடைக்கிறது. இந்த இறைவனுக்கு இன்று எஞ்சி நிற்கும் இறைம்பூமி 1988 ஏகர். பட்டா விகிர்தேசுவரருக்கே. பலன் அனுபவிப்பவர்கள் யார் யாரோ! அதனல் இவருக்கு வரும் தின வருமானம் ரூபாய் ஒன்று. அதுவும் சரியாக வருவதில்லையாம். இருவேளைப் பூசை எப்படியோ நடைபெற்று வருகிறது. மாசி மாதத்தில் பிரம்மோற்சவம். மகத்தில் தேர்விழா. ஊராட்சித் தேர்தலால் ஊர் இரண்டுபட்டு இரண்டு ஆண்டுகளாகத் தேரும் ஓடவில்லையாம்.

இத்தலத்திற்குப் புராண வரலாறு ஒன்று உண்டு. இந்திரன் அகலிகையைச் சேரும்பொருட்டுச் சேவலாய்க் கூவி வஞ்சித்த பாவம் நீங்கப் பூசித்த தலம் இது. வெஞ்சமன் என்ற வேட்டுவ அரசன் இவ்விறைவனைப் பூசித்துப் பேறு பெற்றனன். அவன் இந்த ஊரைத் தலைநகராய்க்கொண்டு ஆட்சி புரிந்தான். வெஞ்சமனை வெல்லக் கருவூரையாண்ட சோழன் படை எடுத்துவந்து போரிட்டனன் எனவும் சொல்லப்படுகிறது. அகழ்ந்த அகழி ஊரைச் சூழ்ந்து இருந்ததால் சோழன் உள் நுழைய முடியவில்லை. அகழியின் வாய்க்காலும், தண்ணீர் வடிகாலும் உள்ள ரகசிய இடத்தை இடைச்சி ஒருத்தி மூலம் அறிந்து அவ்வூரை வென்றனன். வெஞ்சமனை வெஞ்சமரிற் கொன்றனன். போரில் இறந்த அவ்வேட்டுவ அரசனுக்குப் புகழிற் சிறந்த சோழ அரசன் ஆற்ரோரம் வடமேற்கில் கற்சிலை எழுப்பினன். நன்றி மறவா வளவன் வேட்டுவ அரசனின் பக்கத்தில் அந்த இடைச்சிக்கும்

படிமம் அமைத்து நிறுத்தியுள்ளான். ஊரார் ஆண்டுக் கொருநாள் அவ்விடத்தில் பொங்கலிட்டுப் பூசிக்கின் றனர். பூசனை செய்த நாளில் நல்ல மழை பெய்வது வழக்கமாம். சற்றுத் தூரத்தே வடக்கே தனிக் கோயில் ஒன்று நம் கண்ணிற் படுகிறது. இக் கோயிலைப் பொன்பரப்பி அம்மன் கோயில் என்கின்ற னர். இவ்வூர்க் கிராம தேவதையாய்த் திகழ்கிருள் இப்பொன் பரப்பி அம்மன். ஒன்பதின்மரில் நடு நாயகமாய் அமர்ந்து காட்சியளிக்கிருள். சுந்தர மூர்த்தி நாயனரின் பாட்டுக்கு இறைவன் தன் இரு குமாரர்களையும் இறைவியே மூதாட்டியாய் எழுந்தருளி யிருக்கும் இவளிடம் அடகு வைத்துப் பணம் வாங்கிக் கொடுத்ததாகக் கொங்கு மண்டல சதகத்தில் பாட் டொன்று உண்டு.

"கிழவேதி வடிவாகி விருத்தையைக் கிட்டி என்றன்
அழகாகும் மக்கள் அடகு கொண்டு அம்பொன் அருளுதி என்று
எழு காதலால் தமிழ் பாடிய சுந்தரர்க்கு ஈந்தஒரு
மழுவேந்திய விகிர்தேசுவரன் வாழ் கொங்கு மண்டலமே".

என்பது அப்பாட்டு. பெரியபுராணத்தில் இந் நிகழ்ச்சி இடம்பெறவில்லை. ஆனல் வெஞ்சமாக் கூடலுக்குச் சுந்தரர் வந்து வணங்கிய செய்தி கிடைக் கிறது. ஏயர்கோன் கலிக்காம நாயனர் சரிதத்தில் 92வது பாட்டு......

"ஆயிடை நீங்கி அருளினுற் செல்வார்...
மேயவன் வண்டமிழால் விருப்பொடும் பரவி
வெஞ்சமாக்கூடலும் பணிந்து சேயிடை
சுழியல் போந்து வந்தடைந்தார் தென்றிசைக் கற்குடி
மலையில்".

திருச்செங்கோடு திரு. வி. முத்துசாமிக் கோனு ரால் இயற்றப்பெற்ற தலபுராணம் ஒன்றும் இவ் வூருக்கு உண்டு.

அன்று வெஞ்சம அரசனின் தலைநகராய் ஆழ்ந்து அகன்ற அகழி சூழ்ந்த பெரிய ஊராய்த் திகழ்ந்தது இவ்வூர். இன்று தூர்ந்துபோன அகழியுடன் மண் மேடாகிய சிற்றூராய்க் காட்சியளிக்கிறது. அன்று பாடல் முழவுங் குழலும் இயம்ப—மடவார் நடமாடும்—பணைத்தோளியர் பாடலோடாடல் செய்த இடம் இன்று பாழ்பட்ட இடமாய்க் காட்சியளிக்கிறது. அன்று வஞ்சி நுண்ணிடையார், மயிற்சாயலன்னார், வடிவேற்கண் நல்லார் பலர் வந்திறைஞ்சிய வெஞ்சமாக்கூடல் கோயில் இன்று வந்து வழிபடுவார்களின்றி வெறிச்சோடி, முள்ளும் புல்லும் முளைத்த புதர்ப் பிரகாரங்களையும் வௌவால் கூட்டம் வாசம் செய்யும் இடிந்த கூடங்களையும் உடையதாய்க் காட்சியளிக்கிறது. அன்று ஊரையே இறும் வழங்கி இறையிலியாய் எண்ணற்றவை கொடுத்துத் தினப்பூசை முட்டின்றி நடைபெறும்படிச் செய்த கோயிலில் இன்று நித்தியப் படித்தரத்திற்குக் கூடத் தட்டுப்பாடு. அற்றைத் தலைமுறையினர் தனக்கென வாழாது பிறர்க்குரியாளராய் வாழ்ந்த முறை இதய நிறைவைக் கொடுத்தது. இன்பத்தைத் தந்தது. துன்பத்தைத் துடைத்தது. மாரி பெய்தது. மக்கள் செழித்தனர். கோயிலைக் கட்டினர். கோபுரம் கண்டனர். ஆனால் இற்றைத் தலைமுறையினர் பொதுச் சொத்தும் தன் தனிப்பட்ட சுகபோகங்கட்கே உரியது என்று எண்ணி வாழும் முறை துன்பத்தைத் தருகிறது. மழை பொய்க்கிறது. வறுமையைக் கொடுக்கிறது. இன்பத்தைத் துடைக்கிறது. கோயில் பாழடைகிறது. கோபுரமும் இடிகிறது.

இந்நாட்டில் அரசியல், தேர்தல், திரைப்படத் தொழில், சூதுக் களியாட்டம் முதலியவற்றில் எத்தனையோ பெருந்தொகை செலவு செய்யப்படுகிறது. அதில் ஒரு கூறு இருந்தாலும் இதுபோன்ற பழம்

பெரும் கோயில்களைச் செப்பனிடுவதற்குப் போதுமே! நம்பனுக்கும் அவன் அடியார்க்கும் நல்காத் திரவியங்கள் அங்ஙனம் அழிவது இயல்பே; பெருஞ் செல்வராய்த் தெய்வ பக்தியும் உடையராய் விளங்கும் பெரு நிலக்கிழார்களும் தொழிலதிபர்களும் தனவந்தர்களும் கொங்கு நாட்டில் குறைவற வாழ்கின்றனர். பல பழம்பெரும் பாடல்பெற்ற சிவத்தலங்களைப் புதுக்கி வரும் பரம்பரைப் பக்தர்களாகவுள்ள நாட்டுக் கோட்டை நகரத்துச் சீமான்களும் இக்கொங்கில் வசிக்கின்றனர். இவர்களெல்லாம் இருந்தும் பாடல்பெற்ற இத்தலம் கவனிப்பாரற்றுக் கிடக்கும் நிலையைக் குற்றமென்று சொல்லவா? கொடுமை என்று கூறவா? இறைவன்மீது அன்புடைய மக்கள் ஆளுக்கு இரண்டொரு வெண்பொற்காசு கொடுக்க முன் வந்தாலும் இக்கோயில் சிறப்படையுமே! அதிகாரமும், செல்வாக்கும், செல்வமும் படைத்த பிரமுகர்களில் யாரேனும் முன்னின்று சிதைந்த நிலையிலுள்ள சிறப்பான இக் கோயிலைப் புதுப்பிப்பதில் முனைவார்களானால் வருவாயுள்ள கோயில்களில் மிச்சமாகும் பணத்தை அரசாங்கத்தின் மூலம் பெற்றுத் திருப்பணியைச் சுலபமாய் நிறைவேற்றக் கூடும். தமிழக அரசும் இப் புண்ணியத் தலத்தின் மீது கண்ணோட்டம் செலுத்தட்டும். இவர்கள் உள்ளத்தில் இறைவன் புகுந்து தூண்டி விரைவில் இக்கோயில் சிறப்படையச் செய்வானாக!

தாரமங்கலம்—கல்மேடையிலுள்ள சித்தி விநாயகர் கோவில்.
கோபுரமுதல் அடித்தளம் ஈருக ஒன்பது கற்களாலானது.
கலைஞர்களின் போட்டியால் நமக்குக் கிடைத்த பரிசு.



# தாரமங்கலம்

கொங்கு நாட்டின் சிற்பக் கருவூலங்களாகத் திகழ் பவைகளுள் தாரமங்கலமும் ஒன்ருகும். இக்கோயிற் சிற்பங்கள் பேரூரில் இருப்பனவற்றைப் பலவழிகளில் ஒத்து இருப்பதால் பாண்டியர்கள் காலத்து திருப்பணி யாய் இருக்கலாம் என்று எண்ண இடமுண்டு. இவ்வூர் சேலத்திலிருந்து சுமார் 24 கிலோ மீட்டர் தூரத்திலும் சங்கரி துர்க்கம் ரயில் நிலையத்திலிருந்து சுமார் 30 கிலோ மீட்டர் தூரத்திலும் அமைந்துள்ளது. பக்கத்தில் முறையே பத்துக் கிலோமீட்டர் தூரத்தி லுள்ள வனவாசி, ஓமலூர் போன்ற இரு ஊர்களின் மத்தியில் இருக்கிறது. விசுவநாத நாயக்கர் மதுரையை ஆண்டபோது பாளையக்காரர்கள் பாண்டியநாட்டின் 72 பாளையங்களையும் ஆண்டுவந்தனர். இவர்களில் இருவர் கொங்கு மண்டலத்தை ஆண்டனர். சேந்த மங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு இராமசந்திர நாயக்கர் வமிசத்தினரும், தாரமங்கலத்தைத் தலைநக ராகக் கொண்டு குட்டி முதலியார் வமிசத்தினரும் பரிபாலனம் புரிந்தனர். ஏழம்பரேசுவரர் கோவிலில் ஒளசல ராமனுத ராஜாவின் அரசியல் கி. பி. 1268—1274 ஆண்டுச் சாசனங்களும் இரண்டாவது ஜடா வர்மன் சுந்தர பாண்டியனின் கி. பி. 1281—1289—1290—1302 ஆண்டுச் சாசனங்களும் உண்டு. கட்டி முதலியார் என்பது பட்டப்பெயர் என்பதையும் அவர் களில் இம்முடிக் கட்டி முதலி, எளமன் கட்டி முதலி, வணங்காமுடிக் கட்டிமுதலி என்பவர்கள் பல தலைமுறை யினர் என்பதையும் அறிகிருேம். இலவம்பட்டி என்ற

கிராமம் கயிலாசநாதபுரம் எனப் பெயர் மாற்றி யமைத்து தாரமங்கலம் இரதோற்சவத்துக்காக விடப் பட்டதாம். இலவம்பட்டி பூசாரிக் கவுண்டனூர் பாறை யில் காணும் சிலாசாசனப்படி, தில்லைக்கும் இவ்வூருக் கும் அக்காலத்தில் தொடர்பு இருந்திருக்கிறது. தில்லைச் சிதம்பரத்தில் ஒரு மடம் கட்டுவித்து அதன் பரிபாலனத்துக்கு இங்கு உபயம் கொடுத்த கல்வெட்டு ஒன்றும் உண்டு.

சேர்வராயன் மலையில் இரு நதிகள் உற்பத்தியா கின்றன. ஒன்று பெரியாறு. இது கிழக்குப்பக்கம் வருகிறது. மற்றொன்று மேற்குப் பக்கமாக வருகிறது. அது கூத்தாறு, மலையாறு, பெட்டிப்பாடியாறு என்ற பல பெயர்களால் அழைக்கப்பெறுகிறது. இரண்டும் சேர்ந்து சரபங்க நதியாகி இவ்வூரின் ஓரத்தே ஓடி வருகிறது. காமத்தை ஒழித்த சரபங்க முனிவரின் ஆசிரமம் இந்நதிக்கரையிலிருந்ததால் அப்பெயர் பெற்றதென்பர். இந் நதியின் குறுக்கே ஏழு அணை களும் கரையில் ஏழு சிவாலயங்களும் உண்டு. அவை கட்டி முதலியாரின் தங்கை எல்லம்மாளால் கட்டப் பட்டவை. தாரமங்கலத்தின் அருகிலுள்ள அணைக்கு எல்லம சமுத்திரம் என்று பெயர். இப்பகுதி கொங்கில் பூவாணிய நாடாகும். அக்காலத்தில் பூவாணிய நாட் டின் தலைநகராய்த் தாரமங்கலம் திகழ்ந்தது. இவ் வூரைச் சுற்றிலும் ஏழம்பரேசுவரர் கோயிலும், ஆலடி விநாயகர் கோயிலும், வேலாயுதசுவாமி கோயி லும், பத்திரகாளி அம்மன் கோயிலும் பெருமாள் கோயிலும் அமைந்துள்ளன. இவ்வூரின் மத்தியில் கயிலாசநாதர் கோயிலிருக்கிறது. மேற்கு நோக்கி யது. இராசகோபுரம் ஐந்தடுக்குகளையும், ஏழு கலசங் களையும், சுமார் முந்நூற்றெழுபத்தைந்து பொம்மை களையும் கொண்டது. ராசகோபுரம் தாண்டியதும் அதன் அருகில் நம் இடப்பக்கம் சகஸ்ரலிங்கரும்,

வலப்புறம் அவிநாசிலிங்கரும் சந்நிதி கொண்டுள்ளனர். இக்கோயில், மன்னவர் வணங்கினும் தாம் வணங்காத கட்டி முதலியார் வமிசத்து மூன்று தலை முறையினரால் திருப்பணி செய்யப்பெற்றது. அதற்கு ஆதாரம் அவர்கள் அடுத்தடுத்து நிறுவிய மூன்று விநாயகர்களும் "மும்முடிகட்டி விநாயகர்" என்ற பெயரில் எழுந்தருளி யிருப்பதாகும் மேலும் பாண்டியனின் முத்திரையான மீனையும் பாளையக்காரர்கள் கட்டி முதலியார்களின் இலச்சினையான வண்ணத்தடுக்கு வாடா மாலையையும் நந்தி மண்டப விதானத்தில் காண்கிறோம். அத்துடன் வில்லும் இரு புலியும் மற்ற ஓரங்களில் காணக் கிடைக்கின்றன. மூவேந்தரின் இம்முத்திரைகள் கோபுர விதானம், அம்மன் சந்நிதி மேல் விதானம், சபாமண்டப விதானம் ஆகியவற்றில் காணப்படுகின்றன. முன் மண்டபம் எட்டுத் தூண்களையுடையது. அத் தூண்கள் சிற்ப வேலைப் பாடுடையவை. முதல் தூணும், கடைசித் தூணும் தளர்ந்து வளைந்துள்ளது போன்றமைக்கப் பெற்றவை. மற்றவற்றில் யாளிமீதும், இரு குதிரைகள் மீதும் வீரர்கள் இருப்பது போன்றமைக்கப்பட்டுள்ளன. யாளியின் வாயில் உருண்டை. கை நுழையாது; விரல்கள் செல்லும் இடைவெளிதான். அதன் மூலம் கல் லுருண்டையைக் கடைந்திருக்கிறான். அவன் கைவிரல்களை வியப்பதா? சிற்றுளியை வியப்பதா ? திறனை வியப்பதா? என்று தெரியாது மூக்கின்மேல் நாம் விரல் வைக்கிறோம்.

இக்கோயிலைக் கட்டிய சிற்பிக்கும் ராசகோபுரம் கட்டிய சுதை வேலைக்காரனுக்கும் போட்டி வந்து விட்டதாம். "உடலுக்குத் தலைபோன்று உன் கோயிலுக்கு சுதையாலான என் இராசகோபுரம் இல்லையெனில் எங்ஙனம் சிறப்புப்பெறும்?" எனக் கேட்ட சுதை வேலைக்காரனுக்குக் கல்லாலேயே கோயிலெடுக்க முடியும் எனக் கூறி மாதிரிக்கு ஒரு சிறு கோயிலையும்

சித்தி விநாயகருக்கு எடுத்துக் காட்டுகிறும். அக் கோயில், கோபுரம் முதல் அடித்தளம் ஈருக ஒன்பது கற்களாலானது. இக்கோயிலை பரந்த மேடையின் மேல் அமைத்திருக்கிருன். கலைஞர்களின் போட்டியால் நமக்குக் கிடைத்த பரிசு இம்மாதிரிக் கோயில். வெளிச் சுற்றுப்பிராகாரத்தின் கடைசியிலுள்ள இம் மேடைக் கோயிலைக் கண்டு சித்திவிநாயகரை வணங்கி கோயிலினுள் உள்ள சிற்பக் கருவூலம் காணச் செல்லலாம். நுழைந்தவுடன் இடப்புறம் ரிஷிபத்தினி கையில் அகப்பையுடன் காட்சியளிக்கிருள். பிச்சாடனாருக்கு அவள் தன் கலை சோர்ந்த நிலையில் அளித்தது சோற்றமுது. நமக்கவள் அளிப்பது கலையமுது. சுற்றுப் பிரகாரத்தில் அமைந்துள்ள சிற்பங்களில் குறிப்பிடத் தக்கவை மோகன அவதாரம், சித்தேசுவரர், ஊர்த்துவ தாண்டவர், சிவசக்தி நோபம், இறைவன் இறைவி ஊடல்—(கங்கா தேவியால் ஏற்பட்டதைக் கல்லில் வடித்தது) வாலி—சுக்ரீவன் (ராமனோடு பார்த்தால் வாலி தெரியும். வாலிக்கு ராமன் இருப்பது தெரியாது) மன்மதன்—ரதி. (ஒரு குறிப்பிட்ட கோணத்திலிருந்து பார்த்தால்தான் நாம் காண முடியும். மன்மதனுக்கு ரதி தெரிவதில்லை) தாரமங்கலம் சிற்பங்கள் பேரூர் சிற்பங்களைவிட உயரத்திற் சிறியவையாஞலும் நுணுக்கமான வேலைப்பாடுகளில் குறைந்ததில்லை.

பேரூர் கோயிலில் இருப்பது போன்று விதானத்தில் தாமரையும், எட்டுக்கிளிகளும், தொங்கும் கற் சங்கிலிகளும் உண்டு. பேரூரில் காணமுடியாதது இங்குள்ளது போன்ற யாளியின்வாய்க்கல் உருண்டை.

இனி வழிபாட்டுக்குச் செல்லலாம். மூலவர் கயிலாசநாதர். இரண்டடி உயரம் இருப்பார். சுயம்பு. மேற்குப் பார்த்த (சத்யோசாத) மூர்த்தி. இந்த இறைவனை ஆவணி, மாசி மாதங்களில் 8, 9, 10 தேதிகளில் மாலை வேளையில் சூரியன் தன் ஒளிக்கிரணங்களால்

பூசனை புரிகிருன். இக்காலத்தில் நடைபெறுவது இரு கால பூசை. உச்சிகாலமும், சாயரட்சையுமாகும். எதிரில் அமைந்துள்ள இறைவி சற்றே சந்நிதியைவிட்டு விலகி நிற்கிருள். சுமார் மூன்றடி உயர மிருப்பாள். திருநாமம் சிவகாமியம்மை. நான்கு கைகளுடையாள் இந்நல்லாள். இவளை நாடிவந்து தொழுபவர்கட்கு நல்லன செய்கிருள். மக்கட்பேறு வேண்டுபவர்கட்கு கைமேல் பலன் கிடைக்கிறது. இவ்வம்மையைக் கயிலாசநாதருக்குத் தாரை வார்த்துக் கொடுத்ததால் இவ்வூர் தாரமங்கலம் என்ற காரணப் பெயரைப் பெற்றதென்று கூறுவர். மேலும் இவ்வூரைச் சுற்றி தாருக வனம் இருந்ததால் தாருகவனம் தாரமங்கலம் என்ற பெயர் பெற்றதென்றும் ஒரு சிலர் கூறுவர். தலவிருட்சம் வன்னி. தீர்த்தம் பக்கத்திலுள்ள சிவகங்கைத் தீர்த்தமும், பிரம்ம தீர்த்தமும் ஆகும். தீர்த்தமாடி இக்கோயிலைச் சுற்றி வருவதால் பயித்தியம் தீர்கிறதாம். இக்கோயிலில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

இவ்வூர் மக்களின் முக்கிய தொழில் விவசாயம். ஓய்வு நேரங்களில் நூல்நூற்றல், நெசவு செய்தல். ஊரைச்சுற்றிப் பனைமரங்கள் அதிகம் இருப்பதால் பனைவெல்லம் காய்ச்சுதலும் பருவகாலத் தொழிலாகும். பக்கத்தே மூன்று கல் தொலைவில் பழங்கால மன்னர்கள் ஆண்ட அமரகுந்தி நகர் அமராவதி என்ற பெயருடன் உள்ளது. தாரமங்கலத்திற்கு ஆறு கல் தொலைவில் பாளையக்காரர்கள் தங்கியிருந்து அமுல் நடத்தியதால் அமுலூர் என்று அக்காலத்தே அழைக்கப் பெற்ற மூதூர் பெயர் மருவி இக்காலத்தில் ஓமலூர் என்று அழைக்கப் பெறுகிறது. கொங்குநாட்டில் ஆகம ஆலய விதிமுறைகளை ஆதிசைவர்கட்குப் போதிப்பதற்கான (ஆசாரிய) குருபீடங்களில் தில்லைச் சிற்றம்பலக் குருபீடம்—குருக்கப்பட்டி தாரமங்கலம்.

அழகிய சிற்றம்பலக் குருபீடம்—கல்லங்குளம் (ராசீபுரம்)

இம்முடிச் சிற்றம்பலக் குருபீடம்—திருச்செங் கோடு.

சைவ புரந்திர பண்டிதகுருபீடம்-சிவகிரி(ஈரோடு). கூனம்பட்டி மடமும் குறிப்பிடத்தக்கவை. இவற்றுள் ஒன்றான தில்லைச்சிற்றம்பலக் குருபீடம் தாரமங்கலத் தின் பக்கத்திலுள்ள குருக்கப்பட்டியில் அமைந் துள்ளது.

சங்கரி துர்க்க அடிவாரத்திலுள்ள கெட்டி முதலி யார் குண்டு நமக்கு ஒரு வரலாற்றை அறிவிக்கிறது. அக்குண்டின்மீது தாரமங்கலம் கோயிலைக் கட்டுவதில் வேலை செய்யாது ஏமாற்றியவர்களை நிறுத்திக் கட்டி முதலியார் ஒறுப்பாராம். இதிலிருந்து கட்டி முதலியார் இக்கோயிலை கட்டுவதில் எத்தனை அக்கரை எடுத்துக் கொண்டார் என்பது தெரிகின்றதல்லவா! அவர் எடுத்த முயற்சியினாலன்றோ தாரமங்கலம் கோயிலிலுள்ள சிற்பக் கருவூலம் இன்று அகில உலகிற்கும் தமிழனின் கலைத்திறமையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. நமக்கும் பெருமையைத் தேடித் தருகிறது. வாழ்க கட்டி முதலியார் நாமம்! வளர்க சிற்பக்கலை.



# கஞ்சமலை

கஞ்சமலை ஈரோடு சேலம் வழியில் வேம்படி தளம் இரயிலடியிலிருந்து சுமார் எட்டுக் கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. கிழக்கு மேற்காக சுமார் 9 கிலோ மீட்டர் நீளமான மலைத்தொடரின் மேற்புறம் மலையடியில் அமைந்துள்ளது. இக்கோயில் கட்டி முதலியாரால் கட்டப்பெற்றது. கோயிலின் பக்கத்திலுள்ள ஊருக்குப் பொன்னகர் என்று பெயர்; தென்புறம் ஓடும் நதிக்குப் பொன்னி நதி என்று பெயர்; பக்கத்திலுள்ள பொய்கைக்குக் கந்த தீர்த்தம் என்று பெயர். இப்பகுதிகளில் பொன் கிடைத்ததாம். இப்பொழுதும் கரும்பொன்னான இரும்புக் கனி இங்கு அதிகம் கிடைக்கிறது. இம்மலையில் உலோகங்களின் மூலப் பொருள்கள் நிறைந்திருந்திருப்பது போன்று இரசவாதத்துக்கான மூலிகைகளும் நிறைந்திருக்கின்றன. ஆதாரம்,

" கஞ்சமலைச் சித்தர் வாழ்வுமிரதங் கரணிவளர்
மஞ்சுதிகழ் கஞ்சமா மலையுங் கொங்கு மண்டலமே."

என்ற கொங்கு மண்டல சதகத்தின் வரிகளாகும்.

இங்கெழுந்தருளியுள்ள இறைவன் பெயர் சித்தேசுவரர். மூலவர் 'யோக நிலையிலுள்ளார். கிழக்குப் பார்த்த கோவில். கோயிலில் முன்மண்டபம் திறந்த வெளியிலுள்ளது. அர்த்தமண்டபமும் மகா மண்டபமும் உண்டு. கோபுரம் வட்டமானது கோயிலைச் சுற்றியுள்ள மடங்களில் மக்கள் தங்க வசதி

யுண்டு. அமாவாசைகளில் அருகிலுள்ள சித்தரின் அன்பர்கள் வருகின்றனர். மாசிமாத சிவராத்திரியும் சித்திரைப் பௌர்ணமியும் திருவிழா நாட்களாகும். கஞ்சமலைச் சித்தரின் பக்தர்கள் அதியமான் ஆண்ட தகடூர் (தருமபுரி) பகுதியிலும், சேலம் பகுதியிலும் அதிகம். யார் இந்தக் கஞ்சமலைச் சித்தர்? கஞ்சமலைச் சித்தர் திருமூலரின் மாணவர். கஞ்சமலையின் வாசியான சித்தராகையால், இவர் கஞ்சமலைச் சித்தர் என அழைக்கப் பெறுகிறார். கருங்காட்டுச் சித்தர் எனவும் கூறுவர். இவர்தம் குரு திருமூலர் இவரைக் காலங்கி, கமலமுனி, கஞ்ச மலையன் எனக் கூறுவர். கஞ்சமலைச் சித்தரின் சீடர்கள் அகோரர், மாளிகைத்தேவர், நாதாந்தர், பரமானந்தர், போகர் ஆகியோர். போகரின் மாணவர் புலிப்பாணி. சித்தர்களின் பரம் பரையைக் கண்டோம். இனி இச் சித்தர்பற்றி இப் பகுதி மக்கள் வழங்கும் கர்ண பரம்பரைக் கதையைக் கேட்போமா?

சித்து விளையாடுவதில் சிறந்தவர்களல்லவா சித்தர்கள். அடிக்கடி தங்களை மாற்றித் திருவிளையாடல்கள் புரிவதில் சமர்த்தர்கள். கஞ்சமலைச் சித்தர் சிறுவனாய் வந்து சிறுவர்களுடன் விளையாடி, சாட்டையடி பட்டதாய்க் கூறுவர் சிலர். மூலவரின் உடம்பில் சாட்டையடியின் தழும்பு இருக்கிறது.

சித்தர் கரடியாய் வந்து கல்யாணத்தில் சாட்சி சொன்ன கதையும் கூறுகின்றனர். இன்றும் இப் பகுதியில் சித்தர்கள் வாழ்வதாய்க் கருதுகின்றனர். அவர்கள் மத்தியில் இச் சித்தரும் எழுந்தருளுகிறாராம்.

இலக்கியத்திலும் இம்மலை இடம்பெறுகிறது. கொங்கு மண்டல சதகத்திலும், கரபுரநாதர் புராணத்திலும், கஞ்சமலை பற்றி விரிவாய்க் காணக்கிடக்கிறது. அதிகமான் ஔவைக் கீந்த அருமையான கருநெல்லிக்

கனியைக் கொடுத்த கருங்காடு இந்தக் கஞ்சமலைக் காடு தான். "போரடு திருவிற் பொலந்தார் அஞ்சி மால் புரைபிறைநுதல் பொலிந்த சென்னி நீலமணி மிடற் றொருவன் போல மன்னுக பெரும நீயே" என கனியீந்த அதிகனை வாழ்த்திய ஔவை அப் புறநானூற்றுப் பாடலில் கனியைக் கொடுத்த இக் கஞ்சமலைக் காட்டையும், மரத்தையும் "தொன்னிலை பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட சிறியிலை நெல்லித் தீங்கனி" எனக் குறிப்பிடுகிறார். சிறுபாணாற்றுப் படையிலும் இம் மலை இடம் பெறுகிறது. திருமூலர் திருமந்திரத்திலும் சிறப்பாக கூறப் பெறுகிறது.

கஞ்சமலை அதிசயம்பற்றிய கொங்குமண்டல சதகப் பாடல்

"உலையில் அமுதுபடைத்துண்டு சீடன் ஒளித்திருப்பத்
தலையில் மயிருங் கருக்கக் கண்டேஅதன் சற்குருவும்
நிலையுடன் கக்குவித்துண்டு அடைந்தான் நந்நெறியில்கஞ்ச
மலையில் அதிசயம் கண்டதுவுங் கொங்குமண்டலமே"

திருமூலர், கஞ்சமலைச் சித்தர்பற்றிக் கூறுவது:

"நேர்ந்திடும் மூலசரியை நெறியிதென்று
ஆய்ந்திடும் காலாங்கி கஞ்சமலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்து
நேர்ந்திடும் சுத்த சைவத் துயிரதே."

—திருமந்திரம்.

# ஸ்ரீசைலம் என்கிற நாமக்கல்

"திருமால் பத்து அவதாரங்களில் ஒன்ருன நரசிம்ம அவதாரம் எடுத்து இரண்யகசிபுவை அழித்துவிட்டு பிரகலாதனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தார். பிரகலாதனது வேண்டுகோளுக்கு இணங்க அவன் பட்டினத்திற்கு அருகில் சாலக்கிரம மலையில் அம்மலைக் குச் சமமான உயரத்துக்குச் சாலக்கிரமச் சிலையாக பக்தர் சேவிக்க, கிருதாயுகத்தில் காட்சியருளிஞர்.

நரசிம்மரின் பயங்கர ரூபத்தைக் கண்டு பயந்தவ ராக இலக்குமிதேவி, அவரை அணுகாமல் நின்ருள். நரசிம்மரின் பிராண நாயகியாக இருக்க எண்ணங் கொண்டவள், தவம் செய்ய, பல நூல்களிலும் சிறப்பிக்கப் பெற்ற காவிரிக்கரையில் உள்ள பில்வாச் சிரமம் (வில்வகிரி க்ஷேத்திரம்) என்கிற மோகனூருக்கு வடக்கே ஒரு யோசனை தூரத்தில் அமைந்துள்ள தற்போதுள்ள (ஸ்ரீசைலம் என்கிற நாமக்கல் மலையை அடைந்து) கமலாலயம் என்கிற நீர்த்தடாகத்தை உண்டாக்கி, அக்கமலாலய வாய்வு மூலையில், இலை களால் ஆசிரமம் உண்டுபண்ணி நரசிம்மமூர்த்தியை தியானம் செய்ய ஆரம்பித்தாள்.

இராம இராவணப் பெரும்போரில், இலக்குவன், இந்திரஜித்துடன் (மேகநாதனுடன்) போரிடும்போது, மேகநாதன் எய்த பிரம்ம அஸ்திரத்திஞல், மூர்ச்சை யடைந்து வீழ்ந்தான். அநுமன், சஞ்சீவி மலையைக் கொணர்ந்து மூர்ச்சை தெளிவித்து, திரும்பக்கொண்டு சென்று வைத்துவிட்டு வரும்போது சாலக்கிரம

மலையை அடைந்தார்; நரசிம்மமூர்த்தியின் சிலையைப் பார்த்தார். அச்சிலையை மலையோடு பெயர்த்து எடுத்துக்கொண்டு இலங்கைக்குத் திரும்பும் வழியில் தாக மிகுதியினால், நீர்விடாய் எழுந்தது; நீர்நிலையைத் தேடினார்; இலக்குமி தவம்புரியும் கமலாலயத் திருக்குளத்தைக் கண்ணுற்றார்; தடாகக்கரையில் மலையை வைத்தார்; தடாகத்தில் இறங்கி விடாய்தீர நீரருந்தி விட்டுக் கரையேறினார். மலையைக் கைகளால் எடுத்தார்; ஆனால் மலையை உயர்த்த முடியவில்லை. மலையை அசைக்கவும் கூடவில்லை.

அவ்வேளை மஹாவிஷ்ணு தோன்றி, "நான் இலக்குமியைத் திருமணம் புரிந்த பின்னர் இலக்குமீ நரசிம்மனாக இங்குத் தோன்றுவேன். நீ அதுவரை, இராம காரியத்திற்குச் சென்று வந்தால், இராமச்சந்திரமூர்த்தியாகத் தோன்றி அருள்புரிவேன். ஆகவே இங்கிருந்து என்னை வணங்கித் தவமிருப்பதை விடுத்து, நீ மேற்கொண்ட இராமகாரியத்தைச் செய்வாய்" என்றார். அதற்கு அநுமனும், 'நானும் இவ்விடத்தில், என் தந்தை வாயுதேவரின் ரூபமாக எனது ஒரு அமிசத்தால் (ஒரு ஆற்றல் கூறாக) நரசிம்ம பூஜை செய்வேன். மறு அமிசத்தினால் இராமர்பணி செய்து உய்வேன்.' எனக் கூறி மலையை அவ்விடத்தே விடுத்துச் சென்றார்.

தவமிருந்த இலக்குமிதேவிக்குப் பின்பு, அருள் புரிந்து அவள் தவத்தை ஏற்றார்; அவளையும் தன் சதியாக ஏற்றுக்கொண்டார். அநுமன் இடைக்காலத்தில் வாயு உருவில் பூஜித்து வந்தார்.

[குறிப்பு இராமகாரியத்திற்காகச் செல்லும்போது அநுமனால் கொண்டு வரப்பட்டதால், இராமகிரி—நாமகிரி என்றும், நாமமலை—நாமக்கல் என்றும் தமிழில் பொருள்படும். ஸ்ரீசைலம் என்ற பெயரிலும் வழங்கப் படுவதாயிற்று.

நரசிம்ம ரூபமாய் ருத்ர குணத்தோடு விளங்கிய திருமால் தன்னை ஏற்றருள அவ்விடத்தில் இலக்குமி தவமிருந்ததால், இலக்குமி தேவியும் 'நாமகிரி அம்மன்' என்ற திருநாமத்தினால் வணங்கப்பட்டு வருகிறாள்.]

அநுமனின் வேண்டுகோளுக்கிணங்க கார்கோடக சயனத்தில் (ஐந்தலை நாகத்தின்மேல் பள்ளிகொண்டு) கமலாலயத்தில் திருமால் காட்சியருளினார். அக்காட்சி ரூபமாகவே என்றும் விளங்கியருளுமாறு அநுமர், வேண்ட, அவ்விதமே காவிரிக்கரையில் ஓரிடத்தில் காட்சி அருள்வதாகக் கூறி காவிரியில் ஓர் இடைக்குறை உண்டாக்கி, அந்தத் திருவரங்கத் தீவில் அரவணைப்பள்ளியில் காட்சி அருள்வாராயினார்.

(இத் தலபுராணத்தின்படி இத்தலம் உருவானதிற்குப் பிறகே ஸ்ரீரங்கம் (திருவரங்கம்) தோன்றியிருக்க வேண்டும் என யூகிக்கலாம். இராம இராவணப் போர்க்காலத்தில் இத்தலம் உருவாயிற்று. இராமாயண காலத்திற்குப் பின்னரே திருவரங்கம் தோன்றியது என்பதும் தெளிவு.)

வரலாற்றுச் சிறப்பும், பெருமையும் பொருந்திய நரசிம்ம மூர்த்தம் ஒன்பதினுள் நாமக்கல் நரசிம்ம மூர்த்தமும் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது. கீழ்க்கண்ட ஒன்பது சித்தர்களால் ஒன்பது நரசிம்ம மூர்த்தங்கள் தியானிக்கப்பட்டு ஆலய உருவேற்றன.

1. தேவலகர் 2. மரீசி 3. அங்கிரஸ் 4. அத்திரி 5. புலஸ்தியர் 6. புலஹர் 7. கிரீது 8. பிருகு (விஸிட்டர்) 9. விகனஸ்.

தேவலகர் ரிஷி என்ற சித்தர் இங்குள்ள சக்கர தீர்த்தத்தில் மூழ்கி, புனித முக்தி பெற்றார்.

தீர்த்தங்கள்: நாமக்கல் மலையைச் சுற்றிலும் எட்டும், மலைமேல் ஒன்றும் ஆக ஒன்பது தீர்த்தங்கள் உண்டு.

1. இலக்குமி தீர்த்தம் 2. கமலாலயம் 3. நாராயண தீர்த்தம் 4. அநுமன் தீர்த்தம் 5. சீதாராம் தீர்த்தம் 6. இலக்குமண தீர்த்தம் 7. தேவதீர்த்தம் 8. சக்கர தீர்த்தம் 9. ரிஷி தீர்த்தம்.

தேவதச்சன் விஸ்வகர்மா மலைமேல் மண்டபம் கட்டியதாகப் புராணம் கூறுகிறது.

சித்தி பெற்றோர் : கொல்லிமலையில் தவம்செய்த ஸ்ரீபதி, மோகனூரில் தவம்செய்த சன்னவதி சுவாமி, அநந்தர் என்ற அந்தணர் ஆகியோருக்கு நரசிம்ம மூர்த்தமாய் இக்கடவுள் தரிசனம் கொடுத்து முக்தியருளினார்.

தலம் பாடியோர் : 1. ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் பிரம்மாண்ட உற்பத்தி கண்டத்தில் தசாவதார கல்பத்தில் பாடப் பெற்றுள்ளது. 2. மோகனூர் ஸ்ரீ நாவலடிக் கடவுள் புராணத்தில் மூலனூர் திரு. காளிமுத்துக் கவிஞர் அவர்களால் லக்ஷ்மி நரசிம்மன் மீதும், நாமகிரி அம்மன் மீதும் சில பாடல்கள் பாடப் பெற்றுள. 3. சூத மகரிஷி, சௌனக மகரிஷி பாடத்தில் புராணம் சொன்னதாக விஷ்ணு புராணத்தில் உள்ளது.

இதர செய்திகள் : நரசிம்ம பல்லவன், இக்கோயில் எழுப்பியதாகத் தெரிகிறது. கல்வெட்டுள்ளது. மலைமேல் உள்ள கோட்டை திப்புசுல்தானால் கட்டப் பெற்றதாக வரலாறு கூறுகிறது.

குறிப்பு: இவ்விளக்கத்தை கல்வெட்டு சம்பந்தமான (Manuel) புத்தகத்தில் பார்த்தறிக.

எல்லைகள் : இவ்வூருக்குக் கிழக்கே கொல்லிமலை அறப்பளீசுவரர் கோவிலும், தெற்கே மோகனூர் அசலதீபேசுவரன் கோவிலும் மேற்கே திருச்செங்கோடு அர்த்த நாரீசுவரர் கோவிலும், வடக்கே சேலம் சுகவனேசுவரர் கோவிலும் உள்ளன. இதன்

சுற்றுப் பகுதிகளாக வேலூர் கபிலர்மலை, இராசிபுரம் -ள்ளன''

இது நாமக்கல் தலபுராணச் சுருக்கம் ஆகும்.

சேலத்திலிருந்து நாமக்கல் 28 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.

நாமக்கல், சேலம் மாவட்டத்தில் நாமக்கல் வட்டத் தலைநகராய்த் திகழ்கிறது. ஊரின் மத்தியிலுள்ளது மலை. மலையின் பக்கத்தில் மடு ஒன்றுண்டு. மலை முடியிலும் கோவில் அடியிலும் கோவில். மலை மீது கோட்டை. கோட்டைக்குள் பரந்த வெளி. அங்கு நரசிம்மருக்கும் நாமகிரி அம்மனுக்கும் கோவிலுண்டு. அக்கோவிலில் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. அடியிலுள்ள கோவில் அரங்கநாதர்கோவில். சிங்கப்பெருமாள் கோவில் என்றும் சொல்லுவர். அடியிலுள்ள கோவிலுக்கு எதிரிலுள்ள அநுமார் சந்நிதி மிகவும் பிரசித்தி பெற்றது. சிலையும் பெரியதே. 18 அடி. கூப்பிய கரம். பார்வை சிங்கப்பெருமாள் திருவடியில் விழும்படி அமைக்கப் பெற்றுள்ளது.



# மோகனூரும் தோழூரும்

மோகனூர் : இவ்வூருக்கு நாமக்கல்லிலிருந்தும், சேலத்திலிருந்தும் நேரான உந்தூர்திகள் (பஸ்) உண்டு. இங்கு எழுந்தருளிய இறைவனின் திருப் பெயர் அசலதீபேசுவரர். அம்பிகை மதுகர வேணி. தலவிருட்சம் வில்வ மரம். தீர்த்தம் காவிரி. இவ் விடத்தில் காவிரி தென்வடலாய் ஓடுவது ஒரு தனிச் சிறப்பு. இங்குள்ள அதிசயங்கள் இறைவனின் மூலத் தானத்தில் உள்ள விளக்குச்சுடர் ஆடுவதில்லை; அசைவதில்லை. இறைவியின் பாதத்திலிருந்து காவிரி ஆற்றில் வந்து சேரும் நீரூற்று சமீபகாலம் வரை பாலாய் வந்ததாம். எடுத்துக் காய்ச்சியதால் தண்ணீ ராய் மாறி வருகிறதாம். கோவில் சுற்றுப் பிரகாரத்தில் கல்வெட்டுண்டு. இப்பகுதி வில்வக்காடாய்த் திகழ்ந்த தாயும் 'பில்வாச்ரமம்' என்றழைக்கப் பெற்றதாயும் நாமக்கல் தலபுராணம் குறிப்பிடும். இவ்விறைவனைப் பூசித்துப் புகழ் பெற்றவர்கள்; கிருஷ்ணன், சனி, பரம சிவேந்திரர், சதாசிவப் பிரமேந்திரர், நித்யானந்த சுவாமிகள் ஆகியோர். புரட்டாசி முதல் வாரத்திலும், பங்குனி இரண்டாவது வாரத்திலும் இருநாட்கள் காலையில் அம்மனையும், மாலையில் இறைவனையும் சூரியன் தன் ஒளிக்கரங்களால் பூசிக்கிருன். முதலில் தாயைத் தேடிப்பின் அவள் மூலம் தந்தையை யடைய முடியும் என்ற உண்மைப் பொருளை உணர்த்துவது போன்றுள்ளது. மோகனூர் தலப்பெருமையை திரு. மா. பெரியசாமி எழுதிய கொங்குக் குமரி என்ற நூலில் காணலாம். மோகனூரிலிருந்து வடக்கே ஒன்றரை கிலோ மீட்டர் தூரத்திலுள்ள காந்தமலையில்

முருகன் குடிகொண்டுள்ளான். கந்தமலை முருகன் கட்டழகன். கண்கவர் வனப்புடையவன். அபயானந்த சுவாமிகள் வழிபட்டது. தைப்பூசத்தில் தேர் திருவிழா. காந்தமலை முருகனைப்பற்றிப் பாடிய பிரபந்தங்களுண்டு. மோகனூரைச் சார்ந்த வாகீச கலாநிதி கி. வா. ஜகநாதன் இம்முருகனைப் பாடியுள்ளார்கள்.

தோழூர், நாமக்கல்லிலிருந்து மோகனூர்ச் சாலையில் 11 கிலோ மீட்டர் தூரத்திலுள்ளது. இக்கோயில் வைப்புத்தலங்களில் ஒன்று. அப்பர் சுவாமிகள் பாடிய ஆறும் திருமுறையில் "கொடுங்கோளூர் அஞ்சைக்களம் செங்குன்றூர்" என்று தொடங்கும் பாட்டில் "இடும்பாவனம் எழுமூர் ஏழூர்-தோழூர்" என வருகிறது. ஏழூர் திருச் செங்கோடு-ராசிபுரம் சாலையில் வையப்ப மலைக்குச் சற்று தூரத்தேயுள்ளது தேசீசுரர் கோயில். இருகோயில்களும் பழமையானவை. பழுது பார்க்க வேண்டிய நிலையிலுள்ளவை.



# கொல்லிமலை அறப்பளீச்சுரர் கோயில்

கொல்லிமலை சேலம் மாவட்டத்தின் ராசிபுரம், நாமக்கல் வட்டங்களில் அமைந்துள்ளது. அக்காலத்தில் கடையெழுவள்ளல்களில் ஒருவனான ஓரி ஆண்ட நாடு. இக்காலத்தில் திருச்சி, சேலம் மாவட்டங்களின் எல்லையாய்த் திகழ்வது. இம் மலையின் உயரம் கடல் மட்டத்திற்குமேல் 4500 அடியாகும். சுமார் 260 கிராமங்களைக் கொண்டது. இக்கிராமங்கள் பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ராசிபுரம் வட்டத்தில் ஒன்பது நாடுகளும், நாமக்கல் வட்டத்தில் ஏழு நாடுகளும் இருக்கின்றன. பரப்பு 87 சதுர மைல்களாகும். மலைப்பகுதியில் வனவிலங்குகளான கரடிகளும், புலிகளும் வாழும் புதர்களும் உண்டு. இங்குள்ள பள்ளத்தாக்குகள் நான்கு. அவை விவசாயத்திற்குப் பயன்படத் தக்கவை. இம்மலை தென் வடலாய் 28 கிலோமீட்டர் நீளமும் கிழமேலாய் 19 கிலோமீட்டர் அகலமும் உள்ளது. கடுங் கோடையிலும் பச்சைப் பசேலென்ற புற்றரை காய்வதில்லை. மாடு மேய்த்தல் இங்குள்ள மக்களின் தொழில்களில் ஒன்று. இம்மக்கள் அனைவரும் மலைவாசிகளே. அவர்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் உண்டு. பண்டைத் தமிழ் மக்களான காஞ்சிபுரம் சோழர் பரம்பரையைச் சார்ந்தவர்கள் இக் கொல்லி மலையாளிகள். இங்கிருந்த ஆதிகுடிமக்களான கள்ளுக்குரவர்களை வென்று குடியேறியதாய்த் தெரிகிறது. மலையாளக் கவுண்டர்களில் 360 குலமுண்டு. அவற்றுள் முக்கியமானவை: சக்கரவர்த்தி, கூத்தாடி, கோப்பையன் சோத்தவட்டமன் கௌரசை, சிறுப்பை, வாரப்பன். இவர்களின் தலைவர்

களுக்கு பட்டக்காரர் என்றும் அடுத்தவருக்குக் கரைக்காரர் என்றும் பெயர். குலதெய்வம் தம்மாம்பட்டி கலியபெருமாள் கோவில். தலைவர் வளப்பூர் நாட்டிலுள்ளார். அதிக மரியாதை இவருக்குத்தான். இவர்களின் திருமணச் சடங்கு மாரியம்மன் கோயிலில் நடைபெறுகிறது. தாலியை மணப்பெண் கழுத்தில் கரைக்காரன் கட்டுகிறான். ஜீவனத்திற்குப் பணம் கொடுத்து மணவிலக்கம் செய்து கொள்கிறார்கள். தமிழை இராகத்துடன் இழுத்தும் சில சொற்களை மாற்றியும் பேசுகின்றனர். ஒருசில சொற்களை நீங்களும் தெரிந்துகொள்ளுங்கள்.

சுமைதாங்கி—இளைப்பாத்தி
வேலி நடைபாதை— ஏற்கை
அம்மா— ஆயா
அப்பா—அப்பான்
பாட்டி—பெத்தாயா
பாட்டன்—(அப்பா அம்மாவைப் பெற்றவர்)—பெத்தப்பா

ஆண்களின் உடை: கோவணம், சட்டை, தலைத் துண்டு.

பெண்களின் உடை: மார்புவரை வேட்டி, தலைத் துண்டு.

பெயர் வகைகளைச் சற்று பார்ப்போமா?

ஆண்களுக்கு இடப்படும் பெயர்கள்: காளி, பிடாரன், கொங்கன், ஆண்டி.

பெண்களுக்கு இடப்படும் பெயர்கள்: பிடாரி, காளி, கொங்காய் என்பன. அரிப்பூர் நாட்டில் மாசி பெரியசாமி கல் மேடையும், வளப்பூர் தர்மராஜா கோவிலும், மேல் கலிங்கம்பட்டி சேலமுடையான் கோவிலும், இவர்களின் குலதெய்வங்களாகும். இனி அறப்பளீசுரர் கோயிலுக்குப் போகலாமா?

நாமக்கல்லிலிருந்து 11 கிலோமீட்டர் தூரத்திலுள்ள சேந்தமங்கலம் சென்று அங்கிருந்து சுமார் 36 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள சோலைக்கொல்லை வழியாகப் போகவேண்டும். சோலைக்கொல்லைவரை கொண்டை ஊசி வளைவுகளுடைய நல்ல மலைப் பாதையுண்டு. வாகனங்கள் செல்லும். அங்கிருந்து வாகனங்கள் மேலும் செல்ல வசதியான பாதை அமைத்துக் கொண்டிருக்கின்றனர். குறுக்கு வழியாய் நடந்து செல்லலாம். நடு நடுவே பாதை புதரைக் கிழித்துச் செல்கிறது. புலி கரடியுண்டு என்பதைப் புரிந்தவர்கட்குக் கிலியும் தயக்கமும் ஏற்படும். குறுக்கும் நெடுக்குமாக ஒற்றையடிப் பாதையால் மலைகளைக் கடப்பதில் மலைத்துவிடாது மேலும் நடக்கவேண்டும். ஆறு மைல் பதினாறு மைலாகத் தோன்றும். அலுத்துவிடக் கூடாது. ஐயாறென்ற கோயிலாற்றங்கரையைக் கண்டதும் குதூகலம் கரைபுரளுகிறது. இந்நதியில் நீர்வீழ்ச்சிகளும் உண்டு. குளிக்கத் தோன்றுகிறது. குளிர்ந்த நீர். மலையில் ஓடிவரும் நீர். மருந்து மூலிகைகளைக் கொண்டுவரும் நீர். தொட்டால் இன்பம், விட்டு வந்தால் வேதனை. அதிற்குளித்தால் அயர்ச்சி நீங்கும். தளர்ச்சி போகும். மகிழ்ச்சி பொங்கும். ஆற்றைக் கடந்தால் அறப்பளீசுவரர் சந்நிதியை யடையலாம். பாறையிற் கட்டிய கோயில். அதனால் அறப்பள்ளி என்றழைக்கப்படுகிறது. இக்கோயிலமைந்துள்ள மலைக்குச் சதுரகிரி என்று பெயர். இம்மலைமேலுள்ள அறப்பளீசுவரர் ஆலயத்தின் மேற்புறம் கொல்லிப்பாவை இருந்ததாக கூறப்படுகிறது. கொல்லிப்பாவை என்றால் என்ன? என்ற ஐயம் எழுகிற தல்லவா? கொல்லிப் பாவை என்பது கொல்லி மலையில் இருந்த ஒரு தெய்விகப் பதுமை. அசுரர்களுக்கு அஞ்சிய தேவர்கள் கொல்லி மலையில் மறைந்து வசித்தனர். அசுரர்கள் அங்கு வந்தால் அவர்கள் மாய்ந்து ஒழிவதற்காகத் தேவர்கள் ஒரு சூழ்ச்சி செய்தனர். பேரழகு வாய்ந்த

பாவைஒன்றை மந்திர சக்தியால் செய்து நிறுவினர். அது மழை, காற்று, இடி, நிலநடுக்கம் எதனாலும் அழியாதது. அசுரர்கள் அம்மலைப்பக்கம் வந்தால், அப் பாவையானது தனது அழகிய கண்பார்வையாலும் புன் சிரிப்பாலும் காமம் விளைவித்து அவர்களைக் கொல்லும். பேரெழில் மிக்க பெண்டிருக்கு உவமையாகத் தமிழ் நூல்கள் அப்பாவையைக் கூறும். சிலப்பதிகாரம்—கடலாடு காதை வரிகள் 60, 61இல்

"செருவெங் கோலம் அவுணர் நீங்கத்
திருவின் வெய்யோள் ஆடிய பாவையும்"

எனவரும்.

அதற்குக் கொங்கு நாட்டுப் புலவரான அடியார்க்கு நல்லார் கூறிய உரை:—அவுணர் வெவ்விய போர் செய்வதற்குச் சமைந்த போர்க் கோலத்தோடு மோகித்து விழும்படி கொல்லிப்பாவை வடிவாய்ச் செய்யோள் ஆகிய திருமகளால் ஆடப்பட்ட பாவை என்னும் ஆடலும்" என்பது.

நற்றிணை 201 ஆம் செய்யுளில்—

"செவ்வேர்ப் பலவின் பயம் கெழு கொல்லித்
தெய்வம் காக்கும் தீதுதீர் நெடுங் கோட்டு
அவ் வெள்ளருவிக் குடவரை யகத்துக்
கால் பொருது இடிப்பினும், கதழ்உறை கடுகினும்,
உரும் உடன்று எறியினும், ஊறுபல தோன்றினும்,
பெருநிலம் கிளரினும், திருநல வுருவின்
மாயா இயற்கைப் பாவையின்
போதல் ஒல்லாள் என் நெஞ்சகத்தாளே."

எனக் கூறப்பட்டுள்ளது.

குறுந்தொகை 81ஆம் செய்யுளில்

"பெரும்பூண் பொறையன் பேமுதிர் கொல்லிக்
கருங்கண் தெய்வம் குடவரை எழுதிய
நல்லியற் பாவை"

என்றும் கொல்லிப் பாவை பேசப்படுகிறது. பிற்கால இலக்கியங்களிலும் உவமையாக வருகிறது. இனி, இராசகோபுரமில்லா தலைவாயில் வழியே கோயிலுள் நுழையலாம். சுவாமியின் பெயர் அறப்பளீசுவரர். கிழக்கு நோக்கியிருக்கிறார். அம்மன் தாயம்மை. நல்ல அழகுடையவள். தெற்கு நோக்கி நிற்கிறாள். ஆறுமுக சுப்பிரமணியர் வள்ளி தெய்வானையுடன் வடக்கு நோக்கித் தாயைப் பார்த்திருக்கிறார். இறைவியின் கோபத்தைத் தணிப்பதற்காக அவ்வாறு கட்டப்பட்ட கோயில் என்கிறார்கள்.

நடராசர், சண்டேசுரர், தக்ஷிணாமூர்த்தி, விநாயகர் ஆகியோருக்குத் தனித்தனி சந்நிதியுண்டு. கோயில் சுற்றுப் புறங்களில் பல கல் வெட்டுக்கள் காணப்படுகின்றன. தென்னிந்தியக் கல்வெட்டுக் கழகத்தின் 1930ம் வருட ஆண்டறிக்கையில் 20 கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. பத்து அரச பரம்பரை பற்றியும் அரசாண்ட மன்னர்களைப்பற்றியும் அவர்கள் செய்த சேவைபற்றியும் அவை கூறுகின்றன. அவற்றுள் விஜயநகர வெங்கடபதி தேவராஜன், சோழப் பரகேசரிவர்மன், ராஜாதி ராஜதேவன், ராஜகேசரி வர்மன், குலோத்துங்க சோழன், ஆகியோரர் குறிப்பிடத் தக்கவர்கள். அக்கல் வெட்டுக்களில் இவ்விறைவன் பெயர் திருவறப்பள்ளி உடையார், திருவறப்பள்ளி மகாதேவன், திருவறப்பள்ளி ஆழ்வார் என்பன. சுப்பிரமண்யர் இளையநயினார் என்று குறிக்கப்படுகிறார். ஆடிப்பதினெட்டில் மூன்றுநாள் விழா கும்பல் கூடுகிறது. மற்ற நாட்களில், யாத்திரீகர்கள் வருவது அரிதுதான். கார்த்திகைத் தீபம், பொங்கல், நவராத்திரி ஆகிய விசேட தினங்களுக்குப் பக்கத்து ஊர்களிலுள்ள மக்கள் வந்து வணங்கிச் செல்கின்றனர். தினமும் இருவேளை பூசை. பூசை செய்பவர் கோயிலினுள்ளேயே தங்கிக்கொள்கிறார். போக்குவரத்திற்கான சாலை ஏற்பட்டபின் இக்கோயிலுக்கு அதிக பக்தர்கள்

வரக்கூடும். அறப்பளீச்சுரம் அமைந்துள்ளது வளப்பூர் நாடு. இதன் பக்கலில் ஒரு வீடுகூட இல்லை. இரு பர்லாங் தூரத்திலுள்ளது கோயிலூர். சுமார் முப்பது நாற்பது வீடுண்டு. ஒருமைல் தூரத்தில் அங்காடு பருத்திமூடி ஆகிய குக்கிராமங்களும் உண்டு. இந்த அறப்பளீசுரம் வைப்புத் தலங்களில் ஒன்று. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த அடைவுத் திருத்தாண்டகத்து முதற்பாட்டில்

"பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்
கரப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார்
கமழ் கொல்லி யறைப்பள்ளி"

என வைத்துப் பாடப் பெறுகிறது இக்கொல்லிமலை.

இம்மலைக்கு திருப்புகழ்ப் பாடல்கள் உண்டு. அவை (1) தொல்லைமுதல் தானொன்று மெல்லியிரு பேதங்கள்......... கொல்லிமலைமேல் நின்ற பெருமாளே". (2) கட்டமன்று மள்ளக்கொட்டி பண்ணுமைவர்......பட்டமன்ன வல்லிமட்ட மன்னவல்கி பட்டதுன்று கொல்லி மலைநாடா". என்பனவாம். இவ்விறைவன்மீது அம்பலவாணக் கவிராயர் அறப்பளீசுர சதகம் பாடியுள்ளார். ஒவ்வொரு பாட்டின் ஈற்றடியிலும் கவிராயர், தன்னைப் போற்றிக் காத்த சேந்தமங்கலம் அருமைநாயகம் பிள்ளையை "அருள் மதவேள்" எனக் குறிக்கிறார்.

"அண்ணலெமை தருமை மதவேள்,
அநுதினமும் மனதில் நினைதரு சதுரகிரி வளர்
அறப்பளீ சுரதேவனே."

எனச் சதகத்தின் பாடல்கள் முடிகின்றன.



சாந்தலிங்கர் திருமடம்—முகப்பு.



சாந்தலிங்கர் திருக்கோயில்—மூலவர்.

# பேரூர் – சாந்தலிங்கர் திருமடமும் கோயிலும்

முன்காலத்தில் காடு மலைபோன்றவற்றில் முனி புங்கவர்கள் தவமியற்றினர். காலப் போக்கில் மலைகட்குச் செல்லமுடியாதபோது மக்கள் அத்தவசிகட்கு ஊரின் ஓரத்தே தங்கியிருந்து தவமியற்றத் தனி வீடுகள் அமைத்துக் கொடுத்தனர். முத்திக்கான வித்தை விதைக்கும் இடமாய்த் திகழ்ந்தன இவ்வீடுகள். இவ் வீடுகளை மடங்கள் என்று அழைத்தனர். மடம் என்ற சொல்லுக்கு வீடுஎன்று பொருள்.

'மடம்' என்ற சொல்லுக்கு வீடு என்று பொருளாயினும் சிறப்பாய்க் குறிப்பது தவசிகள் வாழும் இடத்தையே. இத்தவசிகள் மடத்தில் தங்கித் தவத்தையும் கல்வியையும் வளர்த்துவந்தனர். மெய்யுணர்வு பெற்ற ஞானிகள் தாங்கள் பெற்ற இன்பத்தைத் தன்னைப் போன்ற துறவிகளும் பெறவேண்டும் என்ற பெரு நோக்கோடு அவர்களையும் அவ்வீட்டில் இருக்கச் செய்து வந்தனர். அத்தவசிகள் கூட்டத்தில் மிகச் சிறந்தவர் மடாதிபதியாகத் திகழ்ந்தார். ஒருவேளை உணவை உண்டு, ஒருமுழத் துண்டை உடுத்தி, ஞானத்தை விழைந்து நின்ற இத்துறவிகளுக்காக அன்றைய அரசும் பல மடங்களைக் கட்டிக் கொடுத்ததாய்க் கல் வெட்டுக்கள் கூறும். அவர்களின் குறைவான தேவையையும், பிறழாத தெய்வ சிந்தனையையும் எண்ணித் தங்கள் காலத்திற்குப்பின்பும் கடவுட்பணி தொடர்ந்து

நடக்கவேண்டும் என எண்ணிய தரும சீலர்கள் நிலத்தையும் பொருளையும் தானமாய்க் கொடுத்தனர். அம் மடங்கள் கடவுட்பணி செய்வதுடன் தமிழ் ஆயும் கூடங்களாகவும், சாதனை புரியும் தவச்சாலைகளாகவும், தெய்வத் தன்மையைப் பரப்பும் பீடங்களாகவும் அமைந்து விளங்கின. அவ்வாறான மடங்கள் கொங்கு நாட்டில் நிரம்ப உண்டு. இன்று கோயமுத்தூரை யடுத்து மூன்றரை மைல் தூரத்தில் உள்ள பேரூரி லிருக்கும் தவத்திரு சாந்தலிங்கர் திருமடத்தின் வரலாற்றைத் தெரிந்துகொள்ளலாமா?

பதின்மூன்றாம் நூற்றாண்டில் சோழ சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக்குப்பிறகு மெய்கண்டசந்தானம் தோன்றி மக்களுக்கு வழிகாட்டி ஒழுங்கைப் பேணிச் சமயத்தை வளர்த்து வந்தது. 17, 18, 19-ம் நூற்றாண்டுகளில் அந்நிய ஆட்சிக் காலத்தில் பல சங்கடங்களை மடாலயங்கள் சமாளிக்க நேர்ந்தன. "தர்மம் குன்றி அதர்மம் மேலிடும்போது மனித இனத்தின் நன்மைக்காக நான் உலகிலே தோன்றுகிறேன்" என்று கண்ணன் சொன்னபடி அவ்வப்போது ஆன்மீகத்துறையில் மாபெரும் குரவர்கள் தோன்றிச் செயற்கரிய செயல்கள் செய்துள்ளனர். பேருண்மைகளை உடைய ஞான நூல்களை அருளிச் செய்தார்கள். தீர்க்கதரிசிகளாய்த் திகழ்ந்தார்கள். மூல முதல்வனைப் பரிபக்குவம் அடைந்த ஆன்மாக்களுக்குத் தீட்சையாலும் உபதேசத்தாலும் உணர்த்தும் உரிமை உடைய இவர்களை இறைவனின் திரு அவதாரம் என்று எண்ணுவர். "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்கிறார் அருணகிரிநாதர்.

"வார்த்தை சொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்கிறார் தாயுமானவர். அவர்கள் ஞான குரவர்கள். மெய்கண்டார்பரம்பரையில் மெய்கண்டதேவர், அருணந்திசிவாச்சாரியார், மறைஞான சம்பந்த சிவாச்

சாரியார், உமாபதி சிவாசாரியார், ஆகிய நால்வரை யும் சந்தானுசாரியார்கள் என்பர். இம் மெய்கண் டார் பரம்பரையில் வந்தவர் துறையூர்ச் சிவப்பிரகாசர். துறையூர்ச் சிவப்பிரகாசரின் மாணவர் சாந்தலிங்க சுவா மிகள். வீரசைவர். இலிங்காயத்தை அல்லது சிவாசாரி யத்தைத் தழுவியவர்; வீரசைவம் வேதாகம புராணங் களிலும் வேறு பல நூல்களிலும் இடம்பெற்றுள்ளது. வீரசைவர்கள் கடைப்பிடிக்கவேண்டிய முக்கிய விதிகள் நான்கு. (1) அஷ்டாவரணம் (அஷ்டம்-எட்டு. ஆவர ணம்-கோட்டை. "குரு, லிங்க, ஜங்கமம், விபூதி, ருத் ராக்கம், பஞ்சாட்சரம், தீர்த்தம், பிரசாதங்கள் என்னும் எட்டும் கோட்டையாம்) (2) தவம் (3) வேள்வியின் றிய சிவபூசை, (4) வேதாத்தியயனம். வீரசைவ சம யாசாரியார்கள் ஐவர். இவர்கள் சிவபெருமானுடைய ஐந்து முகங்களினின்றும் தோன்றியவர்கள். அவர்கள் இரேவணுத்யர், மருளாத்தியர், பண்டிதராத்தியர், ஏகோராமாத்தியர், விஸ்வராத்தியர் எனப்படுவர். இவர்களே வீரசைவத்தின் மூலமுதல்வர்கள். பரத நாட் டில் பல பாகங்களிலும் வீர சைவத்தைப் பரப்பிய உத்த மர்கள். வீரசைவர்களில் சாதிவேறுபாடு இல்லை. ஒன்றேகுலம். சிவன் ஒருவனே தேவன். அங்கம் வேறு இலிங்கம் வேறல்ல. தான் பூசிக்கும் ஆன்மார்த்த மூர்த் தியைச் சம்பூடம் ஒன்றிலிட்டு நெஞ்சிலேயே தரித்திருப் பர். அவர்களின் நெஞ்சின் உள்ளேயும் சிவலிங்கம். நெஞ்சின் வெளியேயும் சிவலிங்கம். வீரசைவர்களின் திருமடங்கள் தமிழ்நாட்டில் பன்னிரண்டு உண்டு. சாந்தலிங்கர் திருமடம் ஒரு வீரசைவ மடம். சமண மதம் காட்டுத் தீப்போல் பரவக் காரணங்கள் பல உண்டு. அவற்றிற் சில வைதிக சமயத்தில் இருந்த சாதிச்சமயப் பூசல்கள், பொருளற்ற ஆசாரங்கள், சடங்குகள் ஆகும். வீரசைவ மதத்தில் இவற்றிற்கு இடமிருந்ததில்லை. எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் கன்னட நாட்டில் தோன்றிய பசவேசர் அந்த வீரசைவத்திற்குப் புத்

துயிர் கொடுத்தார். பசவேசர் ஆண்டவனைப்பற்றி உணர்ந்த உண்மைகளை அருள்வாக்காய் மக்களுக்குக் கொடுத்துள்ளார். அவை பசவ வசனங்கள் எனப்படும். தமிழ் நாட்டிலும் வீரசைவம் தலையெடுத்துப் பரவி வந்தது. அதன்வழி வந்தவரே சாந்தலிங்கரும்.

"யார் இந்தச் சாந்தலிங்கர்?" என்று அறிய முயல்கிறீர்களல்லவா? சாந்தலிங்கர் பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தோன்றியவர். அவருக்கு இளமையில் துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகளின் தொடர்பு கிடைத்தது. துறையூர் சிவப்பிரகாசர் சிதம்பரத்தில் கூத்தப்பிரானுக்கு நாள்வழிபாடு குன்றியதை நீக்கியவர். திருவண்ணுமலையில் பல உண்மைப் பொருள்களை சாந்தலிங்கருக்கு உணர்த்தியவரும் இவரேயாவர். சாந்தலிங்கர் பொம்மபுரம் சிவஞான பாலைய சுவாமிகளைக் காணும்பொருட்டுச் செல்லும் போது துறைமங்கலம் சிவப்பிரகாசர் தொடர்பு கிடைத்தது. துறைமங்கலம் சிவப்பிரகாசருக்கு வேலாயுதம், கருணைப்பிரகாசம் என்ற இருதம்பியரும், ஞானம்பிகை என்ற தங்கையும் உண்டு. சிவஞான பாலையசுவாமிகளிடம் சிவப்பிரகாசரை ஆற்றுப்படுத்தியவர் சாந்தலிங்கர். ஞானம்பிகையைச் சாந்தலிங்கருக்குத் திருமணம் செய்து கொடுத்தார் சிவப்பிரகாசர். திக்கெலாம் புகழ் திருநெல்வேலியிலுள்ள சிந்துபூந்துறை வெள்ளியம்பலவாண சுவாமிகளிடம் பக்கலிலிருந்து இலக்கண இலக்கியபாடம் கேட்டவர். முப்பத்திரண்டாண்டே வாழ்ந்த செந்தமிழ்ச் செம்மல் சிவப்பிரகாசர் முப்பத்திரண்டு நூல்கள் மொழிந்துள்ளார்.

ஞானம்பிகையுடன் சாந்தலிங்கர் பேரூர் வந்து தங்கியிருந்து அன்பர்கட்கு ஞானநூல்களை விளக்கிக் கூறினர். நிட்டைகூடி நெடுநேரம் இருக்கும்போது அம்பலவாணரைப் பச்சைநாயகியுடன் பலமுறை விடை



சாந்தலிங்கர் திருக்கோயில்—உற்சவமூர்த்தி.

யூர்தியில் காணும்பேறு பெற்றிருக்கிறார். அதற்குச் சான்று;

"பிரானேதிருத்தில்லையுள்ளாய்
அன்றிப்பேதையேன் முன்
ஓரானேறிவர்ந்து அம்பிகை
யோடெளிதோடி வந்தாய்
வரானேதினம் எம்பிறை
என்றுனை நாடிவாடி
இராநா யடியேற்கு எதிர்
தோன்றிலை இன்றிதென்னே"

என்ற பாட்டாகும்.

அருளுடைமை, இறையன்பு, மெய்யுணர்வு ஆகிய மேன்மைக் குணங்களின் முதிர்ச்சியால் இஞ்ஞானி இயற்றிய நூல்கள் நான்கு. கொலை மறுத்தல், வைராக்கிய தீபம், வைராக்கியசதகம், அவிரோத வுந்தியார் என்பவை அவை. இன்றும் இந்த நான்கு நூல்களும் வேதாந்தத் திருமடங்களின் சாத்திர நூல்கள் பதினுறனுள் தலைசிறந்தனவாய்ப் போற்றிப் புகழப்பெறுகின்றன. பரிபக்குவமடைந்த பல ஆன்மாக்கள் சாந்தலிங்கரை நாடி வந்தன. இவ்விடத்தில் ஞானோபதேசம் பெற்று நூலாய்ந்து, ஞான நிட்டை கூடியவர்கள் எத்தனை எத்தனையோபேர். அவர்களில் முக்கியமானவர் குமாரதேவர். குமாரதேவர் கன்னட நாட்டரசர். வீரசைவ நெறியினர். அரசைத் துறந்து, அருமை மனைவியை விட்டு, அப்பனையும் அன்னையையும் நீத்து அத்தனை அடைய அருட்குருவைத் தேடி வரும்போது பேரூரில் சாந்தலிங்கரின் மாணவரானார். புலவர்வதன்முன் அரிகிட்டு மெழுக்குமிட்டுக் குரு ஆணைப்படி எருதுக்குப் புல்லறுக்கப்போய், இடக்கையை யறுத்த வலக்கையைக் கோபித்த வரலாற்றுச் செய்தியையும் அறிகிறோம். குமாரதேவர் உபதேசம்

பெற விரும்பியபடி அவருக்கு ஞானோபதேசம் செய்த சாந்தலிங்கரே ''மகாராஜா'' என அழைக்கும் பேறு பெற்றார் இக்குமாரதேவர். ''மகாராஜா துறவு'' போன்ற பதினாறு சாத்திர நூல்கள் அருளிச் செய்தார். சாந்தலிங்கரின் அருளாணையின் வண்ணம் மணிமுத்தா நதிக்கரையில் திருமுதுகுன்றம் என்ற விருத்தாசலத்தில் திருமடம் அமைத்துத் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் போன்ற தவச்சீலர்களை உருவாக்கினார்.

சாந்தலிங்கரின் ஞானபரம்பரையில் வந்த நல்முத்து இக்கவிராசர் சிதம்பர சுவாமிகள். மதுரை அங்கயற்கண்ணிக்கு மீனாட்சியம்மை கலிவெண்பாவும், தம் ஞான குருவான குமாரதேவருக்கு நெஞ்சுவிடு தூதும் நல்லார்க்கு நல்லவனான சமராபுரிச் சண்முகனுக்குத் திருப்போரூர்ச் சந்நிதி முறையும் பாடிய நூலாசிரியர் இச்சிதம்பர சுவாமிகள். அருண்மிகு சாந்தலிங்கர் இயற்றிய அருமையான நான்குமணிநூல்களுக்கும் ஒழிவிலொடுக்கத்திற்கும் இவரே உரையாசிரியர். திருப்போரூர்ச் சிதம்பர முனிவர் முதன் முதலில் ஞானப்பசியால் நாடிவந்த இடமும் இத்திருப்பேரூர்ச் சாந்தலிங்கர் மடமேயாகும்.

இன்றும் சாந்தலிங்கர் பற்றிய கர்ணபரம்பரைக் கதையால் நாம் அறியும் பல செய்திகள் நிறைய உண்டு. இரண்டொன்றைத் தெரிந்து கொண்டால் அவருடைய உயர்நிலையைத் தெரிந்துகொள்ளலாம். புரிந்துகொள்ளலாம். துறவறம் ஏற்குமுன் 'இன்று பிச்சைக்குச் செல்கையில் முதலில் பாலன்னம் கிடைப்பின் பேரூர் எம்பெருமான் ஆணை எனக்கொண்டு துறவறம் மேற்கொள்வோம்'' எனக் கூறிச் சென்றதாயும், முதன் முதலில் ஓர் இடையன் பால் அன்னம் அளிப்பச் சாந்தலிங்கர் துறவறம் பூண்டதாயும் கூறுவர். சந்நியாசிக்குத் திரு ஓட்டின்மீது பற்றுண்டென்று கூறுவரல்லவா! அதுவும் இல்லாது கையிலே உணவேற்று

உண்டு, காஞ்சிமா நதிநீரைக் குடித்து வாழ்ந்த பெரியவரவர். மற்றொருநாள் பிச்சைக்குச் சென்றபோது சிறுவன் ஒருவனை அருளுடன் நோக்க அவனும் நாளுக்குநாள் பற்று நீங்கித் துறவறத்தை மேற்கொண்டானும். இதனையுணர்ந்த ஏனையபெண்கள் இவர் பிச்சைக்கு வரும்போது தத்தம் பிள்ளைகளை மறைத்து வைப்பார்களாம். என்னே கண் பார்வையின் மகிமை! அதனாற்றான் நம் வல்வினையைச் சுட்டெரிக்கப் பெரியோர்களின் கண்பார்வை படவேண்டும் என்கிறார்கள் போலும்!

சாந்தலிங்கர் சுயசொரூப ஞானி. அங்கத் தலத்தில் போதிக்கும் ஆசரணையினால் அங்கியாகித் தத் சம்பந்தமான இலிங்கத் தலத்தில் போதிக்கும் ஆசரணையினால் லிங்கியாகி உபயாசரணையினால் அங்கலிங்க சங்கியாகியவர்.

சிலகாலம் இத்திருமடம் மகமதியப் படையெடுப்பால் காலத்தின் வேகத்தில் இருக்கும் இடம் தெரியாதிருந்தது. ஆனால் சாந்தலிங்கர் இயற்றிய கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் எனும் நூல்கள் அறிஞர் மத்தியில் சிறந்து விளங்கினமையால் இத்திருமடமும் பிற்காலத்தே சிறப்புறலாயிற்று. 19-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இம்மடத்தின் வரலாற்றில் ஒரு புது வாழ்வு ஏற்பட்டது எனக் கூறலாம். போலீஸ் இன்ஸ்பெக்டர் பொன்னுரங்க முதலியார் தம் சொப்பனத்தில் சாந்தலிங்கர் கட்டளையிட்டபடி கள்ளிகளை நீக்கிச் சமாதி இடத்தைக் கண்டுபிடித்தார். கோயிலை எழுப்பினார். கிணறு ஒன்றும் தோண்டுவித்தார். அதற்கான கல்வெட்டொன்று காணப்படுகிறது. கொங்கு நாட்டில் இந்த நூற்றாண்டில் தலைசிறந்த ஞானவானாய்த் திகழ்ந்தவர், தண்பாண்டி நாட்டுத் தண்டபாணிசுவாமிகளின் மாணவர் சிரவணபுரம் இராமானந்த சுவாமிகள்.

அவர்தம் மடத்துச் சீடர்களைக்கொண்டு சாந்தலிங்க ருக்கு முட்டின்றிப் பூசை செய்வித்தார். திருமடத்திற்கு மடாதிபதியை ஏற்படுத்தித் துறவிகளை இருக்கச்செய்து பல சீர்திருத்தங்களையும் செய்தார். இந்நிலைய வளர்ச்சியில் பாடுபட்ட சாதுக்கள் மௌன சுவாமிகள், இராமலிங்கசுவாமிகள் போன்றோர். மாணிக்க சுவாமிகள் காலத்தில் மடத்தின் செல்வாக்கு வளரத் தொடங்கிற்று. இன்றிருக்கும் நல்ல பெரிய கட்டிடத்தை எழுப்பினார். நிரந்தர வருவாயாக நிலமும், நெல் ஆலையும் அமைத்துப் பொருள் வருவாயை அதிகரித்தார். அருள்பரப்பச் சத்வித்யா சன்மார்க்க சங்கம் நிறுவினார். அச்சங்கமும் திருமடமும் செவ்வனே தொழிற்படுவதற்குத் தம் செல்வத்தாலும், செல்வாக்காலும் பெரிதும் உதவினவர்கள் கொங்குநாட்டுத் தனவந்தர்கள். அக்காலத்திய மகான்கள் வீரசுப்பைய சுவாமிகள், வல்லநாடு இராமலிங்க சுவாமிகள், திருவையாறு சிதம்பர சுவாமிகள், ஞானியாரடிகள் சிரவணபுரம் கந்தசுவாமி சுவாமிகள், மறைமலையடிகள், கயப்பாக்கம். சதாசிவம் செட்டியார் முதலியோரையும் பெரும் அறிஞர்களையும் புலவர்களையும் கூட்டித் தமிழோடு சைவத்தை வளர்த்துவந்தார்கள். இச்சங்கம் சென்ற ஆண்டு பொன்விழாக் கண்டது.

மாணிக்க சுவாமிகளின் பின்வந்தவர் தவத்திரு ஆறுமுகசுவாமிகள். முதிர்ந்த பருவம். எளிய உருவம் அருள்நோக்கு. கருணை உள்ளம். சிவனை மறவாச் சிந்தை. "அர அர அர" என்றே மொழிந்து கொண்டிருக்கும் இவரிடம் அணுகினால் "சாப்பிட்டீர்களா? இல்லையெனில் சாப்பிட்டு வந்து பேசுங்கள்" என அன்புக்கட்டளையிடுவார். வாழ்வு முழுவதும் வழங்கிய பழமையுணர்வு. இந்த இடத்தில் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்களின்

“ சோறு மணக்கும் மடங்களெலாந்
தூய்மை மணக்குஞ் சிந்தையெலாந்

நீறு மணக்கு நெற்றியெலாம்
நெய்யே மணக்குங் கறிகளெலாம்
நெருப்பு மணக்குங்
குண்டமெலாம் ”

என்ற, சேக்கிழார் பிள்ளைத்தமிழ்ப்பாடல் ஞாபகத்திற்கு வரும். இவர்கள் காலத்தில் உயர் தொடக்கப்பள்ளி, தமிழ்க்கல்லூரி, உயர்நிலைப்பள்ளி ஆகிய கல்வி நிலையங்கள் சாந்தலிங்கர் பெயரால் நிறுவப்பெற்றன. கோவைத் திருவாளர்கள்:—ஆர். கே. சண்முகஞ் செட்டியார், வி. சி. சுப்பையா கவுண்டர், சி. கே. சுப்பிரமணிய முதலியார், சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், நா. மகாலிங்கம் ஆகியோர் தமிழ்க் கல்லூரியின் வளர்ப்புத் தந்தைகளில் முக்கியமானவர்கள். இக்கல்லூரியை வளர்த்த பெரும் புலவர்களுள் சிவக்கவிமணி, கோவை கிழார், இலக்கண நிறைகடல் கந்தசாமிபிள்ளை, கவியரசு நடேச கவுண்டர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். ‘ஆசிரியர்’ என்பதற்கு வேண்டிய இலக்கணத்திற்கு இலக்கணமாய்க் குடத்திலிட்ட விளக்கென அமைதியாய்த் தமிழ்ப்பணிபுரியும் வையாபுரியாரை இக்கல்லூரி ஆசிரியராயுடையது. ஆறுமுக சுவாமிகளின் ஆணைபெற்றுக் கல்வி நிலையங்களை உருவாக்கிய பெருமை அவர் காலத்தில் இளவரசாயிருந்த இராமசாமியடிகளைச் சாரும். மடாதிபதியாகப் போகிறவரை இளவரசு என்றும் ஒடுக்கத்தம்பிரான் என்றும் புதுப் பெரியவாள் என்றும் அந்த அந்த மடத்துச் சம்பிரதாயத்திற்கு ஒப்ப அழைப்பது வழக்கம். இப்போது இவர்கள் சாந்தலிங்க இராமசாமியடிகள் என்ற தீட்சா நாமத்தோடு மடாதிபதியாக விளங்குகிறார்கள். மாணிக்க சுவாமிகட்கும், ஆறுமுக சுவாமிகட்கும் வீரசைவத் தீட்சை செய்து வைத்தவர் திருவையாற்று

அறுபத்துமூவர் மடத்துத் தலைவராயிருந்த சிதம்பர சுவாமிகளாவர். ஆனால் இன்றுள்ள மடாதிபதிக்கு வீரசைவத்தீட்சை செய்து வைத்தவர் மயிலம் பொம்மபுர ஆதீனம் 18-ம் பட்டத்துச் சிவஞான பாலைய சுவாமிகள். இவர் இருபதாம் நூற்றாண்டில் நடு நாட்டில் நடமாடும் தெய்வமாய், எளிமையான தோற்றத்துடனும், படாடோபமற்ற பண்புடனும், எப்போதும் சமய சிந்தனையும் தமிழாராய்ச்சியும்செய்து திகழ்ந்தவர்கள். அவர்களின் மாணவரல்லவா இச்சாந்தலிங்க இராமசாமியடிகள். இவரும் நாவுக்கரசரின் அடிச்சுவட்டில் "என் கடன் பணிசெய்து கிடப்பதே" எனத் தொண்டிலே நாட்டம் கொண்டவர். எல்லோரிடமும் எளிமையுடன் பழகுகிறார். சிரித்துப் பேசிக் கொங்குத் தமிழால் சிந்தை கவர்கிறார். திருவள்ளுவத்தில் நல்ல தேற்றம். திருமுறைகளில் அவருக்கு நல்லநாட்டம். மக்களுக்குத் தொண்டு புரிந்து மகேசுவரனையடைய வேண்டும் என்பது அவர் குறிக்கோள்.

இங்குத் தங்கியிருந்து தொண்டுசெய்துவந்த துறவிகளில் சிவஇராமலிங்க சுவாமிகள், சச்சிதானந்த சுவாமிகள், சிவசுவாமிகள் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். சிவசுவாமிகள் தமிழ், வடமொழி, ஆங்கிலம் கற்றவர்கள்; வேதாந்த விற்பன்னர்; உலகியல் தொல்லை எதிலும் தலையிட்டுக் கொள்ளாமல் பூமாலைத் திருப்பணியையும், விரும்பியவர்கட்கு வேதாந்த நூல் பாடம் சொல்வதையுமே தமது கடமையாகக் கொண்டு அமைதியாக வாழ்ந்துவந்தவர். கோயமுத்தூர் இராமசாமி முதலியார் மகள் கௌசலாம்மாள் தனது கடைசி காலத்தில் இங்குத் தங்கியிருக்கும்போது ரூபாய் பத்தாயிரம் செலவில் சாந்தலிங்கர் கோயிலைக் கட்டிக்கொடுத்தார்கள்.

சாந்தலிங்கரின் அருளைத் தெரியச் சில நிகழ்ச்சிகளைக் குறிப்பிடலாம். மாணிக்க சுவாமிகள் காலத்தில்

மடத்தின் கட்டிட வேலை நடந்துகொண்டிருந்த சமயம் கட்டிட வேலைக்காரர்களுக்கெல்லாம் சாப்பாடுபோட்டுக் கூலிகொடுத்து வந்தார். அட்டில் காரியங்களை நன்கு கக் கவனித்துக் கொண்டிருந்தவர் பாட்டி அங்கம்மாள் என்ற பெண்ணடியார். அந்த முதிர்ந்த அம்மையார் அனாதையாய்க் கண்ஒளி குன்றியவராய் வறுமையில் வாடி சாந்தலிங்கர் திருமடம் நாடி வந்து சேர்ந்தவர். அவருடைய கோலத்தைக்கண்ட மாணிக்க சுவாமிகள் மனம் இரங்கி உண்டியும் உடையும் கொடுத்துக் காப் பாற்றினர். சுவாமிகளின் அனுமதிபெற்று மடத்தின் வெளிப்புறத்தில் தங்கியிருந்து தம் குறைந்த கண் ஒளி யோடும் அலகிடுதல், மெழுக்கிடுதல் முதலிய புறப்பணி முறைகளை அன்போடு சில ஆண்டுகள் செய்துவந் தார். அப்புண்ணியத்தின் பயனாகக் கண்பார்வை நன்கு பெற்றவரானார். அவர் வாழ்நாள் முழுவதும் அடியார் கட்கு அமுதட்டு அளிக்கும் பணியில் பெரிதும் ஈடுபட் டிருந்தார். கல்வி நிலையக் கட்டிடத்தைத் திறக்க வந்த அன்றைய கல்வி அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் தாம் இந்த மண்ணில் 90 நாள் இருந்து அன்று தொண்டு செய்ததின் பயனை இன்று அனுபவிப்பதாய்க் கூட்டத் திற் கூறிப் பெருமைப்பட்டதாகவும் கூறுவர்.

சாந்தலிங்கர் திருக்கோயில் மண் புனிதமானது. பல பெரியவர்களின் பாதம்பட்டதால் மாத்திரமல்ல; எண்ணரிய காஞ்சிமா நதியின் மணலும், பேரை மட மும், கொலை மறுத்தல், வைராக்கிய தீபம், வைராக்கிய சதகம், அவிரோதவுந்தியார் ஆகியவற்றின் மூலத்தை மொழிந்த முனிபுங்கவ முதல்வர் திருவாக்கால் கேட்ட பேற்றையும், தென்னாட்டுச் சைவர் சிதம்பர சுவாமிகள் இந்நான்கு நூல்களுக்குப் எழுதிய நுண்மாண் நுழை புலனாராய்ச்சியுரையைச் செவிமடுக்கும் பெருமையையும் பெற்றவை, பட்டிப்பெருமானும், பச்சை நாயகியும் ஈராங்காய் வீற்றிருக்கும் கோயில் ஒருகண்ணாய்த் திகழும்

இப்பேரூருக்கு மறுகண்ணாய்த் திகழ்வது சாந்தலிங்கரின் திருமடம். குறுநில மன்னன் குமாரதேவர் கையாலேயே கூட்டிப் பெருக்கி மெழுகும் பேறுபெற்றது. வழியாய்ப் பல ஞானவான்கள் வந்து தங்கி ஞான விசாரணை செய்ததையும் இந்த இடம் அறியும். இன்று இந்த இடத்தில் சாந்தலிங்கரின் திருப்பெயரால் அமைந்துள்ள பள்ளிக்கூடங்கள் சுற்றிலும் உள்ள எண்ணற்ற குழந்தைகளுக்குக் கல்விச் சுடரை ஏற்றி ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்கின்றன. தமிழ்க்கல்லூரி தமிழாய்கிறது.

இச்சாந்தலிங்க முனிவரைப் பிள்ளைத்தமிழ் பாடிப் பெருமை பெற்றவர்கள் சிரவணபுரம் தவத்திரு கந்தசாமி சுவாமிகள். கும்மிப்பாடலும், சிலேடைப் பாடலும் பாடிப் புகழ்பெற்றவர் கவியரசு நடேசகவுண்டர். சாந்தலிங்கரைப் பாமாலை பாடிப் பரவ முடியா நாம் அவரைப் பரவிப் பணிந்து அருள்பெறலாம், ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்கிய மகான் நம் அன்பிற்கும் அருள்புரிவான். நம்பினோர் கெடுவதில்லை. நல்ல மூர்த்தி. நீங்களும் அஞ்சலித்து அருள் பெறுவீராக!

"சாந்தலிங்க, தேசிகா தண்ணருள் புரிந்துகா"



கௌமார மடம்—முகப்புத் தோற்றம்

# சிரவைக் கௌமாரத் திருமடம்

குமரனைத் தலைவனாகக் கொண்டது கௌமாரம். அதைத் தென்னாட்டில் சைவர்கள் ஆதரித்தனர். வீர சைவத்தினர் போற்றினர். குமரனின் திருக்கோயில்கள் சிலசைவர்கள், மற்றும் சில வீரசைவர்களின் பராமரிப்பிலிருப்பதே அதற்கான ஆதாரம். திருப்போரூர் முருகன் கோவில், மயிலம் சுப்பிரமணியரின் கோவில், திருப்பாதிரிப்புலியூர் சண்முக சுப்பிரமணியர் கோவில் போன்றவை வீரசைவத் திருமடங்கட்குச் சொந்தமானவை. பத்தொன்பதாம் நூற்றாண்டிற்கு முன் கௌமாரத் திருமடங்கள்பற்றிய விரிவான குறிப்புக் கிடைக்கவில்லை.

வீரசைவ மடத்து அடியவர்களை இலிங்கதாரணத்தால் அறிந்துகொள்வது போன்று, வேதாந்த மடத்து அடியவர்களைக் கழுத்திலுள்ள வெள்ளைக் கயிற்று உருத்திராக்கமணியால் தெரிந்துகொள்வது போன்று, கௌமாரத் தொண்டர்களை வலதுகையில் கட்டியுள்ள சிவப்புக் கங்கணத்தால் புரிந்துகொள்ளலாம். பாண்டியநாட்டினர் பழநியைக் குன்றுதோருடலுக்கான மலையாகவும், பாண்டிய நாட்டின் பகுதியாகவும் கொண்டு ஆறுபடை வீட்டில் ஐந்தைத் தன்னகத்தே கொண்டதென்பர். அத்தண்பாண்டிநாட்டில் திக்கெலாம் புகழ் திருநெல்வேலியிற் றோன்றிய வண்ணச்சரபம் அருட்டிரு தண்டபாணிசுவாமிகள் முருகவழிபாட்டில் முற்றும் ஈடுபட்டுத் துறவியாகி கௌமாரத்தைத் தமிழகம் முழுவதும் பரப்புவாராயினர். இவர்களிடம் மாணவர்களாக

வந்தவர்களில் படித்தவர்களுண்டு, பண்டிதர்களுண்டு. பண்பாளர்களுண்டு. பலவகைப்பட்டவர்கள். அவர்களில் சிறந்தவர் ஒருவர் கொங்குநாட்டைச்சார்ந்த இராமானந்தசுவாமிகள். இவர்கள் இருபதாம் நூற்ருண்டின் முற்பகுதியில் பழநியில் தண்டபாணிசுவாமிகளிடம் ஞானதீட்சைபெற்றவர். தம் குரு தண்டபாணி சுவாமிகள் நடுநாட்டில் திருவாமாத்தூரில் கௌமார மடத்தை நிறுவி சமயத்தையும் தமிழையும் பரப்பியதுபோன்று இவரும் கொங்குநாட்டில் சிரவணபுரத்தில் கௌமார மடத்தை நிறுவினார். திருமடத்தை அடுத்துச் சுற்றுப்புற ஊர்களில் வாழ்ந்த மக்கள் கொலை, புலை விடுத்து வெண்ணீறும் கண்டிகையும் அணிந்து வேல்பூசை செய்யவைத்தவர். அதன்பயனய் பல அடியார்கள் உருவாயினர். வெள்ளிக்கிழமை தோறும் வருவாராயினர். மடத்தில் தங்கி உபதேசம் பெற்றுத் துறவியாகித் தங்களையும் தங்கள் உடைமைகளையும் கௌமாரமடத்தின் வளர்ச்சிக்கே அர்ப்பணித்தவர்கள் அநேகர். நாதத்தை எழுப்பி இசையில் இறைவனைக்காணும் நல்ல அடியார்களுண்டு. குருவேதுணை, என்கடன் பணிசெய்து கிடப்பதே எனத் தொண்டுள்ளம் படைத்தவர்களும் உண்டு. அட்டிற்பணி முதல் ஆலயப்பணிவரை எல்லாம் அடியவர்களே. இத்தகைய அடியவர்களில் சாதி வேறுபாடில்லை. இத்திருமடத்தில் பணிபுரிபவர்கள் எல்லோரும் தமிழில் வல்லவர்கள். முருகன் தமிழ்க் கடவுள் இல்லையா? அவனையே தலைவனகக்கொண்டவர்கள் தமிழில் விற்பன்னர்களாக விளங்குவதில் அதிசயமில்லையே. கொங்குநாட்டின் இருபதாவது நூற்ருண்டுப் பெரும்புலவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள். இவர் இம்மடத்தின் இரண்டாவது மடாதிபதி. நல்ல துறவி. சிரவணபுரத்தின் சுற்றுப்புற ஊர்களிலுள்ள கோயில்களைப் புதுப்பிப்பதிலும், அவற்றிற்குத் தலபுராணம் பாடுவதிலும் வல்லுநர். பல பிரபந்தங்களை

இயற்றியவர். ''பக்தமான்மியம்'' என்ற காவியத்தைப் பாடியவர். இவருடைய அருளாட்சிக் காலத்தில் திருவாமாத்தூர்ப் புலவர் ஏறு செந்தில்நாயகசுவாமிகள் (அருட்டிரு தண்டபாணி சுவாமிகளின் மகனார்) அருந்துணையாக விருந்தனர். இரும்பு காந்தத்துடன் இணைந்தால் அதுவும் காந்தமாவதுபோன்று கந்தசாமிசுவாமிகளைச் சேர்ந்தவர்களும் கவிஞர்களாய்த் திகழ்ந்தனர். கொங்குநாட்டில் இன்று 'கவியரசு' எனப் போற்றப்படும் கு. நடேசகவுண்டர் இவர் மாணவராவார்.

இத்திருமடத்தில் உருவாகிய தவச்சீலர்களே, மூன்று தலைமுறையாகப் பேரூர்ச் சாந்தலிங்கரின் திருமடத்துத் தலைவர்களாய் வருகின்றனர். கௌமார மடத்துத் தலைவராய் விளங்குபவர்கள் தவத்திரு சுந்தர சுவாமிகள். இவர் சின்னஞ்சிறு வயதிலேயே திருமடத்தை யண்டிக் குருகுல முறைப்படி பாடம்பயின்று புலமைபெற்றுத் துறவியானவர். தமிழுடன் கௌமாரத்தை வளர்த்து வருகிறார். தமிழ்நாடு தெய்வீகப் பேரவையில் அங்கம் வகிப்பவர். இசையோடு பேசுவதில்—இனிய தமிழில் எடுத்துரைப்பதில் பேச்சுக்கலையில் வல்லுநர். அதனால் இதயங்கவர்கிறார். இவரது ஆட்சிக்காலமாகிய தற்பொழுது தண்டபாணி சுவாமிகளின் பெயரர் திருவாமாத்தூர் தவத்திரு முருகதாச சுவாமிகள் துணையாயுள்ளனர். ஆமாத்தூரிலுள்ள அருள் ஞானக்குரவர் சந்ததியாரும் அதன் வழிவந்த இத்திருமடத்துத் தலைவர் மரபினரும் சங்கிலித்தொடர் போலப் பின்னிப்பின்னி இணைந்துவருவது குறிப்பிடத்தக்கது.

இத்திருமடத்தின் கிளைகளாய்க் கொங்கு நாட்டிற் பரவியுள்ள கௌமார நிலையங்கள்; கீரணம்—கௌமார சபை, வெள்ளக்கிணறு—ஞானமணிப்பண்ணை இராமானந்த ஆசிரமம், முதலி பாளையம்—இராமானந்தமடாலயம், போன்றவை.

இத்திருமடத்திற்கு வெள்ளிக்கிழமை தோறும் பக்கத்துக் கிராமங்களிலிருந்து மக்கள் மதியம் பன்னிரண்டு மணிக்கு வந்து பஜனைபாடுகின்றனர். மாலை கௌமார நூல்கள் ஆராயப்படுகின்றன. இராமானந்த சுவாமிகளின் பெயரால் ஆரம்பிக்கப்பெற்ற உயர் தொடக்கப்பள்ளி உயர்நிலைப்பள்ளியாக உயர்ந்துள்ளது. அது மாணவர்களின் அக இருளைப் போக்கி கல்வி ஞான ஒளியைப் பரப்புகின்றது. இக் கௌமார மடத்தின் அங்கங்களாய்த் திகழ்வன தண்டபாணி சுவாமிகள் கோயிலும், சபாலயமும், கனகசபையுமாகும். தண்டபாணி கோயில் இராமானந்த சுவாமிகளால் கட்டப்பட்டது. சபாலயத்தில் காணப்படும் இராமானந்தர் திருவுருவம் கந்தசாமி சுவாமிகளால் நிறுவப்பெற்றது. சபாலயம் இராமானந்தசுவாமிகளும், கந்தசாமி சுவாமிகளும் சமாதி கொண்டிருக்கும் புனிதமான இடம் சபாலயத்திலிருந்து தண்டபாணி ஆலயத்திற்குச் சற்றுதூரம் நடக்கவேண்டும். செல்லும்வழியில் இடப்புறத்தில் கனகசபை தெரியும். அக்கட்டிடத்தில்தான் இராமானந்த சுவாமிகள் தம் குருவின் திருவுருவை வைத்துப் பூசித்துப் போற்றினர். புனிதமான இடம். தண்டபாணி சுவாமி ஆலயத்தின் பின்புறமுள்ள சித்திமகோற்கட விநாயகரை வணங்கி வலம்வந்துதான் உள் நுழைய வேண்டும். மூலவர் தண்டூன்றிய கோலத்தில் காட்சியளித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். தண்டபாணித் தெய்வத்துக்கு வேட்டுவ அலங்காரம் செய்து அவருடைய வீரத்தை எண்ணிப் பார்ப்பதுடன், அரச அலங்காரம் செய்து அவருடைய கம்பீரம்கண்டு மகிழ்வதுடன், பெண் அலங்காரம் செய்து தாய்மையையும் உய்த்து உணர்கிறார்கள். அவருடைய இருபாலும் அழகிய நாயகியம்மையும் அழகிய நாயகரும் திருமேனி கொண்டுள்ளார்கள். உற்சவரின் பெயர் குமரகுருபரர். இவர் வரப்பிரசாதர். கோயில்கள் அண்மையில் முழுதும் திருப்பணி செய்யப் பெற்றுள்ளன.



சிரவை, தண்டபாணி சுவாமி—ராஜ அலங்காரம்

கனகசபை, அம்மன் ஆலயம், தண்டபாணி ஆலயம் ஆகியவற்றிற் காணும் குகைகள் தனித்திருந்து தவமியற்ற ஏற்பட்டவை. இந்த ஆலயத்தின் சுற்றுப் புறச் சூழ்நிலையில் குயில் கூவுதலையும், மயில் அகவுதலையுந்தான் கேட்கமுடியுமே தவிர மற்ற ஒலி காதில் விழாது. மனம் ஒருநிலைப்பட அமைதியான இடம். நீங்களும் ஒருமுறை சென்றுபார்த்து வாருங்கள். இருக்கும் இடம் தெரியவேண்டாமா? இவ்வூருக்கு கோயமுத்தூரிலிருந்து சத்தியமங்கலம் போகும் ரோட்டில் சுமார் 6 கிலோ மீட்டர் தூரத்தில் கணபதியையடுத்துள்ள அத்திப்பாளையம் பிரிவில் பிரிந்துசெல்லவேண்டும். அப்பிரிவிலிருந்து இரண்டுமைல் நடக்கவேண்டும். அவ்வளவுதான்!

முற்றும்.

வாழ்க அந்தணர்
வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல்
வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம்
அரன்நாமமே
சூழ்க வையகமும்
துயர்தீர்கவே.

ஆறிரு தடந்தோள் வாழ்க
அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறு செய்தனிவேல் வாழ்க
குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏரிய மஞ்ஞை வாழ்க
யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க
வாழ்க சீரடியார் எல்லாம்.

# தமிழ் உறவு வெளியீடுகள்

## நாவல்கள்

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| தரங்கிணி | (2-ஆம் பதிப்பு) | 3 | 00 |
| | நாரண துரைக்கண்ணன் | | |
| தும்பைப்பூ | | 3 | 00 |
| | ஷை | | |
| அருளின் ஒளி | | 2 | 00 |
| | லட்சுமி சுப்பிரமணியன் | | |
| பொன்விளையும் நாடு | | 7 | 00 |
| | ஷை | | |
| அமுதமாகி வருக | | 8 | 00 |
| | ராஜம் கிருஷ்ணன் | | |
| நிழற் கோலம் | | 6 | 00 |
| | ஷை | | |
| வளைக்கரம் | | (அச்சில்) | |
| | ஷை | | |
| அன்பின் சிதறல் | | 3 | 50 |
| | கோமகள் | | |
| தேவதாசி | | 3 | 50 |
| | சரஸ்வதி ராம்நாத் | | |
| தாழ்வுற்ற நெஞ்சம் | | 4 | 00 |
| | கே. ஜயலட்சுமி | | |
| பாவைப் பரிசு | | 2 | 50 |
| | மா. ரா. இளங்கோவன் | | |
| அமைதி எங்கே ? | | 5 | 00 |
| | பூவாளூர் சுந்தரராமன் | | |
| பல்லவ திலகம் | | (அச்சில்) | |
| | ஆர்வி | | |
| அலைக்கரங்கள் | | (அச்சில்) | |
| | சாண்டில்யன் | | |
| உழைக்கும் கரங்கள் | | 4 | 20 |
| | டி. என். சுகி சுப்பிரமணியம் | | |
| யசோதரா | | (அச்சில்) | |
| | ரா. வீழிநாதன் | | |

## குறுநாவல்கள்

ரூ. பை

மின்னல் 3 00
மாயாவி

மனக்கண் 3 00
நா. பார்த்தசாரதி

சிவப்பு விளக்கு 3 00
ஆர்வி

அன்னை மூவர் 2 00
கோமதி சுப்பிரமணியம்

சோதனையின் முடிவு 3 60
ஆர். சூடாமணி

## சிறுகதைத் தொகுப்புகள்

சகோதரர் அன்றோ (2-ஆம் பதிப்பு) 2 50
அகிலன்

ஒருவேளைச் சோறு 3 00
ஷை

ஆயர்பாடி 3 00
க. சோமசுந்தரம்

கதைக்கனிகள் 1963 5 00
ஷை 1964 (அச்சில்)

கதம்பச் சரம் சிரித்தது 3 60
து. ரா.

## சிறுவர் இலக்கியம்

சந்திரனுக்குச் செல்வோம் 2 00
கல்வி கோபாலகிருஷ்ணன்

சுண்டுவிரல் சீமா 5 00
ஷை

மகன் புகழ் 3 75
பூவண்ணன்

வாமன் அருள் 4 00
நெ. சி. தெய்வசிகாமணி

சின்னஞ்சிறு வயதில் காந்தித்தாத்தா
பரிசுப் பதிப்பு 1 00
மலிவுப் பதிப்பு 0 50
பி. இ. பாலகிருஷ்ணன்

இந்நூலாசிரியரின் முதற் படைப்பு

# ஸ்ரீ காசி வழித்துணை விளக்கம்

*(மயிலம் பொம்மபுர ஆதீன வெளியீடு.)*

தமிழில் எத்தனையோ இலக்கியத் துறைகள் வளர்ந்துள்ளன. வளரவேண்டிய அளவுக்கு வளராத ஒரு துறை உண்டு என்றால் அது பயண இலக்கியமாகும். அத்தகைய இலக்கிய நெடுஞ்சாலைக்கு வாய்த்ததொரு மைல்கல் இந்தப் புத்தகம். ஒரு பொது அறிவு நூலாக அமையும் அளவுக்கு அந்தந்த நகர்களைப் பற்றியும் ஆங்காங்கு தாம் கண்ட இடங்களைப் பற்றியும் நடந்த நிகழ்ச்சிகளைக் குறித்தும் அளவோடு தெளிவாக அருமைமிக எழுதியிருக்கிறார். அங்கங்கே பொருத்தமான பாடல்கள் பலவற்றையும் கொடுத்து ஓர் இலக்கிய அந்தஸ்தையும் தம் நூலுக்கு உண்டாக்கிக் கொண்டிருக்கிறார். பாடல்கள் அளவுக்கு மிஞ்சாமல் இருப்பது நூலுக்கு வெற்றியாகிறது. மொத்தத்தில் தமிழ்நாடு ஒப்பற்ற நூல் பெற்றது.

—'தினமணி', சென்னை.

17—12—65

காசிக்கு யாத்திரை போவதுபற்றி எத்தனையோ புத்தகங்கள் வந்திருக்கின்றன. ஆனால் இவை அத்தனையிலும் தனிச் சிறப்புப் பெற்று விளங்குவது "ஸ்ரீ காசி வழித்துணை விளக்கம்" என்ற இந்நூல்.

—'தினச்சுடர்', பங்களூர்.

1—2—66

Sivagalai M. Subbiah, has shown his exemplary skill in literary field. He has written in Tamil a book on travelogue called "SRI KASI VAZHITHUNAI VILAKKAM". Based on his recent all India tour of the pilgrim centres in India and written in chaste Tamil it gives such a vivid picture of the places, that one feels he is also travelling with the author and sharing his experiences. It has two distinct features viz., the spirit of national integration and a harmonious blend of all sects of religion. It is a veritable treatise to the Tamil knowing public and if it could be translated in English it would serve a larger circle in the country. We are proud of our distinguished comrade and wish him greater success in the field in days to come.

R. M. S. Worker, New Delhi. September, 1966.

For further particulars regarding the Kasi Vazhithunai Vilakkam, kindly see the

"BOOK REVEIW" of

—HINDU, dated 12th June 66.